கழக வெளியீடு - ககூகூ

சங்க இலக்கிய

# இன்கவித் திரட்டு

(இரண்டாம் பாகம்)

✻

கழகப் புலவர்

இளவழகனார்

எழுதிய

விளக்கங்களுடன்.

✻

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்

திருநெல்வேலி சென்னை

தாரண - மார்கழி

# பதிப்புரை



இந்நூல், "சங்க இலக்கிய இன்கவித் திரட்டு" இரண்டாம் பாகமாகும். முதற்பாகம் நான்காண்டுகளுக்குமுன் வெளி வந்தது. தமிழாசிரியர்களாலும் அறிஞர் அன்பர்களாலும் அந் நூல் விரைவாக விரும்பி ஏற்கப்பெற்றது. மேலும், அந் நூலைப் போற் பல தொகுதிகள் அடுத்தடுத்து வெளிவரல் வேண்டு மென்று பலப்பலர் நேரிலும் எழுத்திலுந் தெரிவித்தனர், தெரி வித்துவருகின்றனர்.

தமிழ் நாடு இப்போது தமிழ் வேட்கையில் விஞ்சி நிற்கின் றது; வேட்கை வேட்டமாகவும் மாறிப் பேருணர்ச்சியிற் பாய்ந்து செல்கின்றது. இந் நிலையிற் 'சங்கத தமிழ்' தக்க கலங்கரை விளக்கமாய்த் தொலைவில் நின்று ஒளி மிளிர்ந்து தமிழ் மக்களைக் கரையேற்றி உய்வித்துவருகின்றது.

திருந்திய தமிழொளி, கருத்தொளி, சங்க இலக்கியத்தி லிருந்தே மின்னி வருகின்றன; ஆழ்ந்த அழகிய மொழியறிவு கலையறிவு, எளிய வாழ்க்கை, விரிந்த மனப்பான்மை, உயர்ந்த நாகரிகம், செம்மை நலம் என்பன சங்க இலக்கியத்தின் பேரொளிக் கதிர்கள்; உள்ளன்புடன் அக் கதிர்களில் திளைத்து வருவோர், பசி பிணி பகை என்னும் வாழ்க்கை யிடையூறுகள் நீங்கி வசியும் வளனுஞ் சுரந்து, இனிய தமிழியல் வாழ்வில் வயங்குவர்; புகழும் அருளும் அவர்களைப் பொருந்தி நிழலாடும்.

ஆதலால், சங்க இலக்கியத்தைப் பற்றிய ஆராய்சசி விளக்க நூல்கள், மேன்மேலும் வெளிவருதல் இன்றியமையாததே என்று தோற்றுகின்றது. தமிழ் மக்களின் அன்புதான் எங்கட்கு இச்

நினைவையும் ஊக்கத்தையும் அளிக்கின்றது ; அதனால், 'சங்க இலக்கிய இன்கவித் திரட்டு' இரண்டாம் பாகம் இப்போது வெளி வருகின்றது ; மூன்றாம் பாகமும் அண்மையில் வெளிவர இருக் கின்றது ; முன்பு வெளிவந்த முதற்பாகமும் பின்னுந் திருந்திய பதிப்பாய் அச்சில் இருந்துவருகின்றது. இம் மூன்று பாகங் களையுந் தமிழ் மக்கட்கு ஒருங்கே வழங்கி மகிழும் வாய்ப்பும் இரண்டொரு திங்களிலேயே நேரக்கூடும்.

முன்பு வெளிவந்த பதிப்பைவிட இப்போது வெளிவரு கின்ற இப் பதிப்புக்களில், செய்யுட்களின் தலைப்புவிளக்கம், முறைவைப்பு முதலிய மேலுஞ் சில நன்முறைகள் தழுவப்பட் டிருக்கின்றன முன்னைப் பதிப்பை நோக்கி மகிழ்ந்த நந் தமிழ்ப் பெருமகனார் ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியாரவர்கள், தாம் கழகத்திற்கு வந்திருந்தபோது நேரில் அதனைப் பாராட்டிக் கூறி, "ஒவ்வொரு செய்யுளின் தலைப்பிலும் அச செய்யுளைப் பற்றிய கருத்துவிளக்கம் சுருக்கமாக இருந்தால், முதலில் அதைப் படித்துக்கொண்டு பின்பு செய்யுளைப் படிப்பது எளிதா யிருக்கும் ; படிப்பவர்க்கு அது மனவெழுச்சியுந் தரும்" என்று ஓர் அரிய நல்லுரையினையும் அன்புகூர்ந்து அறிவித்தார்கள். இந் நூலிற் சேர்ககப்பட்டிருக்குஞ் 'செய்யுட்களின் கருத்து விளக்கம்' அவர்கள் கருத்தின்வழி அமைந்ததேயாம். அப் பெருந்தகைக்கு எங்கள் அகமருவிய நன்றியறிதலை மகிழ்சசி யுடன் தெரிவித்துக்கொள்கின்றோம்.

தமிழகம் இத்தகைய இனிய நூற்பதிப்புகட்குத் தக்க ஆதரவு அளித்து வருவதாக! வாழி தமிழ்!!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்



## 6. உணர்வு :



## 7. தெளிவு .

---

# நூலின் பெயர்கள் முதலியன



| | செய்யுள் அல்லது வரிகளின் எண். | இந்நூலின் பக்க எண். |
|---|---|---|
| நோம் என் நெஞ்சே | ௨0௨ | 44 |
| முட்டுவேன்கொல் | ௨அ | 49 |
| உள்ளினென் | ௬௬ | 50 |
| வேம்பின் பைங்காய் | ௧௬௭ | 57 |
| அகவன் மகளே | ௨௩ | 110 |
| அறிகரி பொய்த்தல் | ௧அ௪ | 119 |
| நிழலான்றவிந்த | ௩௫௭ | 122 |
| நல்லுரை இகந்து | ௨௬ | 132 |
| மலையிடையிட்ட | ௨0௩ | 146 |
| அல்குறு பொழுதின் | ௨௭௩ | 161 |
| மயங்குமலர்க | ௩௬௩ | 171 |
| மால்வரை இழிதரும் | ௬௫ | 176 |
| கவவுக்கடுங்குரையள் | ௧௩௨ | 180 |
| சுடர்செல்வானம் | ௨௩௪ | 220 |

(3) ஐங்குறுநூறு

| | | |
|---|---|---|
| இருவெண் பாவை | ௩௭௫ | 6 |
| பெருங்கடற் கரை | ௧௭0 | 118 |

(4) பதிற்றுப்பத்து

| | | |
|---|---|---|
| வானம் பொழுதொடு | அ௬ | 190 |
| சென்மோ பாடினி | அ௭ | 208 |

(5) பரிபாடல்

| | | |
|---|---|---|
| கரையே, கைவண் | ௧௭ : ௧ - ௧௬ | 31 |
| கனைக்கும அதிர்குரல் | ௧௧ : ௭௪ - ௬௨ | 63 |
| கீழோர், வயல் | ௧௭ : ௪0 - ௫௩ | 222 |

(6) கலித்தொகை

| | | |
|---|---|---|
| யாம்நிற்கூறுவ | ௨௫ : ௨௭ - ௬ | 25 |
| எல்லிடை தொட்ட | ௩௨ : ௧ - ௧௩ | 26 |
| தோள்துறந் தருளா | ௧௨அ : ௧ - ௬ | 60 |
| செவ்விய தீவிய | ௧௬ ௧ - ௭ | 62 |
| நெறியறி செறிகுறி | ௩௬ : ௪௭ - ௫௧ | 100 |
| அரிதே தோழி | ௧௩௭ : ௧ - ௭ | 148 |
| இருளிடை என்னுய் | ௩அ : ௧௪ - ௭ | 157 |
| காழர் கடும்புனல் | ௩௬ : ௧ - ௭ | 195 |

| | செய்யுள் அல்லது வரிகளின் எண் | இந்நூலின் பக்க எண். |
|---|---|---|
| வள்ளியோர்ப் படர்ந்து | ௪௭ | 154 |
| கேட்டல் மாத்திரை | ௨௧௬ | 159 |
| என்னைக்கு | ௮௫ | 163 |
| வாயிலோயே | ௨௦௬ | 165 |
| மயங்கிருங்கருவிய | ௩௬௫ | 168 |
| யாழொடும் கொள்ளா | ௯௨ | 174 |
| நல்லவும் தீயவும் | ௧௦௬ | 178 |
| யான்வாழு நாளும் | ௧௭௩ | 182 |
| கிண்கிணி களைந்த | ௭௭ | 185 |
| சுவல் அழுந்த | ௧௩௯ | 188 |
| பொன்னும் துகிரும் | ௨௧௮ | 193 |
| பாரி பாரி | ௧௦௭ | 197 |
| எருமை யன்ன | ௫ | 201 |
| பலர்க்கு நிழலாகி | ௨௨௩ | 203 |
| திரைபொரு முந்நீர் | ௧௫௪ | 205 |
| வென்றி நிலைஇய | ௨௦௨ : ௫ - ௧௩ | 212 |
| வாயாரநின் | ௧௩௬ | 214 |
| இன்று செலினும் | ௧௭௧ | 216 |
| பருதி சூழ்ந்த | ௩௫௮ | 218 |

## IV. பதினெண் கீழ்க்கணக்கு :

**(1) கார் நாற்பது**

| | | |
|---|---|---|
| நசையியார்க் | ௭ | 173 |

**(2) களவழி நாற்பது**

| | | |
|---|---|---|
| ஆர்ப்பெழுந்த | ௧௭ | 34 |
| ஓஒ, உவமன் | ௩௬ | 116 |

**(3) ஐந்திணை எழுபது**

| | | |
|---|---|---|
| தண்நறுங் கோடல் | ௧௭ | 29 |

**(4) திணைமொழி ஐம்பது**

| | | |
|---|---|---|
| மயில்கொல் மட | ௪௧ | 42 |

## சங்க இலக்கிய

# இன்கவித் திரட்டு.

## (இரண்டாம் பாகம்)



## 1. இயற்கை

### கடவுள் திருவுள்ளம்

[தவம் என்பது தூய்மையின் அடையாளம். தூய்மையே ஆற்றலும் அமைதியும் உடையதாயிருக்கும். ஆற்றலாவது, பிறரைத் தாங்கும் ஆதரவும் அவர்க்கு உதவும் அருளுமாகும். இறைவன் இயல்பாகவே அத்தகைய அருந்தவத்தோனுவன். அதனால், அவன் நிழலில் உயிர்கள் இன்புற்று வருகின்றன.]

கண்ணி கார்நறுங் கொன்றை, காமர்
வண்ண மார்பின் தாரும் கொன்றை ;
ஊர்தி வால்வெள் ஏறே, சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வேறு என்ப ;
கறைமிட றணியலும் அணிந்தன்று, அக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே ;
பெண்உரு ஒருதிறன் ஆகின்று, அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் ;
பிறைநுதல் வண்ணம் ஆகின்று, அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே ;
எல்லா உயிர்க்கும் ஏம மாகிய

நீர்அறவு அறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே.
—புறநானூறு, க

அருளுருவாகிய முழுமுதற் கடவுளுடைய திருவுள்ள நிலையும் திருவுருவப் பொலிவும் இவ் வழகிய பாடலில் விளக்கமாக எடுத்துக்காட்டப்படுகின்றன இறைவன் தவ உள்ளமும் தவக்கோலமுமாக இருக்கும் உண்மையும் இதனுள் வருகின்றது.

தவத்தின் அறிகுறியாக அப் பெம்மான் திருமுதுகில் தாழ்சடை தங்கி விளங்குகின்றது. அவன் அவ்வாறு அருந்தவத்தோனாய் இருப்பது, எல்லா உயிர்க்கும் தவ உணர்வும் அதனாற் பாதுகாவலும் உண்டாகும் பொருட்டேயாம். அதற்கும் அடையாளமாக அவன் தனது கையில், எஞ்ஞான்றும் நீர் வற்றுதலறியாத கமண்டலத்தைத் தாங்கியருளுவன்.

அல்லாமலும், அத்தகைய அருந்தவத்தோனுக்குத் தலை மாலையும் மார்பு மாலையும் திருக்கொன்றை மலராகும். ஊர்தியும் கையில் தாங்குந் திருவடையாளக் கொடியும் தூய ஆனேறு ஆகும். அவன் மிடறு பாற்கடலில் எழுந்த நஞ்சினால் அழகு வாய்ந்ததாய், அதனால் அந்தக் கறை செந்தண்மை வாய்ந்த அறவோரால் மகிழ்ந்து பாராட்டப் பெறுகின்றது. அவன் திருவுருவில் ஒரு பாகம் அம்மை வடிவு உள்ளது. அவ் வடிவினைத் தவக்கோலத்தில் இருக்குஞ் சிவபிரான் தனது மறறப பாகத்தில் அடக்கி மறைத்துக்கொள்ளுதலும் உண்டு. பிறைத திங்கள, அவன் திருநுதலை அழகு செய்யவல்லதாய்ப் பதினெண் வகைத் தேவராலும் புகழ்ந்தேத்தவும்படும்.

கொன்றை ஓங்கார இயக்கத்துக்கும், ஏறு மல அழுக்கு நீங்கிய தூய உயிர்க்கும், நஞ்சக் கறை அவன் அவ் வுயிர்கள்பால் வைத்திருக்கும் பேர் அருளுக்கும, அம்மை வடிவு அவனது பல வகைப்பட்ட ஆற்றலுக்கும, பிறை உற்ற நேரத்திற் பிறரைத் தாங்கும் அப்பெருமா

னது ஆதரவுக்கும் ஏற்ற புறக்கோலங்களாய் விளங்குதலின், இறைவனது திருவுள்ள நிலையும் இவைகளால் அறிந்துகொள்ளும்படி யிருக்கின்றது.

இத்தகைய பெரியோன் உயிர்களின்பொருட்டு என்றுந் தவவியல்பினனா யிருத்தலின், அவன் திருவுள்ளமறிந்து அத் திருவுளளத்தின் அருள் நிலையைப் போற்றிக் கொண்டு, உயிர்கள் தூய்மையாய் ஒழுகி நலம் பெறுதல் வேண்டும்

**குறிப்புரை :** கண்ணி - தலை மாலை. கார் நறு கொன்றை - கார காலத்தில் மலரும் உயர்ந்த கொன்றை மலர்; கொன்றை மலரால் ஆன மாலை என்க. காமர் வண்ணம் - விரும்பத்தகுந்த அழகினையுடைய. தாரும் - மார்பில் அணியும் மாலையும். வால் வெள் - தூய வெண்ணிறமான. சிறந்த - தலைமையான. கறை மிடறு அணியலும் அணிந்தன்று - நச்சுக் கறையானது பெருமான் திருககழுத்தை அழகு செய்தலுஞ் செய்தது. கறை - கறுப்பு நிறம். அணிநதன்று - அணிந்தது; அதாவது, அழகு செய்தது. அழகு செய்தலுஞ் செய்தது என்பதும் அழகு செய்தது என்பதும் ஒன்றேயாம். 'உண்டலும் உண்டேன்' 'இருத்தலும் இருந்தேன்' என்னும் வழக்குகளைப் போல வந்தது. நவில் - பல காலும் பயிலுகின்ற. அந்தணர் - அந்தணர்களால். நுவலவும் படும் - குறித்துப் புகழவும்படும். ஒரு திறன் - ஒரு கூறு. ஆகின்று - ஆகியது. அவ வுரு - அப் பெண்ணுருவினை. கரக்கினும் கரக்கும் - மறைத்தாலும் மறைததுக்கொள்ளுவான். பிறை- பிறைத் திங்களானது. நுதல் வண்ணமாகின்று - நுதலுக்கு அழகாகியது. நுதல் - நெற்றி. பதினெண் கணனும் - தேவர் பதினெண் கணத்தவராலும். கணன் - இனம். எல்லா உயிர்க்கும் - எவ்வகைப்பட்ட உயிர்க்கும். ஏமம் ஆகிய நீர் - பாது காப்புச் செய்வதாகிய குளிர்ந்த நீர். அறவு அறியா - அற்றுப் போதலை அறியாத. நீர் என்றும் வற்றுதலில்லாமல் இருக்கும் கமண்டலம் என்றபடி. கரகத்து - கமண்டலத்தையுடைய. தாழ் சடைப் பொலிந்த - தாழ்ந்த சடையினால் விளங்கிய. அருந் தவத்தோற்கு - அருந்தவத்தோனாகிய சிவபிரார்க்கு. 'கமண்டலத்'தையுடைய அருந்தவத்தோற்குக் கண்ணி கொன்றை, ஊர்தி ஏறு, கறை மிடறு அணிந்தன்று, பெண்ணுரு ஒரு திறனாகின்று, பிறை நுதல் வண்ணமாகின்று' என்று கூட்டி உரைத்துக் கொள்ள வேண்டும். (க)

## வாழ்க்கை யெளிமை

[மக்கள் தமது வாழ்க்கையை எளிதாக்கிக்கொள்ள வழி தெரிந்திருக்கவேண்டும். இதற்கான தெளிவினைச் சான்றோர் நமக்கு ஒன்று கொடுத்திருக்கின்றனர். கடைப்பிடிப்பதனாலன்றோ பயனுண்டாகும்! அம்முறையில் நடந்துகொள்வதனால் வாழ்க்கை சுமை குறைந்து சுவையோடு நடைபெறுகின்றது. பல இடர்கள் தாமே விலகுகின்றன.]

வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையன் படர்குவி ராயின்,
கேள்அவன் நிலையே, கெடுகநின் அவலம் ;
அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக்
கைப்பொருள் வௌவும் களவேர் வாழ்க்கைக்
கொடியோர் இன்றுஅவன் கடியுடை வியன்புலம் ;
உருமும் உரறாது, அரவும் தப்பா ;
காட்டு மாவும் உறுகண் செய்யா.

—பெரும்பாணாற்றுப்படை, ௩௫-௪௩.

வாழ்க்கையில் நேரும் முயற்சிகளை எளிமையாக்கிக் கொள்வதற்குப் பலரும் விரும்புகின்றார்கள், பழைய காலத்திலிருந்தே இவ்விருப்பம தொடர்ந்து வருகின்றது. முயற்சிகளைக் குறைத்துப் பயனை மிகுதியாகவும் இனிதாகவும் பெறுவதற்கு வழி அவரவரிடமே உள்ளது. மிகப் பழைய காலத்திலேயே இம் மெய்வழியைச் சான்றோர் கண்டு, மற்றவர்க்கும் அறிவுறுத்தியுள்ளனர். அதன் அருமையை மதித்துப் பின்பற்றுகின்றவர்க்கு வாழ்க்கையினிமை உண்டாகும்! முயற்சிகளும் சுமைகளுங் குறைந்து வாழ்க்கை எளிமை நிலைபெறும. அந்த வழி இச் செய்யுட் பகுதியில் உள்ளது.

மக்களிற் கொடியோரால் ஊறு நேராதபடி தம்மையும் தம்மைச் சேர்ந்தவர்களையும் சொத்துக்களையும் பாது

காப்பாக வைத்துக்கொள்ளும்பொருட்டும், மக்களே யல்லாமல் புலி, பாம்பு முதலிய கொடிய சிற்றுயிர்களால் தீங்கு நேராதபடி காத்துக்கொள்ளும்பொருட்டும், இங்ஙனம் உயிர் வகைகளே யன்றி, இடி முதலிய ஏனை இயற்கை நிகழ்ச்சிகளால் இன்னல் நேராதபடி விழிப்பாக இருந்துகொள்ளும்பொருட்டும் வாழ்க்கையில் எவ்வளவு முயற்சிகளும் செலவுகளும் வீண் வேலைகளும் உழைப்பும் உண்டாகின்றன? வாழ்க்கையை இங்ஙனஞ் சுமையாக்கிக்கொண்டு, வேலைகளை ஓய்வில்லாதபடி பெருக்கிக்கொண்டு, அதனால் அளவற்ற எதிர்ப்புகளுக்கும் குழப்பங்களுக்கும் இடர்களுக்கும் ஆளாகி முடிவில் ஒரு பயனுமின்றி மெலிந்து வருந்தி மாய்ந்துபோவது நன்றாகுமா? கொடிய மக்களும், கொடிய சிற்றுயிர்களும், இயற்கைப் பொருள்களின் வன்மையும், யார்க்கும் ஊறு விளைக்காமல் தம் வலி மடங்கியிருப்பதற்கு, மக்கள் அறவழியில் ஒழுகுதலே இன்றியமையாததென்று இச் செய்யுள் அவ் வழியினை நன்கு விளக்கியிருக்கின்றது. மக்கள் இவ் வொன்றில் மட்டுங் கருத்துள்ளவர்களாயிருந்தால், வாழ்க்கையில் அவர்களுக்கு எவ்வளவோ சுமைகள் குறைந்து எளிமை இனிமைகள் உண்டாய்விடும். பொதுவாக மக்களுக்கே இது முறையாகுமானால், எவ்வளவோ பெரும் பொறுப்புக்களை ஏற்று நிற்கும் அரசனுக்கு, அவன் தன் அலுவலை எளிதாக்கிக் கொள்ள, இது, எவ்வளவு கட்டாயமாகும்!

காஞ்சிபுரத்தில் முன்பு தொண்டைமான் இளந்திரையன் என்னும் மன்னன் தன் ஆட்சியில் அறம் கடைப்பிடித்து ஆணை செலுத்தி வந்ததனால், வழிப்போக்கர் கூட, கள்வராலும், பாம்பு புலி முதலியவற்றாலும், இடிகளாலும் இடர்ப்படாமல் தத்தம் முயற்சிகள் எளிமையாகி இன்புறுவார்களென்று இச்செய்யுட் பகுதியிலிருந்து தெரிகின்றது.

'இன்னாதற்கு இது காரணம்' என்று அறிந்து வாழ்க்கை நடத்தினாலன்றோ எல்லாம் எளிமை இனி

மைகளாய் முடியும்! கைசலிக்க உமி குத்துதலால் யாது பயன்?

குறிப்புரை: வலம்புரி யன்ன - வலம்புரிச சங்கு போன்ற. வசை நீங்கு சிறப்பின் - பழி நீங்கிய தலைமையினையும். அல்லது. கடிந்த - தீது நீக்கிய. செங்கோல் - நல் ஆட்சியையும். பல் வேல் - பல படைக்கலங்களையும் உடைய. திரையன் - தொண்டைமான் இளந்திரையனிடம். படர்குவிராயின் - நீவிர் செல்குவிரானல். கெடுக நின் அவலம் - நின் வறுமைத் துன்பம் கெடுவதாக. நிலை - பெருமையை. அத்தம் - வழியில். செல்வோர்-செல்லும் வழிப்போக்கரை. களவு ஏர் வாழ்ககை என்றது, தமது வாழ்க்கைக்குக் களவையே ஒரு முயற்சியாகக் கொண்ட என்றபடி. ஏர் - உழவு; இஙகே, வாழ்க்கை முயற்சி என்னுங கருத்தில் நின்றது. இன்று - இல்லை. கடி - காவலை. வியன் புலம் - அகன்ற நாட்டில். உருமும் - இடியும். உராறு - இடிக காது. அரவும் - பாம்புகளும். தப்பா - தப்புசசெய்யா; அதாவது, தீங்கு செய்யா. காட்டு மாவும் - புலி முதலிய காட்டு விலங்குகளும். உறுகண் செய்யா - துன்பம் செய்யமாட்டா (உ)

## அஃறிணைப் பொருள்களின் பயன்

[வாழ்க்கைக்கு அஃறிணைப்பொருள்கள் கட்டாயமாய் இருக்கின்றன. வாழ்க்கை என்பது, உயிராற்றல்களை மிகுத்துக்கொள்வது. அங்ஙனமானல், அஃறிணைப் பொருள்களின் உதவியால் உயர்திணைப் பொருள்களாகிய மக்கள் தம் உயிராறறல்களை மிகுத்துக்கொள்ள இடமிருக்கின்றதென்று தெரிகின்றது. இயற்கையின் அமைப்பே அப்படி.]

இதுவென் பாவை; பாவை இதுவென்
அலமரும் நோக்கின் அலம்வரு சுடர்நுதற்
பைங்கிளி எடுத்த பைங்கிளி என்றிவை
காண்டொறும் காண்டொறும் கலங்க
நீங்கின ளோஎன் பூங்க ணோளே.

—ஐங்குறுநூறு, ௩எ௫.

அறிவுடைய பொருள்கள் அறிவில்லாத பொருள்கள் என்று உலகம் இரண்டு வகையாகப் பிரிந்து தெரிகின்றன.

இவை ஒன்றற்கொன்று ஏதேனும் தொடர்புடையதாகவே இருக்கவேண்டும். பயனை உணர்வது அறிவுடைய பொருள்களுக்குத்தான் முடியும். ஆதலால், அறிவுடைய பொருள்களுக்கு அறிவில்லாத பொருள்கள் ஏதோ உதவியா யிருக்கின்றன என்று இதனால் அறிந்துகொள்ளலாம்.

அறிவுடைய பொருள்களில் மக்கள் மட்டும் பெரும்பாலும் சிறந்த அறிவுடையவர்களாக விளங்குகின்றார்கள். மற்ற விலங்கு பறவை முதலியன அவ்வளவு சிறந்த அறிவு உடையனவாக இல்லை. ஆதலால், ஆசிரியர்கள் மக்களை மட்டும் 'உயர் திணை' என்று உயர்த்திக் கூறினார்கள். மற்றச் சிற்றுயிர்களையும் அறியாமைப் பொருள்களையும் ஒன்றாகச் சேர்த்து 'அஃறிணை' என்று கூறினார்கள். உயர்திணை யென்று கருதப்படும் மக்களுக்கு, ஏனை அஃறிணைப் பொருளகளெல்லாம் பல வகையிலும் மிக்க உதவியாயிருக்கின்றன என்று நாம் இப்போது துணிந்து கொள்ளலாம்.

மக்கள் பெறவேண்டிய பெரும் பயன்கள் எவை? பிழிநது கூறினால், அவர்கள், அறிவு அன்பு அருள் விளக்கங்களாகிய உயிராற்றலைப் பெறவேண்டும் என்று கூறலாம். அங்ஙனமானால், இந்த உயிருணர்வுகளின் விளக்கத்துக்குப் பயன்படுவதே ஏனை அஃறிணைப் பொருள்களின் உதவி என்று நாம் தீர்மானிததுக்கொள்ளலாம். சிற்றுயிர்களாலும் உயிரற்ற பண்டங்களாலும் மக்கட்கு இங்ஙனம் அன்பு முதலிய உணர்வுகள் பெருகுவதற்கு வாயிலிருத்தலை அவர்கள் அறிந்து வாழ்க்கை நடததுதல் நன்று.

குழந்தைகள் விளையாடுவதற்குப் பாவைகளும் கிளிகளும் எவ்வளவு உதவியாயிருக்கின்றன. மங்கைப் பருவத்து மகளிரும் இவற்றை எவ்வளவு மகிழ்ச்சியோடு வைத்து விளையாடிக் களிப்படைகின்றார்கள். பாவையாகிய உயிரற்ற பொருளும், கிளிகளாகிய சிற்றுயிர்களும்

அவர்களுக்கு எவ்வளவு கிளர்ச்சியையும் அன்பு முதலிய உணர்வுகளையும் தருகின்றன. இந்த அஃறிணைப் பொருள்களால் அவர்கள் வாழ்க்கையே அவ்வப்போதும் மலர்ந்து தோன்றுகின்றதன்றோ!

அதுமட்டுமோ, அம் மங்கைப் பருவத்துப் பெண்கள் பின்பொருகால் தம் கணவர் இல்லத்துக்குச் சென்றுவிட்டால், அவர்கள் விளையாடி வைத்துவிட்டுப்போன பாவைகளும் கிளிகளும், தாய் செவிலி முதலியவர்களுக்கு எவ்வளவு உருக்கமான எண்ணங்களை எழுப்பிவிடுகின்றன. அன்பும், உருக்கமும், கனிவும் வாழ்க்கையிற் பெறத்தக்க விழுமிய பேறுகளல்லவா ?

அப்படித்தான் ஒரு பெண் தன் தலைவனுடன் உடன்போக்கில் அவன் இல்லத்துக்குச் சென்றுவிட்டாள். செவிலி, தாய் முதலியவர்கள் பெண்ணின் கருத்துக்கு இணங்காவிட்டால் அவள் தனது கற்பைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டி, யாருக்குஞ் சொல்லாமல் தன் தலைவனோடு கூடி அவன் இல்லத்துக்குச் சென்றுவிட நேரும். அப்படி உடன் செல்வதை 'உடன் போக்கு' என்று சொல்லுவார்கள். அப்படி அவள் சென்றுவிட்டது தெரிந்து, செவிலி முதலியோர் அண்டை அயல்களில் தேடினர். அந்தத் தலைவன் தலைவியர் அகப்படவில்லை. பெண்ணைப் பெற்ற தாய், தன் பெண் முன்பு விளையாடிக் கொண்டிருந்த பாவையையும் கிளியையும் பார்த்து வருந்திப் பின் வருமாறு இரங்கிக் கூறுகின்றாள் :

'என் மகள் இந்தப் பாவையைப் பார்க்க நேர்ந்தால், 'இது என் பாவை; இது என் பாவை' என்று அவள் எவ்வளவு பதைத்துக்கொண்டு கூறுவாள்; அப்போது அவளுடைய ஒளி பொருந்திய நெற்றிதான் எவ்வளவு கலக்கமாய்த் தோன்றும்; 'இது என் பைங்கிளியாகிய மகள் எடுத்து விளையாடிய பைங்கிளியன்றோ' என்றெல்லாம் சொல்லி, 'இவைகளைப் பார்க்குந்தோறும் பார்க்குந்தோறும் நான் கலங்கி வருந்தும்படி என்னைவிட்டு நீங்கினளோ என் பூங்கண்ணாள் ?'

தாய்க்குப் பாவையுங் கிளியும் எவ்வளவு உருக்க நினைவை எழுப்பியிருக்கின்றன! அஃறிணைப் பொருள்க ளால் மக்கட்கு எவ்வளவோ உயிர் விளக்கங்கள் உண்டு.

**குறிப்புரை:** 'இது என் பாவை; பாவை இது; என்று அல மரும் நோக்கின்' என்று பகுத்துப் பொருள்செய்துகொள்ள வேண்டும். பாவை இது என் - பாவை இது என. அலமரும் - சுழலும்; இங்கே பதைக்கும் என்றபடி. அலம்வரும் சுடர் நுதல் - அப்போது கலங்கித் தோன்றும் அவள் ஒளி நெற்றி. பைங்கிளி - பைங்கிளிபோன்ற என் மகள். என்று - என்று நான் சொல்லி. பூங் கண்ணோள் - பூவைப்போன்ற கண்ணை யுடைய என் மகள். (௫)

## உள்ளமும் உடம்பும்

[காதலர் கூட்டுறவு இயற்கை. அதற்கு நன்முகமான காரணம் இருக்கவேண்டும். மக்கட்பேறு மட்டும் அதன் காரண மாகாது. அது, காதலர் தம் உயிர்க்கு நேர்முகமாக வருவித் துக்கொள்ளும் நன்மையாகாது. நேர்முகமாக வருவித்துக் கொள்வது, இருவருள்ளத்திலும் நல்லியல்புகளைக் கிளறச் செய்துகொள்ளுதலாகும். இதனால், காதலர் உள்ளம் அமிழ் தாகின்றது. உடம்பும் ஒளி பெறுகின்றது.]

ஊருண் கேணி உண்துறைத் தொக்க
பாசி யற்றே பசலை, காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே.

—குறுந்தொகை, ௩௯௯.

நீரில் பாசி இருப்பது இயல்பு. உண்ணும் நீர் பொருந்திய நீர் நிலைகளில் பாசி இருந்தால், ஊரார் அதனை நீக்கி உண்ணவேண்டியிருக்கும். மக்கள் நீர்த்துறையி லிருந்து நீங்கினால், பாசி மீண்டும் நீரை மூடிக்கொள்ளும்.

பெண்கள் தம் தலைவரின் பிரிவாற்றாமையால் வருந் தும்போது, அவ் வருத்தத்தின் காரணமாக அவர்கள் உடம்பு நிறம் வேறுபட்டுத் தோன்றும். வேறுபட்ட

அந் நிறம், பசலை எனப்படும். அது நீர்ப் பாசியை ஒத்தது. காதலர் தம் மாதரைத் தீண்டி இன்பம நுகருந் தோறும் அந்தப் பசலை விலகியிருந்து, அவர் பிரியுங் காலங்களில் மீண்டும் அம் மாதருடம்பிற் பரவிவிடும்; இத னாலேதான், பாசியை ஒத்தது பசலை என்று சொல்ல வேண்டியிருக்கின்றது.

மாதர்கள் எவ்வளவுக் கெவ்வளவு மகிழ்ச்சியாயிருக் கின்றார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அவர்கள் உடம்பும் ஒளிபெறும். காதலர் எஞ்ஞான்றும அவருடன் கூடி நல்லியல்புகளால் அளவளாவி யிருப்பாராஞல், பசலை அவர்பால் இருக்குமிடந் தெரியாமல் முற்றும நீங்கியிருக் கும். உள்ளத்தின் மகிழ்ச்சிக்கும் உடம்பின் நலத்திற்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பிருக்கின்றது! உள்ளம் நஞ்சாஞல் உடமபும நஞ்சாகின்றது. உள்ளம் அமிழ் தாஞல் உடம்பும் அமிழ்தாகின்றது; நற்பண்புகள், உள ளத்தை அமிழ்தாக்கும்; அதஞல் உடமபும் நலமாகும். காதலர் கூட்டத்தால் நற்பண்புகள கிளரப்பெற்று உள் ளம் அமிழ்தாகின்றது. அப்புறம், அழகுக்கும நலத்திற் கும் என்ன குறை?

தலைவன் பிரிவில், தலைவி தனது நிலையைத் தன் தோழிக்குக் கூறும முறையில் இக் கருத்துக்கள் இச் செய்யுளில நிறைந்து வநதிருக்கின்றன.

**குறிப்புரை:** ஊர் - ஊரார். உண் - உண்ணும் நீர் பொருந் திய. கேணி - நீர்நிலையின். உண் துறை - இறஙகி நீருண்ணுந் துறையில். தொக்க - கூடியிருக்கின்ற. பாசி அற்று பசலை - பாசியை ஒத்தது பசலை. ஏனென்றால், அதற்குக் காரணம் பின் வரிகளிற் கூறப்படுகின்றன. தொடுவுழி தொடுவுழி - தொடும் போது தொடும்போது; அதாவது, தொடுந்தோறும் என்றபடி. விடுவுழி விடுவுழி - பிரியுந்தோறும். பரத்தலான்-உடம்பில் பரவுத லால். 'பரத்தலான், உண் துறைத் தொக்க பாசி யற்றே பசலை' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (ச

## இயற்கைக் காதல்

[ஆண் பெண் சேர்க்கை, வெறும் உடல் தொடர்பன்று; அது, உயிரின் தொடர்பு. பிறவிதோறும் தொடர்ந்து இயைந்து வருவது. இயற்கை யன்புணர்வே அதனைக் கூட்டும். வேறு மருந்தில்லை; வேறு, தடை செய்யும் மருந்தும் இல்லை. இதனால், உயிர், வாழ்க்கை நிறைவும் முழுமையும் அடைகின்றது. இது மயலன்று. இக் கருத்துக்கள் இச்செய்யுளின் குரல்.]

பார்ப்பன மகனே, பார்ப்பன மகனே,
செம்பூ முருக்கின் நன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே!
எழுதாக் கற்பின் நின்சொல் லுள்ளும்,
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்தும் உண்டோ? மயலோ இதுவே?

—குறுந்தொகை, கடுசு.

பண்டைக்காலத்தில் அரசிளைஞர்களுக்குச் சிறந்த அந்தண் இளைஞர்கள் உற்ற நண்பராயிருந்து விளங்கினார்கள். அந்தண் இளைஞரென்போர், முனிவரர் தவ இருக்கையில் தொண்டு செய்யும் குருகுல மாணவர்களும், முனிவரர் தவப்புதல்வர்களும், இளம் முனிவரருமாவர். இவர்கள் தமது கையில் தண்டு கமண்டலங்கள் ஏந்தியிருப்பர். எழுதாக் கிளவி என்னும் மறைமொழிக் கல்வி கற்றிருப்பர் நோன்பினால் ஒரோவொருகால் சுருங்கிய உணவு கொள்வோராய் விளங்குவர். அங்கங்கும் அரசிளைஞர் கானகத்தில் வேட்டைக்கு வருங் காலங்களில் அவர்களுக்கு இவர்கள் உற்ற நண்பர்களாகி, அரசிளைஞர்களைத் தம் தவ இருக்கையில் இருத்தி வேண்டும் உணவு முதலிய வசதிகள் செய்து அளவளாவுவர். தம் குரவர்க்கும் தவ இருக்கைக்கும் வேண்டிய நன்மைகளையும் அவர்களிடமிருந்து பெறுவர். அரசிளைஞர்களுக்கும் பிறர்க்கும் நல்லறிவுரைகளும் வழங்கி நாட்டில் நற்றொண்டுகள் செய்து வருவர்.

அரசிளைஞர்கள் சில நேரங்களில் தாம் காதலித்த மகளிரை நினைந்து வருந்துதலும் உண்டு. அந்நேரங்களில் இந்த அந்தண நண்பர்கள் 'இதுவென்ன மயக்கம்' என்று அவர்களைக் கண்டித்து ஆறுதல் கூற நேரும். அரசிளைஞர், அதனைச் செவிக்கொள்ளாமல், 'இதுவோ மயல்! அது கிடக்கட்டும்; உங்கள் எழுதாக் கல்வியாகிய மறையில், பிரிந்த காதலரைச் சேர்க்கும் இயல்புடைய மருந்து வகை ஏதாவது கூறியிருக்கின்றதா? இருந்தால், அதைச் சொல்லுங்கள்' என்பர் இப்படி அவர்கள் பேசிக்கொள்ளும் வகையில் இச்செய்யுள் அமைந்திருக்கின்றது.

'கூடிய காதலரை நல்வழியில் உய்த்தற்கு மறைகளில் குறிப்புக்கள் உண்டு. ஆனால், பிறவிதோறும் தம்முட் கூடிவருங் காதலரை, இப் பிறவியிலும் இணையத்துத் தருதற்கு அவற்றில் வழியுண்டா' என்று நண்பரை வினவியபடி. அன்பினால் இயற்கைக் கூட்டுறவாக நேரும் இச் சேர்க்கைக்கு, அன்பன்றி வேறு வழியேது?

**குறிப்புரை:** செம்பூ முருக்கின - சிவந்த பூவையுடைய பலாச மரத்தின். நல் நார் - மெல்லிய பட்டையை. களைந்து - நீக்கிவிட்டு அந் நிலையில் உருவான. தாழ் - கையில் தங்கிய; கமண்டலங்களை உறியில் தூங்க வைத்தலும் உண்டு. கமண்டலத்து - கமண்டலத்தையுடைய. படிவ உண்டி - நோன்பு உணவினைக் கொள்ளும்; பட்டினியால் இடைவிட்டு உண்ணும் உணவினையுடைய என்றபடி. எழுதாக கற்பின் - எழுதாக் கல்வியைக் கற்ற. நின் சொல்லுள்ளும் - நின் மொழிகளிலும். பிரிந்தோர் - முன் பிறவியிற் பிரிந்த காதலரை. (ரு)

## மழை

[உலகத்தில் நிலவும் அறவுணர்விற்கேற்ப மழை பெய்கின்றது; மழை அறத்தின் வடிவம்; அறம், பொருளின்பங்களால் நடைபெறுவது; அற நோக்கத்தோடு பொருளின்பங்களை அடையப்பெற்ற நன்மக்கள் உள்ளத்தில், அறத்தின் வடிவமான மழையைப்பற்றிய நினைவும், அதன் நிகழ்ச்சியில் மகிழ்ச்சியும இயல்பாகவே எழுகின்றன. அற நினைவோடு கூடிய பொருளும இன்பமும, அறமேயாகி மழை வடிவம் பெற்று ஒழுகிப் பலர்க்கும் உதவியாகின்றன.]

தாழிருள் துமிய மின்னித், தண்ணென
வீழுறை இனிய சிதறி, ஊழின்
கடிப்பிகு முரசின் முழங்கி இடித்திடித்துப்,
பெய்தினி வாழியோ பெருவான்! யாமே
செய்வினை முடித்த செம்மல் உள்ளமோடு
இவளின் மேவினம் ஆகிக் குவளைக்
குறுந்தாள் நாள்மலர் நாறும்
நறுமென் கூந்தல் மெல்லணை யேமே.

—குறுந்தொகை, உ௭0.

'பெரிய வானமே! யான் எடுத்த காரியத்தை முடித்துக்கொண்ட நிறைவான உள்ளத்தோடு ஊர் திரும்பி, என் காதலியாகிய இவளோடு கலந்துகொண்டேன்; இனி நீ மின்னி, விரும்பத்தகுந்த இனிய துளி சிதறி, முழங்கி இடித்திடித்துப் பெய்து வாழ்வாயாக!' என்று தலைவன் கூறுகின்ற முறையில் இச் செய்யுள் வந்திருக்கின்றது.

இல்லறம் நிகழ்த்தும் கணவன்மார், பெரும்பாலும் வெயிற்காலங்களில் வெளிநாடுகட்குச் சென்று, 'பொருள் முயற்சி முதலிய காரியங்களை முடித்து, மழை காலத்திற்குள் ஊர்க்குத் திரும்பி வந்து, அதுகாறும் துணையின்றித் தனித்திருந்த தம் காதலிமாருடன் கலந்துகொள்வது வழக்கம். மழை காலத்தில், முயற்சிகள் செய்வது அரிதாயிருக்கும். ஆதலால், உரிய காலத்திலேயே உரிய முயற்சிகளைச் செய்துகொள்வது பின்பு இடர்ப்படாமலிருத்தற்கு ஏதுவாகும்.

பொருளைத் தேடிக்கொண்டமையாலும் தலைவியோடு கலந்துகொண்டமையாலும் பொருளும் இன்பமும் பெற்றுவிட்டமையால், இனி இல்லறம் இனிதாக நடைபெறும். பொருளும் இன்பமும் அறத்திற்குக் கருவி. அறவுணர்வே மழைக்கு ஏது. பொருளும் இன்பமும் கைவந்த அளவிலேயே அறமும் கைகூடி விட்டதாகக் கருதினானாதலின்,

அதன் பயனாகிய மழையைப் 'பெய் பெய்' என்று மகிழ்ந்து கூறினான் தலைவன் கார்காலத் துவக்கத்தில் வந்துவிட்டமையால், உடனே மழை பெய்யத் தொடங்கிற்று. அதனை அறிந்தே, 'பெய், பெய். நன்றாகப் பெய்' என்று, பெய்தற்குரிய காரணங்களையெல்லாம் ஒருங்கு நினைந்து இங்ஙனம் சொன்னான்.

மழை அறத்தின் வடிவம் என்று பண்டைக்காலத்துத் தமிழ் மகன் காரண காரிய முறைமையில் நினைந்தது போல், மக்கள் பலரும் நினைக்கவேண்டுமே! அப்படி நினைப்போருக்கன்றோ, காலத்து முயற்சியும், ஆறுதலும், அம் முயற்சியின் நிறைவேற்றத்தில் ஒரு மகிழ்ச்சியும், இம் மகிழ்ச்சியுரையும் தோன்றும். எல்லாம் இல்லறக் கடமையால் இங்ஙனம் தோன்றின. இல்லறக் கடமையை நினையாத மக்கட்குத் தலைவியின் கூட்டுறவும் அதனில் இங்ஙனமொரு மகிழ்ச்சியும் நேர வழியில்லையன்றோ? அப்படி நேர்ந்தாலும், உலக உதவியாய்ப் பொழியும் மழையையே அவன் நினைக்கவேண்டுமென்பதும் இலலையன்றோ? அறம் நினையாத அம் மகிழ்ச்சி, வேறு ஏதோ ஒன்றைக் கனித்துக் கூறும்.

தமிழ் மக்களின் உள்ளமே சிறந்த அற வடிவமானால், அவர்கள் நினைவு சொற் செயல்கள் இங்ஙனமன்றி வேறு எவ்வாறு இருக்க முடியும்?

**குறிப்புரை**: தாழ் - உலகத்தில் தங்கிய. துமிய - கெட. வீழ் உறை இனிய - விரும்பத்தக்க இனிய துளிகள். ஊழின் - ஓர் முறைமையால். கடிப்பு - குறுந்தடியால். இகு - அடிக்கப் படுகின்ற முரசின் - முரசொலியைப்போல. வாழியோ என்பதில் ஓ, அசை. பெரு வான் - மிக்க மழை மேகமே. செம்மல் - நிறைவினால் தலைமையான. இவளின் - இவளோடு. மேவினமாகி - கலந்துகொண்டோமாகி. குவளைக் குறுந்தாள் நாள் மலர் நாறும் - குவளைப் பூண்டின் சிறிய காம்பினையுடைய புது மலர் மணக்கின்ற. மெல் அணையேம் - மெல்லிய அணையிலுள்ளேம். 'யாம் இவளின் மேவினமாகிக் கூந்தல் மெல்லணையேம்; பெருவான்! இனிப் பெய்து வாழி' என்று உரைத்துக் கொள்ள வேண்டும். (சு)

## உலகிற்கு ஆணி

[உதவியிற் சிறந்தது உலகத்தில மழையே, அதனல் அது, பலர் தொழும பெருமையுடையது. உலகத்தார்க்குச் சிறந்த ஆதாரப்பொருள அதுவே. இனிய ஒலியோடு பருவமறிந்து பெய்து உலகத்தை வாழ்விக்கும சிறப்பு நிலை அமைந்தது.]

உலகிற்கு ஆணி யாகப் பலர்தொழப்
பலவயின் நிலைஇய குன்றில் கோடுதோறு
ஏயினை உரைஇயரோ பெருங்கலி எழிலி
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு
எழீஇ யன்ன உறையினை முழவின்
மண்ணார் கண்ணின் இம்மென இமிரும்
வணர்ந்தொலி கூந்தல் மாஅ யோளொடு
புணர்ந்தினிது நுகர்ந்த சாரல் நல்லூர்
விரவுமலர் உதிர வீசி
இரவுப்பெயல் பொழிந்த உதவி யோயே.

—நற்றிணை, கந௬.

உழவார் உலகத்தாக்கு ஆணி என்றார் திருவள்ளுவர். அதற்கு அவர் ஒரு காரணமுங் கூறினார்; அது, பிறரைத் தாஙகுதலான் என்பது, மேலே காட்டியிருக்கும் நற்றிணைச் செய்யுளானது, பிறரோடு அவ வுழவாரையுந் தாங்குதலால் உலகிற்கு ஆணி மழை என்று விளக்குகின்றது.

மழையானது உலகிற் பலராலும் தொழப்படும் பெருமை வாய்ந்தது; அதற்கேற்றபடி அது மலைகளின் முடியில் உயர்ந்து இருக்கை கொளகின்றது. மேலும், மழை, எல்லா வகையிலும், உயிர்களுக்கு உதவுவதற்கென்றே அமைந்த ஒரு தனிப் படைப்பாக உலகத்தில் நிலவுகின்றது.

ஒரு தலைவன் வெளியில் தன் காரியத்தை முடித்துக் கொண்டு கார்ப்பருவத் தொடக்கத்தில் தன் இல்லத்துக்குத் திரும்பினான். விரும்பிய அன்போடு வரவேற்ற தன் மனைவியுடன் மனையில் தங்கினான். அன்றிரவு நல்ல மழை பெய்தது. ஆதலால், தன் தலைவியோடு அன்று அவன் மிக அமைதியாக இருக்க முடிந்தது. மழை செய்த இந்த உதவியை நினைந்து, 'எழிலியே, நீ குன்றுகளில் அவற்றின் முகடுதோறும் பலர் தொழ உலவி விளங்குவாயாக' என்று அன்புடன் வாழ்த்துகின்றான்.

மழை, எந்நிலையிலும் உலகிற்கு ஆணியாகவே விளங்குகின்றது.

**குறிப்புரை :** ஆணியாக - ஆதாரவாக. வயின் - இடங்களில். நிலைஇய - நிலைபெற்ற. கோடு - உச்சி. எயினை - பொருந்தி. உரைஇயர் - உலாவுக. கலி - ஓசையையுடைய. எழிலி - மேகமே! பஞ்மலை - படுமலை என்னும் இசைப் பண். நின்ற - உண்டான வடி - முறுக்குண்ட எழீஇயன்ன - அப் பண்ணிசை எழுந்தாற்போல. உறையினை - மழைத்துளி யுடையையாய். யாழின் முறுக்கிய நரம்பிலிருந்து படுமலைப் பண் தோன்றி இசைத்தாற்போன்ற இனிய ஓசையோடு மழைத்துளி வீசுதலையுடையது மேகம் என்றபடி. முழவு - மத்தளம் மண் ஆர் கண்ணின் - மார்ச்சனை என்னும் கருங்குழம்பு பூசிய இடத்திலிருந்து. இமிரும - ஒலிக்கின்ற. வணர்ந்து - கடை குழன்று. ஒலி - தழைத்த மாயோளோடு - மாமை நிறத்தை யுடைய காதலியோடு. சாரல் - மலைப்பக்கத்தையுடைய. விரவு மலர் - கலந்த மலர்களாக 'எழிலியே! உறையினையாய் இமிரும நல்லூரின்கண் இரவு பெயல் பொழிந்த உதவியோயே! பலர் தொழக் குன்றிற் கோடுதோறு உரைஇயர்' என்று தொடர்ந்து முடித்துக்கொள்க. (எ)

## இயற்கை வாழ்வு

[வாழ்வு, இயற்கையின் வழியே ஓங்குதல் வேண்டும். இயற்கை வழியே தொடங்கிலை முற்றும் கோணலின்றி நிகழும்; சிறப்பும் பெறும். ஊழ் என்பது இயற்கையின் நிகழ்ச்சி; தெய்வத்தின் ஆணை. அதற்குமேல், மக்கள் தம் அறிவினால் சரியாகத் துணிந்துவிட முடியாது. நேர்ந்ததைப் பின்பு அறிவினால் வளப்படுத்திக்கொள்ளலாம்.]

பால்வரைந் தமைத்த லல்லது அவர்வயின்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ?
வேறியாள் கூறவும் அமையாள், அதன்றலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணி அவிழ்ந்த
வள்ளிதழ் நீலம் நோக்கி உள்ளகைப்
பழுதகண் ணாளாகிப்
பழுதன் றம்மஇவ் வாயிழை துணிவே.

—குறுந்தொகை, ௩௱௬௬

தமிழகத்தின் செயல்களெல்லாம் இப்பொழுது எவ்வளவோ நிலைமாறியிருக்கின்றன. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் இருந்த மனப்பான்மை இச் செய்யுளில் ஓவியம்போல எடுத்துக் காட்டப்படுகின்றது.

எதனையும் தம் அறிவினாலேயே ஆராய்ந்து திட்டஞ் செய்துவிடலாம் என்று இக் காலத்தார் பலர் கருதும் துணிவு இச் செய்யுளில் நொறுங்க உடைக்கப்பட்டுத் தூளாக்கப் பட்டிருக்கின்றது. 'இயற்கை நிகழ்ச்சிகளின் சால்பை அளந்தறிதற்கு, சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடைய புல்லிய உயிர்களாகிய யாம் யார்?' என்று பண்டைக்காலத்தில் எழுந்த இச் செய்யுள் வினவுகின்றது.

உலகத்தில் நிகழ்வது எந்த நிகழ்ச்சியானால் என்ன? தாமே நேர்வதை விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக்கொண்டு முகமாகப் பயன்படுத்துதலே தக்க வாழ்க்கைமுறை என்று அக்காலத்தவர்கள், இயற்கை நேர்வுக்குப் பணிந்தொழுகிய தெய்வப் பான்மையை என்றைக்கேனும் இந் நாடு மறந்துவிட முடியுமா? தம் சிறுமையையும் தெய்வத் திறத்தின் பெருமையையும் அறிந்து, செய்கையில் வாழ்ந்து காட்டிய இயற்கை வீரர்களாகிய நம் முன்னோர் கருத்துக்களை எவர் புறக்கணிக்க முடியும்?

காதல் நிகழ்ச்சியையே எடுத்துக்கொள்வோம். வாழ்க்கைக்கே அடிப்படை நிகழ்ச்சியன்றோ இது! இதுவே

கோணினால், பின்னர் முற்றுங் கோணலாகத்தானே முடியும்! ஊழ் வகையினால் ஓர் இளைஞனும் ஒரு மங்கையும் இயல்பாக எதிர்ப்பட்டுத் தம்முள் அன்பு கிளரப்பெற்று ஒன்று கூடுகின்றனர் ஊழ் ஒன்றுசேர்ப்பதனால், அதுவே பொருத்தம் என்று தீர்மானிக்க வேண்டுவது, சுற்றத்தார் கடமை. மற்று, அவரவர் சால்பளந்து அறிந்து பொருத்துவதற்கு, அங்ஙனம் அளந்தறியும் ஆற்றல் சுற்றத்தார்க்கு ஊழினும் சிறப்பாகப் பொருந்தியிருக்கவேண்டுமே! ஊழ் என்பது தெய்வத்தின் ஆணை. அஃது அறியாததைச் சுற்றத்தாரின் சிற்றறிவு அறிந்துவிடும் என்பது எவ்வளவு ஏழைமையானதாயிருக்கின்றது

இயற்கைச் சேர்க்கையிற் கூடிய தலைவனும் தலைவியும் தமமுள் அன்புற்று ஒழுகி வந்தனர் தலைவன் நீலப் பூத தந்து தலைவியை முதலில் மகிழ்வித்தான். தலைவிககு வீட்டில் காவல் மிகுதியாயிருந்தது. தலைவனை அடிககடி காணமாட்டாது தலைமகள் நலங் குன்றினள். தெய்வமேறி வெறியாடும் மாது ஒருத்தியை வருவித்துச் செவிலி காரணம வினவினள், அவள், முருகக்கடவுளால் இந் நோய் உண்டானது என்றாள். உண்மை அதுவன்றாதலால், தலைவிக்கு அதனால் அமைதியும் நலமும் உண்டாகவில்லை. எப்போது பார்த்தாலும், சுனையில் உள்ள நீல மலரைப் பார்ததுக்கொண்டு உளளம வருந்தி அழுத கண்ணளாகி, அதுபோன்ற நீல மலர் தநத தலைவனையே மணப்பது என்று துணிவுடையவளாய் இருநதாள். அவள் வேறென்ன செய்ய இயலுமா?

செவிலி, காரணம் அறியாதவளாய்த் தோழியைக் கேட்டாள்; தோழி, உண்மையைப் புலப்படுத்தி அறத்தொடு நின்றாள். அவள் கூறுமாறு அமைந்ததே இச் செய்யுள். அவள் சொல் பின் வருமாறு

'ஊழ், அளவறிந்து அமைத்தலல்லது, தலைவர் திறத்தில் அவர் தகுதியை அளந்தறிதற்கு யாம யார்? ஆதலால், தெய்வமேறியாடும் மாது ஏதோ காரணம கூறவும்

அதனால் அமைதியில்லாதவளாய், அதற்கு மேலும், சுனையின் வளவிய இதழையுடைய நீல மலரை நோக்கி உள்ளம் வருந்தி அழுதகண்ணளாகி இவள் துணிந்திருக்குந் துணிவு குற்றமற்றதேயாகும்'.

உண்மையைத் தோழி புலப்படுத்திவிட்டாள்; அதன்படி நடப்பதே முறை என்பதையுந் தெரிவித்துவிட்டாள் இயற்கையின்படி வாழ்வதுதானே வாழ்வு. வேறு யார்தாம் என்னசெய்ய முடிகிறது?

குறிப்புரை: பால் - ஊழ்; அதாவது, முன்னை வினையின இயைபாகிய தெய்வத்தின் ஆணை. அவர்வயின் - அவரிடத்தில். சால்பு - தகுதி. யாம் யார் - நாம் என்ன தகுதியுடையோம். வெறியாள் - தெய்வமேறியாடுவோள் அமையாள் - அமைதியில்லாதவளாய் அதன்றலை - அதன்மேல் பை கண் மா சுனை - பசுமையான இடத்தையுடைய பெரிய சுனையின்; சுனையின் நீலமலர் என்றபடி பல பிணி - பல இதழ்களின் முறுக்கம். வள் இதழ் - வளமான இதழ்களையுடைய நீலம் - நீலமலரை. தலைவன் முதல் முதல் நீலப் பூத் தந்து நட்புச் செய்தானாதலின், எங்கேனும் நீலமலரைக் கண்டால் அவளுக்குத் தலைவன் நினைவெழுந்து உள்ளம் ஆழ்ந்த உருக்கம் உண்டாய்விடுகின்றது. ஆய் இழை - தெரிந்தெடுத்த அணிகலன்களையுடைய தலைமகள். துணிவு - கொண்டிருக்குந் துணிவு. பழுதன்று - குற்றமுடையதன்று; பொருத்தமே என்றபடி. அம்ம, அசைச்சொல். 'பால் வரைந்து அமைத்தலல்லது, சால்பளந்து அறிதற்கு யாம் யார்? ஆயிழை துணிவு பழுதன்று' என்று முடித்துக்கொள்ள வேண்டும். (அ)

## உற்று நோக்குதல்

[உற்றுநோக்குப் பழக்கம் அறிவையும் ஆராய்ச்சியையும் பெருக்குகின்றது. அதிலும், இயற்கையை உற்று நோக்குதலால் மக்கட்கு உண்டாகும் நலங்கள் அளவில்லாதன. பல அறிவின்பம், பல கருத்து முடிபுகள், பல கலை நலங்கள், பல வாழ்க்கை நலங்கள் எல்லாம் உண்டாகின்றன. இலக்கிய அழகையும் இறைவனின்பத்தையும் சான்றோர் இதனால் ஒருங்கு கண்டு எளிதின் இன்புறுகின்றனர்.]

வேறுபல் துகிலின் நுடங்கி, அகில்சுமந்து,
ஆரம் முழுமுதல் உருட்டி, வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு,
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப், பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத், தத்துற்று,
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழி
வாழை முழுமுதல் துமியத் தாழை [யா.
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்,
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாஅடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

—திருமுருகாற்றுப்படை, ௨௯௯-௩௧௭.

முருகக்கடவுளுக்குரிய ஆறு படைவீடுகளுள் ‘பழமுதிர்சோலை’யும் ஒன்று. அந்த ஊரில், மலையில் எழுந்தருளியிருப்பவன் முருகன். பழமுதிர்சோலைமலைக்கு உரிமையுடையவனாதலால் அப் பெயரான் இச் செய்யுட

பகுதியின் ஈற்றடியில் 'பழமுதிர்சோலைமலை கிழவோனே' என்று கூறப்பெறுகின்றனர். நக்கீரர் அருளிய திருமுரு காற்றுப்படையின் இறுதிப் பகுதியே இது.

ஆசிரியர் நக்கீரர் பழமுதிர்சோலை மலையைப்பற்றி நினைக்கும்போது அம் மலையின் உச்சியிலிருந்து ஒழுகும் அருவி நீரும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. மலையில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளின் திருவிளையாட லாகவே அந்த அருவி நீரின் விளையாடலும் அவருக்குத் தோன்றியது. அருவி நீர் இழிதரும் இயற்கையழகை விளக்குவது, அழகுருவாகிய முருகனை விளக்குவதாகவே முடியும் என்று அவர் கருதினர் முருகனை இயற்கை யழகின் வாயிலாகக் காணும் இலக்கிய உள்ளம படைத்த நக்கீரர், அருவியைக் கண்டால் விடுவாரா? அதுவும், முருகன் உறையும் சோலைமலையிற் கண்டால் எங்ஙனம் விடுவார்? சொற்கள் அவரைச சூழ்ந்து நின்றன. அருவி யின் திருவிளையாடலில் உள்ளம் திளைத்துப பல வரிகளில் விளக்கினர் அவர் அழகுள்ளத்துக்கு அவ் வருவியின் ஒழுக்கு என்னென்னவோ வகையாகத தோற்றுகின்றது.

'அருவி' மலையின் உயரத்தில் ஒவ்வொரு பக்கததில் வெள்ளை வெளேரென்று அசைநது தெரிதலால், வெண் துணிகளாலான கொடிகள அசைவதுபோல அதனைக் கண்டு மகிழ்கின்றார். அருவி நீர் அகிற்கட்டைகளைச் சுமந்து வருகின்றது. சநதன மரங்களை உருட்டி வரு கின்றது மூங்கிலின் சிறுகாம்புகள் மேலே அசைந்து கொண்டிருக்க அதன் வேரையே கிளப்பிப் பியத்துக் கொண்டு வருகின்றது இவையே இங்ஙனமானல் வாழை மரங்கள் மிளகு கொடிகள் முதலியவற்றின் நிலையை என் னென்பது?

அருவி ஒழுகி வருகின்ற விசையில், மலையின் உயரத் தில் அங்கங்கும் ஞாயிற்றைப்போல் தேனீக்களால் தொடுக்கப்பட்டிருக்கும் தேனடைகள் வேறே சிதைநது போகின்றன. நல்ல முதிய பலாச்சுளைகள் பல, பலாப்

பழங்களிலிருந்து பிய்க்கப்பட்டு நீரில் கலந்துவிடுகின்றன. இந்த அருவியின் அதிர்ச்சியில் சுரபுன்னை முதலிய மலர்கள் மரங்களிலிருந்து ஏராளமாக உதிர்கின்றன. தென்னையின் இளங் காய்கள் சிதறுகின்றன. குரங்கினங்கள் நடுங்குகின்றன. மயில்களும் கோழிகளும் அஞ்சி நீங்குகின்றன. சாடிகள் மலைப் பிளவிற் செறிந்துகொள்கின்றன. காட்டு ஆக்கள் கத்தத் தொடங்கிவிடுகின்றன. ஆனால், பெரிய யானைகள் மட்டும் அந்த அருவியின் கரைகளில் குளிர்ச்சியாகக் காற்று வாங்கிக்கொண்டிருக்கின்றன.

இவ்வாறு அல்லோல கல்லோலமாய் ஒழுகி வரும் அருவி நீர், முத்துடைய யானைக்கொம்புகளையும் ஏந்திய பொன்னை அங்கங்கும் தெள்ளிக்கொண்டு வருகின்றது. இவ்வளவு கருத்தாக அருவியை உற்றுக் கண்ட நக்கீரருள்ளம், மற்றுமோர் இயல்பையும் எவ்வாறோ தழுவிக் கண்டு இன்புற்றிருக்கின்றது. இயற்கையை உற்று நோக்கி இன்புறுகின்ற அவர் கூறிய உள்ளப்பான்மையை என்னென்பது! நீரில் அடித்துக்கொண்டு வருகின்ற பொன்னும் மணிகளும் நன்றாக நிறம் மின்னும்படி, அவற்றைத் தன் அலையாகிய கைகளில் தூக்கித் தூக்கி இட்டுக், குதித்து விளையாடிக்கொண்டு வருகின்றதாம் அந்த அருவி.

இப்படி உச்சியிலிருந்து இனிய ஒலியோடு ஒழுகுகின்ற அருவியையுடைய பழமுதிர்சோலைமலையில் எழுந்தருளியிருப்பவர் முருகக்கடவுள் என்கின்றார் நக்கீரர். இன்பமான இடம்; அவருக்கு என்ன குறைவு? அந்த அழகை இவ்வளவு தெளிக்காணும் இவருக்குத்தான் என்ன குறைவு? இயற்கையை இவரைப்போல் இவ்வளவு உற்று நோக்கி இன்புறும் எவருக்குத்தான் என்ன குறை இருக்கப்போகின்றது?

**குறிப்புரை:** வேறு பல் - வேறு வேறான பல. துகிலின் - துகிற்கொடிகளைப்போல. நுடங்கி - அசைந்து. ஆரம் - சந்தனமாகிய. முழு முதல் - பெரிய மரத்தையே. வேரல் - மூங்கிலின். அலங்கு சினை புலம்ப - அசையும் கிளைகள் தனிப்படும்

படி. கீண்டு - பிய்த்துக்கொண்டு. பொரு - முட்டுகின்ற. வரை - மலையில். பரிதியின் - ஞாயிற்றைப்போல வட்டமாக. அலர் இறால் - விரிந்த தேன் கூடு. ஆசினி என்பது ஒருவகைப் பலா. கலாவ - கலக்க; நீரில் கலக்க. மீமிசை - மிகவும் உயரத்தி லுள்ள. நாகம் - சுர புன்னையின். யூகமொடு - கருங்குரங் கோடு. மா - கரிய. முசுக் கலை - முசு என்னும் ஒருவகைக் குரங்கின் ஆண்கள். பனிப்ப - நடுங்க. பூ - புள்ளிகள் பொருந் திய. இரு பிடி - பெரிய பெண் யானைகள். குளிர்ப்ப - குளி ரும்படி. வான் - வெண்ணிறமான. தந்துற்று - குதித்துக் கொண்டு; நன் பொன் மணி நிறங் கிளர அருவி குதித்துக் கொண்டு என்றபடி. கொழியா - தெள்ளி. முழுமுதல் என்றது, மரத்தை என்னும்பொருட்டு. துமிய - துணிபட தாழை - தென்னையின். கறிக் கொடி - மிளகு கொடியின் கருந்துணர் - கரிய கொத்துக்கள். பொறிப்புறம் - தோகை பொருந்திய பின் புறத்தையுடைய வெரீஇ - அஞ்சி வய பெடை - வலிய பெட்டை கள். இரிய - நீங்க கேழலொடு - ஆண் பன்றியோடு வெளிற் றின் இரு பனை - இளைய கரிய பனை மரத்தின் வெளிறு - இளமை என்னும் பொருட்டு சாய் - கரும் பட்டைகள் குரூஉ - கருநிறமான. குடா அடி உளியம் - வளைந்த அடியையுடைய கரடி. கல் விடர் அளை - மலையின் விண்ட பிளவில். கோட்டு - கொம்பையுடைய ஆமா - காட்டு ஆனின் ஏறு - ஆண். சிலைப்ப - முழங்க. சேண் நின்று - உயரத்திலிருந்து. இழும் என - இழும் என்னும் இனிய ஒலியோடு இழிதரும் - ஒழுகி வருகின்ற. மலை கிழவோன் - மலைக்கு உரிமையுடையோன்; அதாவது, முருகக்கடவுள். (௯)

## இராக் காலம்

[நகரங்களில் இரவு நேரம் அமைதியாயிருக்கும். இரண்டாம் யாமத்தின் முடிவு நேரம் நள்ளிருள் எனப்படும். அந்த நேரத்தில், ஒலிகள் அடங்கிக் கடைகள் மூடி அனைவரும் உறங்கி அமைதி நிலவும். அந்தத் தோற்றம், கடல் ஒலி அவிந்து அமைதிகொண்டதை ஒக்கும்.]

பணிலம் கலிஅவிந் தடங்கக், காழ்சாய்த்து
நொடைநவில் நெடுங்கடை அடைத்து, மடமதர்
ஒள்ளிழை மகளிர் பள்ளி அயர,
நல்வரி இறால் புரையும் மெல்லடை

அயிர்உருப் புற்ற ஆடமை விசயம்
கவவொடு பிடித்த வகையமை மோதகம்
தீஞ்சேற்றுக கூவியர் தூங்குவனர் உறங்க,
விழவின் ஆடும் வயிரியர் மடியப்,
பாடான் றவிந்த பனிக்கடல் புரையப்
பாயல் வளர்வோர் கண்இனிது மடுப்பப்,
பாணாட் கொண்ட கங்குல்.

—மதுரைக் காஞ்சி: ௬௨௧-௬௩௧.

நகரில் நள்ளிருள் நேரத்தின் இயல்பினை இச் செய்யுட் பகுதி எடுத்துக் காட்டுகின்றது

சங்குகள், ஒலித்தல் அவிந்து அடங்கிக் கிடக்கின்றன. கடைகள், எதிரிலுள்ள பலகைகளின் கால்கள் வாங்கி மூடப் பட்டிருக்கின்றன. இளமையும் களிப்புமுடைய ஒளிமிக்க அணிகலன்களையுடைய மகளிர் தமது படுக்கையில் அயர்ந்து துயில்கின்றனர் தேனடையை ஒத்த மெத் தென்ற அடையும், கற்கண்டோடும் பாகோடுங் கலந்த இனிப்புப் பொருள்களை உள்ளே வைத்துப் பிடித்த பல வகைகள் அமைந்த அப்பமும், இனிதாக மாவும் உடைய அப்ப வாணிகர் அந்தப் பண்டங்களோடே இருந்து தூங்கி விழுகின்றனர். விழாக்களில் கூத்தாடுங் கூத்தர், தம் செயல் ஒழிந்து உறங்குகின்றனர் இங்ஙனமெல்லாம், ஒலி அவிந்த கடலைப்போல, நகர் முழுதும் பாயலில் உறங்குவோர் கண்கள், இனிது பொருந்தித் துயில் கொள் கின்றன இரவின் பாதிப் பொழுதைக் கொண்ட நள்ளிருள் என்பது இப்படிப்பட்டதா யிருக்கின்றது.

குறிப்புரை: பணிலம் - சங்கு. கலி - ஒலி. காழ் - கடையில் எதிர பலகையைத் தாங்கி நிறுத்தும் சட்டம்; சட்டம் என்னுமல் அதனைக் கொம்பு அல்லது கால் என்றும் சொல்லுவர். நொடை நவில் - விலைகள் கூறுகின்ற. மடம் - இளமை. மதர் - களிப்பு. நல் வரி இறால் - நல்ல வரிகள் பொருந்தித் தோன்றும் தேன் கூட்டின் மெழுக்கடை. புரையும - ஒக்கும். அயிர்

உருப்பு - கட்டிச் சர்க்கரை; உற்ற - பொருந்திய. ஆடு அமை விசயம் - அடுதல் பொருந்திய பாகு; அடுதலாவது காய்ச்சுதல். கவவு - உள்ளிடும் பொருள்; பாகோடு கலந்த தேங்காய் முந்திரிப் பருப்பு முதலியன. மோதகம் - அப்பம். நீஞ் சேறு - இனிப்புக் கலந்த மாவு. கூவியர் - அப்பம் விற்கும் வாணிகர். தூங்குவனர் - அசைந்தசைந்து விழுவோராய். வயிரியர் - கூத்தர். பாடு ஆன்று அவிந்த - ஒலி நிறைந்து பின் அவிந்த. புரைய - ஒப்ப. பால் நாள் கொண்ட கங்குல் - பாதிப் பொழுதை முடிவாகக் கொண்ட இரவு நேரம். 'கண் இனிது மடிப்ப நாள் கொண்ட கங்குல்' என்பது (௧௦)

## ஆடவர் அருளுதல்

[மாதரும் ஆடவரும் அளவளாவி யொழுகும் ஒழுக்கத்திலிருந்தே வாழ்க்கையும் உலகமும் விளக்கம் பெறுகின்றன. ஒருவரை யொருவர் இன்றியமையாததாய் இவ்வுலகியற்கை நடைபெறுகின்றது. ஆதலால், மாதர்க்கு ஆடவர் அன்பு செய்தல் கட்டாயமாகும். மழையும் நிலமும் உலக நலத்திற்குக் கட்டாயமன்றோ!]

யாம்நிற் கூறுவ தெவனுண்டு எம்மினும்
நீநற் கறிந்தனை நெடுந்தகை! வானம் [நின்
துளிமாறு பொழுதின் இவ் வுலகம் போலும்
அளிமாறு பொழுதின் இவ் வாயிழை கவினே.

—கலித்தொகை, ௨௬: ௨௫-௬.

தலைவன் தான் ஏதோ காரியமாகப் பிரிய இருத்தலைத் தோழிக்குத் தெரிவித்தான். அவள், தலைவியின் ஆற்றாமைப் பான்மையையும், அதனை அவள் கண்களும் வளைகளும் நுதலும், நீர் ததும்புதலாலும், தளர்ந்து கழலுதலாலும், பசந்து காட்டுதலாலும் புறத்தார்க்கு அறிவித்து விடும் வகையாயிருத்தலையும் அவனுக்கு எடுத்துக் காட்டிப் பின்பு,

'இந் நிலைகளையெல்லாம் நாங்கள் உனக்கு எடுத்துக் கூறவேண்டும் என்பது என்ன இருக்கின்றது? பெருந் தகையே! நீ இவையெல்லாம் நன்கறிந்திருக்கின்றனை.

நீ அருளுதல் நீங்குகின்றபோது தலைவியின் பொலிவானது, வானம் மழை மாறுகின்றபோது இவ்வுலகம் அடையும் நிலையைப்போல இருக்கின்றது' என்கின்றாள்.

வானம் மழை மாறினால் உலகம் காய்ந்து சாம்பிப் போம்: ஆடவர் அருளோடு மாதரை அளவளாவுதல் நீங்கினால், மாதருடைய பொலிவும் மென்மையும் பயனும் வீணாய் ஒழியும். மாதர் உள்ளமும் வருந்தி நலியும். மழையின்றி நிலம் விளைவு குன்றினால் அது, உலகத்துக்கே இன்னலாய் முடிதல்போல, ஆடவர் அருளுதலின்றி மாதர் உளம் நலிந்தால் அது, உலகத்துக்கே பேரின்னலாய் முடிகின்றது!

குறிப்புரை. நின் கூறுவது - நினக்குக் கூறுவது எவன் - என்ன, என்ன பயன்? நற்கு அறிந்தனை - நன்கு அறிந்தனை. நெடுந் தகை - பெருந்தகையே! துளி - மழைத்துளி. மாறும் பொழுதின் - பெய்யாது நீங்கும் பொழுதில். நின் அளி - நின் அருளுதல். ஆய் இழை - ஆராய்ந்தெடுத்த இழைகளை அணிந்த தலைவியின் கவின் - பொலிவு. (கக)

## இள வேனில்

[பருவ காலங்களுள், இளவேனிற் பருவம் இன்பச் செவ்வியுடையது. நுகரும் இளமை யுணர்வு உடையோர்க்கு அது மிக்க இன்பம் பயக்கும். நிலமகள் அப் பருவத்தில், சிறந்த எழில் பெறுகின்றனள். மணமும் நறுமண நிலவும் தளிரும் அரும்பும் மலரும் வண்டும் வளியும் கொடியுமாக இளவேனில் சித்திரிக்கப் பெறுகின்றது.]

எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற ஐம்பால்போல்
மையற விளங்கிய துவர்மண லதுவது
ஐதாக நெறித்தன்ன அறலவிர் நீள்ஐம்பால்
அணிநகை இடையிட்ட ஈகையங் கண்ணிபோல்
பிணிநெகிழ் அலர்வேங்கை விரிந்தபூ நெறிகொளத்,
துணிநீரால் தூய்மதி நாளால் அணிபெற,

ஈன்றவள் திதலைபோல் ஈர்பெய்யுந் தளிரொடும்
ஆன்றவர் அடக்கம்போல் அலர்ச்செல்லாச் [சினையொடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடும்
நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கொம்பொடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணர்ஊழ்த்த மரத் [தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடும்
நயந்தார்க்கோ நல்லமன் இளவேனில்.

—கலித்தொகை, ௩௨ · ௧ - ௧௩.

இளவேனிற் பருவத்தின் செவ்வி இச் செய்யுட் பகுதியில் விளக்கப்பெறுகின்றது.

இளவேனிற்காலத்தில் மேகம் மழை பெய்தல் இல்லாமையால், மணல், கூந்தலைப்போல் புலர்ந்து விளங்குகின்றது. கூந்தலில் பலவகையான அணிகளும் அவற்றினிடையே பொன் மாலைகளும் அமைவதுபோல, மணலில் பல நிறமான பூக்களும் அப் பூக்களின் இடையிடையே பொன்னிறமான வேங்கை மலர்களும் வீழ்ந்து ஓர் ஒழுங்கு கொண்டு இன்பந் தருகின்றன. நிலமகளுக்கு மணல் இடங்கள் கூந்தல். அங்கே உதிர்ந்து கிடக்கும் பலவகையான மலர்களெல்லாம் அக் கூந்தலின் அணிகள். இங்ஙனம் இளவேனிற்காலத்தில் நிலமகள் அழகுற்றுத் தோன்றுகின்றனள்.

இன்னும், செடி கொடி மரங்களின் அழகுகளெல்லாம் நிலமகளின் மேனி யழகுகளேயாம். மகவு ஈன்ற மாதின் திதலையைப்போன்ற தளிர்கள். அறிவான் அமைந்தவர் அடக்கத்தைப் போன்ற அரும்புகள்; யாழிசை போன்ற வண்டொலிகள்; மகளிர் நாட்டியத்தைப்போன்ற கிளைகளின் அசைவுகள்; கொடுக்கத் தெரிந்தவர்களின் கைப்பொருள்களைப்போல அங்கங்கும் மரங்களின் நுனி

களில் பூங்கொத்துக்கள்; காதலர் தழுவுதலைப்போல எங்கும் பின்னுதலுற்ற கொடிகள்.

இளவேனிற் பருவத்தில, அவட்கு இங்ஙனம் மேனியும் அழகு கொள்கின்றது.

அதோடு, தெளிந்த நீரும் தூய நிலவும் சேர்ந்தால், நிலமகளின் இன்பத்துக்குச் சொல்லவும வேண்டுமோ?

அவளை அப் பருவத்தில் நுகரும் மக்களின் மகிழ்ச்சிக்குத்தான் ஓர் அளவுண்டோ?

**குறிப்புரை:** எஃகு - கத்தரிக்கோல். இடை - இடைக்காலத்தில். தொட்ட - தீண்டிய, அதாவது, கத்தரித்துச் செம்மை செய்த. காரக் கவின் - மேகத்தின் அழகை. ஐம்பால் - கூந்தல் ஐம்பால்போல் மணல் என்று முடித்துக் கொள்ளவேண்டும் நிலத்தின் மற்றப் பாகங்கள் வலிவாய்த் திணிந்திருப்ப, ஆறுகள ஒழுகிய மணலிடங்கள் நீண்டு சடைப்பாய் இருத்தலின், நிலமகளின் கூந்தலுக்கு மணல் எடுத்துக் காட்டப்பட்டது மை - மேகம். அற - பெய்தல் அறுதலால். விளங்கிய துவர் மணலது - விளங்கிய உலர்ந்த மணலாயிருக்கின்றது துவர் - உலர்ந்த மணலது - மணல் என்றபடி மீண்டும் வரும அது என்பது அ என்னும் சுட்டுப்பொருளில் வந்தது. 'ஐம்பால்போல் மணல், அவ ஐதாக நெறிந்தன்ன அறலவிர் ஐமபால்' என்று தொடர்ந்துகொள்ள வேண்டும்; 'ஐம்பால் மணல்; அவ வைமபாலில் அணி நகை இடையிட்ட' என மேலுந் தொடர்ந்து செல்லவேண்டும் ஐதாக நெறித்தன்ன - மென்மையுண்டாக ஒரு நெறியிற் பிடித்துவிட்டாற் போன்ற. அறல் அவிர் - நுனி அறுதியுடையதாய் விளங்குகின்ற ஐமபால் - கூந்தலில் அணி நகை - நகையணி. ஒளியுள்ள அணிகலன்களின். இடையிட்ட - இடையே அமைந்த. நகை அம் கண்ணி - பொன்னுற செய்யப்பட்ட அழகிய மாலையை. பிணி நெகிழ அலர - கட்டு நெகிழ்ந்த பல பூககளும். வேஙகை விரிநத பூ - வேஙகை மரத்தின விரிநத பூககளும். நெறி கொள - பொருநரி ஒழுஙகுகொள்ளவும். துணி நீரால் - தெளிந்த நீராலும. மதி நாளால் - மதிய நாளாலும்; முழு நிலா நாளாலும் என்றபடி. அணி பெற - அழகு பெறவும். திதலை - வயிற்றில்

அலையலையாகத் தோன்றும் நிறம். ஈர் பெய்யும் - நெய்ப்புத் தன்மையை யுண்டாக்கும். தளிரொடும் - இளந் தளிர்களோடும். ஆன்றவர் - அறிவான் அமைந்தவர். அலாச செல்லா - காலம் வருமளவும் மலர்தலிற் செல்லாத; செல்லாத அரும்புகளையுடைய என்றபடி. சினை - கொம்புகள். வல்லவர் - இசை பயிற்ற வல்லவரது. யாழ் - யாழின் இசையை. ஆர்க்கும் - ஆரவாரிக்கின்ற. புதலொடும் - சிறு செடிகளோடும். நல்லவர் - மாதரின். நுடக்கம் - அசைவினை. நயம் வரும் - விருப்பமுண்டாகும். கொம்பொடும் - கிளைகளோடும். இணர் ஊழ்த்த - பூங்கொத்துக்கள் மலர்ந்த. புரிவுற்ற - பின்னுதலுற்ற. இளவேனில் நயந்தார்க்கு நல்லை - இளவேனிற் காலமே! விரும்பினார்க்கு நீ இனியை. 'மணலில் அலரும் பூவும் நெறிகொள, நீராலும் மதி நாளாலும் அணிபெற, தளிர் முதலியவற்றோடு, இளவேனிலே நல்லை' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (கஉ)

## மாலைக் காலம்

[கணவனைப் பிரிந்திருக்கும் மகளிர்க்கு மாலைக்காலம் இன்பமாயிராது. அதிலும், கார் காலத்தின் மாலை நேரம் மிக்க துன்பந் தரும். அது கூற்றுவனைப் போன்றது என்று இச் செய்யுளில் வருகின்றது. வாழ்க்கைக்கும் இயற்கைத் தோற்றங்கட்கும் உள்ள இயைபு இதனாற் புலப்படும்.]

கண்நறுங் கோடல் துடுப்பெடுப்பக் கார்எதிரி
விண்உயர் வானத்து உரும்உரற்றத்-திண்ணி
புல்லுநர் இல்லார் நடுங்கச் சிறுமாலை [தின்
கொல்லுநர் போல வரும்.

—ஐந்திணை எழுபது, கஎ.

காலத்தின் கோலம் பல வகையான சித்திரப் பாடுகள் அமைந்தது. அந்தி மாலையின் கோலம் இச் செய்யுளில் வருகின்றது. அந்தி மாலையின் உறுமல், முல்லைக் கானில் கார்காலத்தில் மிகுந்து தோன்றும்.

மாலைக்காலம் அப்போது வருவது பின் வருமாறு: குளிர்ந்த சிறந்த காந்தட் செடிகள் துடுப்புப்போலப் பூங் கொத்துக்களை ஏந்த, கார்காலத்தை எனும் விண்ணில்

உயரும் மேகங்களில் இடிகள் ஒலிக்க, வரும். அதன் கோலம் அப்படிப்பட்டது அப்படி வருகின்ற அந்த மாலைக்காலம், முயங்கும் கணவரைத் தம்மிடம் இல்லாத மகளிர் பிரிவாற்றாமையால் நடுங்குதற்கு ஏதுவாயிருக்கின்றது. அதனால், அம் மாலையைச் சிறுமை தரும மாலை என்று கூறலாம. இன்னும் கடுமையாகக்கூடக் கூறலாம்; அதாவது, கொலை செய்வாரைப்போல வருகின்ற மாலை என்றுங் கூறலாம.

கார்ப் பருவத்தைக் கண்டு நெஞ்சழிந்த தலைவி, அப்பருவத்தின் மாலைப்போது நினைந்து, 'சிறு மாலை இங்ஙனங் கொல்லுநர் போல வரும்' என்றே கருதித், தன் தோழிக்குச் சொல்கின்றாள். கார்ப்பருவத்து மாலைக்காலம உலகியற்கையிற் கோலிய சித்திரம், தனித்திருக்கும் தலைவியின் நெஞ்சத்துக்குக் கூற்றுவனாகவே தோற்றுகின்றது. அதனாலன்றே, அதன் துடுப்புப்போன்ற கருவியையும, இடிபோன்ற குரலையும் தலைவி நினைந்து எடுத்துக் காட்டினாள்.

**குறிப்புரை:** நறு - நல்ல. கோடல் - காந்தள் செடி. துடுப்பு - துடுப்புப்போன்ற பூங்கொத்துக்களை. எடுப்ப - ஏந்த. கார் - கார்ப் பருவத்தை. எதிரி - ஏற்று. விண் உயர் - விண்ணில் உயர்ந்த. வானத்து - மேகத்தில். உரும் உரற்ற - இடி முழங்க. திண்ணிதின் - உறுதியாக. புல்லுநர் - தம்மை முயங்குங் கணவரை. இல்லார் - அருகில் இல்லாதவரான மகளிர். நடுங்க - நடுங்கும்படி. சிறு மாலை - சிறுமை தரும் இம் மாலைப் போது, சிறுமை என்றது, துன்பம. 'திண்ணிதின் நடுங்க வரும' என்று சேர்த்து உரைத்துககொள்ள வேண்டும. (கரு)

## வையை வரவு

[வையை யாற்றின் வளம் முன்னைப் புலவர்களாற் பலபடப் பாராட்டப்பெற்றிருக்கின்றது. அதன் கரையும் துறையும், அருகிலுள்ள வயலும் பொழிலும், குளமும திட்டுகளும் நீர்ப் பெருக்கினால் நிரம்பிய வளமும் பொலிவும் பெற்றுத் திகழ்ந்த உண்மை, இச் செய்யுட் பகுதியில் எடுத்துக் காட்டப் படுகின்றது.]

கரையே, கைவண் தோன்றல் ஈகை போன்மென
மைபடு சிலம்பின் கறியொடும் சாந்தொடும்
நெய்குடை தயிரின் நுரையொடும் பிறவொடும்
எவ்வயி னோனும் மீதுமீ தழியும்;
துறையே, முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்
பொலம்புனை அவிரிழை கலங்கலம் புனன்மணி
வலஞ்சுழி யுந்திய திணைபிரி புதல்வர்
கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தத்தந் துணையோடு ஒருங்குடன் ஆடும்
தத்தரிக் கண்ணோர் தலைத்தலை வருமே;
செறுவே, விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலின்
படுகண் இமிழ்கொளை பயின்றனர் ஆடும்
களிநாள் அரங்கின் அணிநலம் புரையும்;
காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉம்
நரந்த நறுமலர் நன்களிக் கும்மே;
கரைபொழுகு தீம்புனற்கு எதிர்விருந் தயர்வபோல்
கானலங் காவும் கயமும் துருத்தியுந்தேன்
தேனுண்டு பாடத் திசைதிசைப் பூநலம்
பூத்தன்று வையை வரவு.

—பரிபாடல், கசு: க-கக.

வளமான இனிய ஓர் ஆற்றின் ஒழுக்கமானது, சான்றோர் வாழ்க்கை யொழுக்கத்தைப்போல விளங்குகின்றது. வையை யாற்றின் வரவையே இங்கு நினைவுகூறலாம்.

பாண்டியனுடைய ஈகையைப்போல வையையாற்றின் கரையெங்கும் மிளகு கொடிகளும், சந்தனக் கட்டைகளும், தயிர் நுரையைப் போன்ற நீர் நுரைகளும் பிற பொருள்களும் மேன்மேலும சிதறுண்டு கிடந்து அழியும்.

வையையாற்றில் அங்கங்கும் விளங்கும் நீர்த்துறைகளோவெனின், முத்துவடம், தலைக்கோல முத்து, பொன் அணி, பல் வகை மணிகள், நீராடும் புதல்வர்களின் தலையுச்சி யணி என இவையெல்லாம் ஆறைகோரும் அடித்துக்கொண்டு, மகளிர் தத்தம் கணவரோடு கூடி நீராடுகின்ற இடங்கட்கு வந்து சேரும் நிலையுடையன.

அருகிலுள்ள வயல்கள், மலர் சுமந்த நீர் நிறைதலின், மகளிர் ஆடுகின்ற நாடக அரங்கின் பரப்பை ஒத்திருக்கும்; அவ்வரங்கிலும் மலரும் நீரும் சிந்தியிருத்தலின் என்பது.

சோலைகளோ, ஒருவகை மணப் புல்லைப்போல் ஏராளமாக நறுமண மலர்களை வழங்கும்.

வையையாறு நீர் பெருகி வருகின்றபோது, அதற்கு எதிர் விருந்து செய்வதுபோலச் சோலைகளும், குளங்களும் ஆற்றிடைக் குறைகளும், வண்டுகள் தேனுண்டு ஆரவாரிக்க மலர்களைப் பூத்து நாலாபக்கமும் அழகு செய்து நிற்கும்.

சான்றோர் வாழ்க்கையில் நாளும் ஈகையும் இன்பமும் ஆதரவும் பெருகி நிற்றல்போல, வையையாற்றின் நீரோட்டத்திலும் அவை நெடுகக் காணப்படுகின்றன. வையையாற்றின் வரவு இவ்வாறிருந்தது.

**குறிப்புரை:** கை வண் - கைவண்மையுடைய. தோன்றல்- பாண்டியனது. போன்ம் என - போலும் என்னும்படி. மை படு சிலம்பின் கறியொடும் - மேகங்கள் உண்டாகின்ற மலைகளின் மிளகு கொடிகளோடும். சாந்தொடும் - சந்தனக் கட்டைகளோடும். தயிரின் - தயிரைப்போன்ற. எவ்வயினானும் - எவ்விடத்திலும். மீது மீது - மேலு மேலுஞ் சிதறுண்டு கிடந்து. கரை அழியும் என்று உரைத்துக்கொள்ள வேண்டும். கரை எவ்வயினானும் இப் பண்டங்களோடு மீதுமீது அழியும் என்றபடி. அழியும் என்றது, இங்கே மேன்மேல் வளத்தைக் குறித்தது. முத்து நேர்பு புணர் காழ் - ஒத்து முத்துச் சேர்ந்த வடம்; நேர்பு - ஒத்து; காழ் - வடம். மத்தக நித்திலம் - தலையில் வைத்துக் கோலஞ்செய்யும் முத்து. பொலம் புனை அவிர் இழை -

பொன்னால் செயயப்பட்ட விளங்கிய அணி. கலஙகல் அம புனல் மணி - கலஙகலாய் வந்த புனல் கொண்டுவந்த மணிகள்; அம், சாரியை. அதற்குப் பொருளில்லை. வலஞ் சுழி உந்திய முஞ்ச மொடு - வலமாகச் சுழிதத இயற்றப்பட்ட தலைபுசரி அணி; அது திணை பிரி புதலவரது கயம் தலை முசசிய முஞ்சம எனறபடி; திணை பிரி புதலவா எனறா, இல்லத்திலிருந்து நீஙகி நீராடுதற் காகத் தம் தாய் முதலியவரோடு துறைக்குச் சென்ற சிறு பிள்ளைகளாதலின். திணை என்றது இடம்; அது, இஙகே வீடு என்னும் கருத்தில் வந்தது. கயம் தலை முசசிய - மெல்லிய தலையின் உசசியிலிருப்பனவான என்பது. முசசி - உசசி. தழீஇ- சோத்துக்கொண்டு. துணையோடு - துணையாகிய கணவரோடு. ஆடும் - நீராடுகின்ற தததது அரிக கண்ணா - அரி பரந்த கண்ணை ரது; அரி யென்றது செவவரி. தலைத்தலை - இடந்தோறும். வரும் - வரும் நீரையுடையவையாயிருக்கும். செறு - வயல். பூ நீா - பூ ஊறிய நீர். படு கண் இமிழ் - ஒலிக்கின்ற வாத்திய இடங்களின் ஒலியும். கண் - வாத்தியஙகளில் ஒலி தோன்றும் இடஙகள் இமிழ - ஒலி; அந்த இடஙகளின் ஒலி. கொளை - பாட்டுமெ. பயின்றனா - பயின்ற மகளிர். களி நாள் அரங்கின்- களிப்பு மிக்க நாளில் விளஙகிய அரங்கினது. அணி நலம் புரை யும் - ஒப்பனை செய்யப்பட்டாற்போன்ற அழகை ஒக்கும். கா - சோலை. சுரும்பு இமிர் - வண்டுகள் ஒலிக்கும். தலைத்தலை மிகூஉம் - இடந்தோறும் மலர்ந்து பெருகுகின்ற. நரந்தம் - மணமிகக நரநதம் புல்லைப்போல் ஏராளமான. கரைபு - கரைநது. கான் அல் அம கா - இதில், அல் அம் சாரியை; அவற்றிற்குப் பொருளில்லை; கான் காவும் - மணத்தையுடைய சோலையிலும். கயம் - குளஙகளிலும். துருத்தி - ஆற்றிடைக் குறைகளிலும். தேன் - வண்டுகள். பூ நலம் பூத்தன்று - பூவின் அழகு விளஙகியது. வையை வரவு - வையையாற்றின் வரவில்; வரவில் இஙஙனம் பூ நலம் பூத்தது என்றபடி. (கச)

## கார்த்திகை விளக்கொளி

[சங்க காலத்தில், தமிழ் நாட்டில், கார்த்திகை விளக்கொளி விழா தனிச் சிறப்பாகத திகழ்நதிருந்தது. கார்த்திகை நாளன்று மாலையில் வீடுகளில் வரிசை வரிசையாக விளக்குகள ஏற்றி, இருள் போக்கும் அவ் வொளிகளை மக்கள இறைவனாகத தொழுது வழிபடுவர். இச் செய்யுளில் ஒரு கருத்துக்கு அவ் விளக்கொளிகள் உவமமாக எடுத்துக்காட்டப்படுகின்றன.]

ஆர்ப்பெழுந்த ஞாட்பினுள் ஆளாள் எதிர்த்தோடித்
தாக்கி எறிதர வீழ்தரும் ஒண்குருதி
கார்த்திகைச் சாற்றிற் கழிவிளக்கைப் போன்றனவே
போர்க்கொடித் தானைப் பொருபுனல் நீர்நாடன்
ஆர்த்துஅமர் அட்ட களத்து.

—களவழி நாற்பது, கள.

சோழன் செங்கணானுக்கும் சேரமான் கணைக்காலிரும்பொறைக்கும் முன்பு போர் நிகழ்ந்தது. சோழன் வென்றான்; சேரன் சிறைப்பட்டான். பொய்கையார் களவழி நாற்பது என்னும் பாட்டுக்களைப் பாடிச் சோழனை மகிழ்வித்துச் சேரன் விடுதலைக்கு ஆணை பெற்றுத் திரும்பினார். அவர் திரும்புவதற்குள் சேரன், மானந் தாங்காது உயிர் நீத்துப் பெரும்புகழ் எய்தினான். இச் செய்யுள், பொய்கையார் பாடிய அப் பாடல்களுள் ஒன்று.

போர்க்கொடிகள் ஏந்திய சேனைகளையுடைய காவிரி நாடனாகிய சோழன், ஆரவாரித்துப் போரிற் பகைவர்களை மாய்த்த போர்க்களத்தில், அவ்வளவு ஆரவாரம் மிகுந்த போரில், ஆளும் ஆளும் எதிர்த்துச் சென்று தம்முள் தாக்கிப் படைகளை எறிதலால் அவர்கள் உடம்புகளிலிருந்து சொரிந்த செந்நீர்த் துளிகள், கார்த்திகை விழாவில் வைக்கும் ஏராளமான விளக்கொளிகளைப்போற் காணப்பட்டன.

இது, இச்செய்யுளின் பொருள். இதில் வருகின்ற உவமையே நமதுள்ளத்தைப் பெரிதுங் கவர்வது; போரில் பலர் உடம்புகளிலிருந்து குருதி சொரிகின்றது என்று கேட்கும்போது, கேட்பவர் மனம் எவ்வளவோ வருத்தம் அடையும். உண்மையைச் சொல்லியே தீர வேண்டும்; ஆனால், கேட்பவர் உள்ளம், கலங்கி அதனால் வழக்கமான முயற்சிகட்கு ஊறில்லாதபடியுங் காத்துக் கொள்ளவேண்டும். பொய்கையார், அந்த வருத்தச் செய்திக்கு இவ்வளவு நல்ல உவமையை நினைவுகூர்ந்து,

இலக்கிய நயந் தோன்ற உரைத்திராவிட்டால், அதற்குத் தீர்வு ஏது?

குறிப்புரை: ஆர்ப்பு - ஆரவாரம். ஞாட்பினுள் - போரில். எறிதர - படைகளை எறிதலால். ஒண் - நிறமான. குருதி - இரத்தத் துளிகள். சாற்றின் - விழாவின். கழி விளக்கின் - மிக்க விளக்கொளிகளை. தானை - சேனையையுடைய. பொரு புனல் - மோதும் நீரையுடைய. நீர் - காவிரியின்; இது, ஆகுபெயர். நாடன் - நாடனான சோழன். ஆர்த்து - ஆரவாரித்து. அமர் - போரில். அட்ட - பகைவரைக் கொன்ற. களத்து - போர்க் களத்தில். 'அட்ட களத்து ஞாட்பினுள் வீழ்தரும் ஒண் குருதி கழி விளக்கைப் போன்றன' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (கரு)

# 2. புலன்

## அன்பும் செல்வமும்

[மருந்து கொள்வதற்கு மரமும், தவஞ் செய்வதற்கு வலிவும், வரி தொகுப்பதற்குக் குடிகளின் வளமும் காரணமாயிருத்தல் போல, செல்வம் பெருகுவதற்குத் தலைவனுந் தலைவியுந் தம் வாழ்க்கையிற் செய்யும் அன்பே காரணமாயிருக்கின்றது. அவ்வியல்பறிந்து அன்பிற்குப் பழுது நேராத வகையில் அளவோடு பொருளுக்கு முயற்சி செய்யவேண்டும்.]

மரஞ்சா மருந்தும் கொள்ளார்; மாந்தர்
உரஞ்சாச் செய்யார் உயர்தவம்; வளங்கெடப்
பொன்னும் கொள்ளார் மன்னர்; நன்னுதல்!
நாம்தம் உண்மையின் உளமே; அதனால்,
தாம்செய் பொருள்அள வறியார், தாம்கசிந்து
என்றூழ் நிறுப்ப நீளிடை ஒழியச்
சென்றோர் மன்றநங் காதலர்; என்றும்
இன்னா நிலைமைத் தென்ப;
என்னோரும் அறிபஇவ் வுலகத் தானே.

—நற்றிணை, உ௨௬.

பொருளீட்டும் முறையினைப்பற்றி ஓர் அரிய கருத்தை இச் செய்யுள் தெளிவாக வெளியிடுகின்றது அறிந்து கொள்ளவேண்டிய இன்றியமையாத அழகிய கருத்து.

மரத்திலிருந்து, மருந்துக்குரிய பட்டை வேர் பூ இலை முதலியன கொள்வோர், அம் மரம் பட்டுப்போகும் வகையிற் கொள்ளார்; உயர்ந்ததெனப்படும் தவத்தைச் செய்வோரும் தம் வலிமை குன்றிவிடும்படி செய்யமாட்டார்; குடிகளிடத்திலிருந்து வரி கொள்ளும் மன்னரும் குடிகளின் வளங் கெட்டுவிடும்படி பொன் கொள்ளார், இம்மை மறுமைக்குரிய இன்றியமையாத நிகழ்ச்சிகளெல்லாம் இங்ஙனம் அளவோடு நிகழ்ந்து இருதிறத்தும் நலம் பயப்பனவாய் இருக்கின்றன. இருதிறத்தும் என்றது, காரணம் காரியம் என்னும் இரண்டிடத்தும் என்று கொள்ளப்படும்.

மருந்துக்கு மரமும், தவத்துக்கு வன்மையும், வரிக்குக் குடிவளமும் காரணமாகும் மருந்துக்குரிய பட்டை வேர் முதலியவைகளை மரம் இருந்துதானே உதவவேண்டும்? உடல்வன்மை இல்லாமல் தவஞ்செய்வது எவ்வாறு? குடிகளுக்குச் செழுமை இருந்தால் அரசனுக்கு நிரம்ப வரிப்பொருள் கிடைக்கும். ஆதலால், முயற்சிக்கு அடிப்படையான காரணங்கள் கெடும்படி காரியங்கள் செய்தல் நன்றன்று அப்படிச் செய்தால், அந்தக் காரியங்கள் எதிர்பார்த்தபடி நிறைவேறாமல் இரண்டு வகையிலும் சிதைந்து கெட்டுவிடுமன்றோ?

'நம் தலைவர் அங்ஙனம் பொருளீட்டும் அளவு அறியாதவராயிருக்கின்றார்' என்று பிரிவிடை மெலிந்த தலைவி ஒருத்தி, தன்னை ஆற்றுவிக்க முனைந்த தோழிக்குச் சொல்லுவதாக இச்செய்யுள் வருகின்றது

தலைவனுந் தானும் வாழ்க்கையிற் பெருக்கிவரும் அன்புக்குப் பழுதில்லாத வகையில் பொருள் தொகுக்க வேண்டும் என்பது, இங்ஙனம் அவள் சொன்னதன் கருத்தாகும். மேலும், எளிதாகப் பொருள் திரளவேண்டு

மானல், அதனை இந்த அன்பே உண்டாக்கிக்கொடுக்க வேண்டும் என்னும் மற்ருேர் அரும பெருங் கருத்தும் இதிலிருந்து வெளிப்படுகின்றது. வரிப்பொருளுக்குக் குடிவளம் காரணமாதல் போல, தலைவனது பொருள் முயற்சிக்குத் தலைவியின் அன்பே காரணம. அன்பு எங்கும் இயங்கி, தலைவன் செல்லுமிடங்களிலெல்லாம் அவன் முயற்சிகட்கு ஆற்றலும் எளிமையும் பெரும் பயனும் உண்டாக்கி வருகின்றது.

முதன்மையான இவ் வுண்மையை அறிந்துகொள்ளாமல், பொருளையே முதன்மையாக நினைந்து, அதன் காரணமான அன்புக்கும் பழுது நேரும் வகையில் ஆடவர் பிரிந்து செல்வா ரெனின், ஆடவரின் இயல்பே அதுவென்று, அதாவது, அன்பின் தன்மையை அறிந்தொழுகாமையே ஆடவரியல்பென்று துணியவேண்டி யிருக்கின்றது. இது, எல்லாருந் தெரிந்ததுதான். இங்ஙனந் தலைவி வருந்தி இரங்கிக் கூறுகின்றனள்.

குறிப்புரை: சா - சாக; சாகும்படி உரம் - வன்மை. நன்னுதல் என்றது, தோழீ என்னும் பொருட்டு. தம் உண்மையின் - அவர் பிரியாதுள்ளமையால்; உளம் - உயிரோடு உள்ளோம். தாம் கசிந்து என்றாழ் நிழுப்ப நீள் இடை ஒழியச் சென்ருேர மன்ற. நம் காதலா - நம் காதலா வெயில் நிலை கொள்ள நீண்ட வழியிடம் பின்னே ஒழியத் திண்ணமாகத் தாம் வருந்திப் பொருட்பிரிவிற் சென்ருேராயினர். மன்ற - திண்ணமாக. என்றும் இன்ன நிலைமைத்து என்ப - ஆடவரியற்கையே என்றும் இத்தன்மையதென்பர் சான்ருேர். என்ஞேரும் - எத்தகையோரும. இவ்வுலகத்தான் - இவ்வுலகத்தில். (கசு)

## உணர்ச்சியில்லோர் உடைமை

[சான்ருேர், உணர்ச்சியில்லோரது உடைமையை மதியார்; அது தகுதியாகப் பயன்படுவதில்லை. அதைவிட உணர்ச்சியுடையோரது வறுமை பெரிதும் விரும்பததக்கது. பண்டைக்காலத்துப் புலவர்கள், தாம் தம் நலங்கள் பல இழந்தும் உணர்வின் மேன்மையைக் காத்தொழுகினர்.]

வளிநடந் தன்ன வாச்செலல் இவுளியொடு
கொடிநுடங்கு மிசைய தேரினர் எனாஅக்,
கடல்கண் டன்ன ஒண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்குங் களிற்றினர் எனாஅ,
உருமுரற் றன்ன உட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றியர் எனாஅ,
மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே;
எம்மால் வியக்கப் படூஉ மோரே,
இடூமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறாஉம்
சீறூர் மன்ன ராயினும் எம்வயிற்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே;
மிகப்பேர் எவ்வம் உறினும், எனைத்தும்
உணர்ச்சி யில்லோர் உடைமை உள்ளேம்;
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே.

—புறநானூறு, கக௭.

ஒருநாள் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமா வளவனிடம் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பரிசில் விரும்பிச் சென்றார். வளவன் ஏது காரணத்தாலோ புலவர்க்கு உடனே பரிசில் தராமற் காலந் தாழ்த்தினன். புலவர்கள், தேவைக்குப் பொருள் விரும்புவோரேயல்லது, அவாவினால் அது விரும்புவோ ரல்லர். தகுதியும் உணர்ச்சியுமே அவர்கட்கு முதன்மை யும் நோக்கமுமாகும். புலவர், வளவனை நோக்கி உடனே பின்வருமாறு கூறினார்:

'பெருமானே! தேரையுடையவர் என்றும், யானையையுடையவர் என்றும், வென்றியுடையவர் என்றும் வேந்தரது அரசத் திருவினை யாம் மதித்தல் இலம்; எம்மால் மதிக்கப்படுவோர் தகுதியறிந்து அதற்கேற்ப ஒழுகும் பண்பினோரேயாவர். அத்தகையோர் சிற்றரசரேயாயினும் எமக்குக் குறையில்லை. யாம் மிகப் பெரிய துன்பத்தை அடைந்தாலும் உணர்ச்சியில்லாதவருடைய உடைமையைச் சிறிதும் நினையேம். ஏனென்றால், அது தகுதியாகப் பயன்படுதலில்லை: அதனினும், நல்லறிவுடையாரது வறுமை ஓரளவாயினும் பயன்படுதலின், அதனையே யாம் பெரிதும் வியந்து நினைப்பேம்.'

அறிவார்ந்த இவ் வீரமொழிகளைக் கேட்ட வளவனுக்கு உள்ளம் எப்படி இருக்கும்? உலகத்தில், பொருள்களின் ஆற்றலைவிட உணர்வாற்றலே மேலானது. உணர்வாற்றலுக்கு மதிப்புக்கொடுத்து ஒழுக ஒழுகத்தான், அது நிலைபெற்று வழிவழி மக்களுக்குப் பெரிதும் பயன் தரும். அங்ஙனம் ஒழுகுதலில் இடர்கள் வந்தாலும் தாங்கிக்கொள்ளவேண்டும். அவ்வாறு தம் நலமிழந்து உணர்வு காத்து ஒழுகிய ஆசிரியர்கள் பண்டு பலராவர். அத்தகைய சீரியோர்களை அடிக்கடி நினைந்து தம்மைப் புனிதஞ் செய்துகொள்வது பிற்காலத்து வழிவழி மக்களின் இன்றியமையாத கடமையாகும்.

சிறந்ததைச் சிறந்ததென்று கருதும் உள்ளத்தை, உலகிற் பரவச் செய்தலினும் பெரிய பொது வாழ்வு வேறொன்றுமில்லை

**குறிப்புரை:** வளி - காற்று. வா செலல் - தாவுதலான நடையையுடைய. இவுளியொடு - குதிரையோடு. கொடி நுடங்கு மிசைய - கொடி அசையும் உச்சியையுடைய; மிசை - உச்சி. குதிரையோடு உச்சியையுடைய தேர் என்பது. எனாஅ - எனவும். ஒண் படை - ஒள்ளிய படைக்கலங்களையுடைய. தானையொடு - சேனையோடு. மலை மாறு மலைக்கும் - மலையோடு மாறுபட்டுப் பொருகின்ற. உரும் உரற்று அன்ன உட்குவரு - இடி முழக்கினைப் போன்ற அஞ்சுதற்குரிய. செரு - போர். மண் கெழு

வேந்தர், தானை வேந்தர், ஒண் பூண் வேந்தர் என்று சேர்த்துக் கொள்ளவேண்டும். மண் - நிலம். வேந்தர் - வேந்தரது. வெண் குடைச் செல்வம் என்றது, அரசாட்சிச செல்வத்தை என்றற்கு. வியக்கப்படூஉமோர் - வியக்கப்படுவோர்; மதிக்கப்படுவோர். 'இடுமுட் படப்பை...சீறூர் மன்னராயினும்' என்றது, குறுநில மன்னராயினும் என்னும் பொருட்டு. இடு முள் படப்பை - இடப்பட்ட முள்வேலியையுடைய தோட்டத்தில். மறி மேய்ந்து ஒழிந்த - ஆடு மேய்ந்து எஞ்சிய. குறு நறு முஞ்ஞைக் கொழு கண் குறு அடகு - சிறிய மணம் வாய்ந்த முன்னை மரத்தின் கொழுவிய கணுவிற் கிளைத்த குறிய கீரையை. சொன்றியொடு - சோற்றோடு சீறூர் - சிறிய ஊரின் ஆட்சியையுடைய. முன்னைக் கீரையை வரகஞ் சோற்றோடு உணணும் அத்தகைய ஏழை மக்கள் குடியிருக்கும் சிறிய ஊர் என்பது கருத்து. இதனால், அவ் வூரின் ஆட்சியையுடைய வேந்தனுக்கும் எளிமை தோற்றிற்று. எம் வயின் - எம்மிடத்தில். பாடு - தகுதி. எவ்வம் - துன்பம். எனைத்தும் - சிறிதும். உடைமை - செல்வம். உள்ளுதும் - கருதுவம். 'நல்லறிவுடையோர் நல்குரவினைப் பெரும! யாம் உவந்து நனி பெரிதும் உள்ளுதும்' என்று உரைத்துக் கொள்ளவேண்டும். (கஎ)

## உடைமையும் வறுமையும்

[பொருள் கையிலிருப்பது உடைமையும், இல்லாதது வறுமையும் அல்ல; இரவலர்க்கு வழங்கும் பொருளே தம் உடைமை; வழங்காமையால், அவ் விரவலர் கொள்ளும் வறுமையே தம் வறுமை. இப் பயன் இம்மையிலுந் தெரியும்; மறுமையிலுந் தெரியும்.]

கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல் உண்டனம் என்னாது, பின்னும்
செலவா னாவே கலிகொள் புள்ளினம்;
அனையர் வாழியோ இரவலர்; அவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் ஆடவர்
உடைமை யாகும்அவர் உடைமை;
அவர், இன்மை யாகும் அவர்இன் மையே.

—புறநானூறு, கசுக.

'உடைமை' என்பது என்ன, 'வறுமை' என்பது என்ன என்பவைகளை இச்செய்யுள் நன்கு தெளிவுபடுத்துகின்றது. பொருள் கையில் வைத்திருப்பது உடைமையன்று; பிறர்க்கு வழங்கி, அவ்வாறு வழங்குதலால் தாம் பெறுகின்ற பயனே உடைமையெனப்படும்; அங்ஙனம் வழங்காமையாற் பயனிழந்து போதலே வறுமையாம். ஆதலால், செல்வர்களிடமிருந்து எவ்வளவு உடைமை இரவலர்கட்குச் செல்கின்றதோ அந்த உடைமைதான் உண்மையில் அச் செல்வர்களின் உடைமையாகின்றது என்றும், ஆகவே இரவலர்கள் செல்வம் பெறாமல் வறுமைப்படுவது செல்வர்களின் வறுமையாகவே முடிகின்றது என்றும் இதனால் தெரிகின்றது.

இவ்வுண்மையை அறிவோர், 'நேற்றுந் தந்தோம்' என்று உள்ளந் தளராமல் இயன்றபோதெல்லாம் வழங்கிக் கொண்டே இருப்பர்; அல்லாதோர், பொருள்களைத் தம்மிடமே கையிறுக்கமாக வைத்துக்கொண்டு, அவற்றை உடைமை யாக்காமல், மண்ணாக்கி விடுவர்.

பெரும்பதுமனார் என்னுஞ் சான்றோர் இக் கருத்துக்களை இச் செய்யுளில் நன்றாக அமைத்து விளக்கியிருக்கின்றார்:

'தெய்வம் உறையும் ஆலமரத்தின் பெரிய கிளைகளிலுள்ள ஏராளமான ஆலம் பழங்களை நேற்றும் சென்று உண்டோம் என்று நினையாமல் ஒலி பொருந்திய பறவையினம் மேலும்மேலும் செல்லுதலை மேற்கொள்ளும். இரவலர் அத்தகையவரே; அவர் உடைமையே, அவரைப் புரத்தற்கு எதிர்கொள்ளும் பெருஞ் செய்கையையுடைய ஆண்மக்களின் உடைமை; அவர் வறுமையே அப் புரவலர் வறுமையுமாகும்' என்பது இச் செய்யுளின் பொருள்.

இவ்வாறு செல்வர்கள் நினைத்து அன்பும் அருளும் கனிந்து விளங்குவார்களானால், நாட்டில் எல்லா மக்களும் வாழ்க்கைச் செவ்வி அடைந்து, ஒருவரால் ஒருவருக்கு

ஏதும் தீங்கில்லாதபடி இனிது வாழ இடமுண்டாகு மன்றோ! வாழ்க்கையின் இனிமைக்கு எது வழி என்று ஆராய்ந்து காணுமல், ஆரவாரங்களிற் சென்று அழிவத ஞல் யாது பயன்?

குறிப்புரை: கடவுள் ஆலம் - தெய்வத்தன்மை தங்கிய ஆலமரத்தின். தடவு - பெரிய. நெருநல் - நேற்று. என்னுது - என்று நினையாமல். பின்னும் - மேலுமேலும். செலவு ஆனு - செல்லுதலில் ஓர் அமைதிகொள்ளா; அதாவது, சென்று கொண்டேயிருக்கும் என்பது கருத்து. ஆனு - அமையா; அதாவது, அமைந்து நில்லா என்பது. கலி - ஓசை. வாழி, ஓ, அசைச்சொற்கள்; அவற்றிற்குப் பொருளில்லை. அவரை - அவ் விரவலரை. புரவு - காத்தல். செய் - செய்கை. ஆடவர் என் ரா, அங்ஙனம் காத்தலாகிய பெருஞ் செயகையையுடையவரே ஆண்மக்கள் எனப்படுவர் என்பதற்கு. அவர் உடைமை - அவ் விரவலர் பெற்ற உடைமை. 'அவர் உடைமை, பெருஞ்செய் ஆடவர் உடைமையாகும்; அவர் இன்மை அவர் இன்மையாகும்' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். அவர் இன்மை - அவ் விரவலரது வறுமை. அவர் இன்மையாகும் - அச் செல்வர்களின் வறுமையாகும். (கஅ)

### அழகு

[பண்டைத் தமிழர்கள் அழகு முதிர்ந்து விளங்கினர்கள். அவர்கள் அழகு, கண்களுக்குமட்டும் விருந்தளிப்பதாக இல்லை; கண்களை விட நெஞ்சத்துக்கே மிக்க விருந்தளிக்கும் உணர்வழகாக விளங்கியது. இதனால், அவர்கள் நாகரிகச் செவ்வி நன்கு உணரப்படுகின்றது.]

மயில்கொல் மடவாள்கொல் மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்-குயில்பயிரும்
கன்னி இளஞாழல் பூம்பொழில் நோக்கிய
கண்ணின் வருந்தும்என் நெஞ்சு.

—திணைமொழி ஐம்பது, சக.

அழகு இந்தக் காலத்திலேதான் சிறந்து விளங்கு கின்றதென்று சிலர் கருதுகின்றார்கள். பண்டைக்காலத்

தின் இலக்கியங்களைப் பார்த்தால், அந்தக் காலத்தவர், எவ்வளவோ அழகு மிக்கவர்கள் என்று தோன்றும்.

மாதர்கள் மயிலைப்போல இருப்பார்களாம்; இளமை யழகு வடிவுமாம்: அரமகளிரைப்போல விளங்குவார்களாம்; இப்படி இலக்கியங்களில் வருகின்றன. அவர்களை எப்படி அழகில்லாதவர்கள், நாகரிகமில்லாதவர்கள் என்று சொல்லுவது? அவர்கள் அழகுகளை எண்ணினால் இந்தக் காலத்தவர்களின் அழகுக்குத தோல்விதான் உண்டாகும் என்று தோற்றுகின்றது.

கடற்கரைச் சோலையில் ஒர் ஆண்மகன் ஒரு பெண்மகளைக் கண்டான்; உளம் கூட்டுவித்தது; அன்பாற் பிணிப்புண்டு அளவளாவிப் பிரிந்தனர். பின்னொரு நாள் அவ்வாண்மகனின் பாங்கனும் அச்சோலைக்கு உடன்வந்தான. தலைவன் அவனிடம பின்வருமாறு சொலலுகின்றான்:

'பாங்கரே, இதனைக் கேட்பீர், யான் அன்று கண்டயாது மயில்தானே, அல்லது இளமைச் செவ்வி வடிவும பெண் கொழுந்துதானே; மிக்க நீராகிய இக் கடலின் அலைகளிடையே வாழும் நீரர மகளோ? குயில்கள கூவுகின்ற ஞாழல் மரங்கள் நிறைந்த அழகிய மிக்க இளஞ் சோலையாகிய இவ்விடத்தில் அவளை உற்று நோக்கிய என் கண்களைவிட, என் நெஞ்சம் மிகவும வருந்தி விரும்புகின்றது!'

கண்களைப் பிணிக்கும் அழகைவிட நெஞ்சத்தைப் பிணிக்கும் அழகாக அவள் அழகு விளங்கியதென்று தலைவன் கூறுவது எவ்வளவு கவர்ச்சி மிக்கதாயிருக்கின்றது!

**குறிப்புரை**: மயில்கொல் - மயிலோ. மடவாள்கொல் - நங்கையோ. மாநீர் என்றது, கடல். பயில்வதோர் - பழகி வாழ்கின்ற ஒரு. தெய்வங்கொல் - தெய்வமகளோ. கேளீர் - கேட்பீராக; ஆண்டில் முதிர்ந்த பாங்கனாதலின் பெருமை தோன்றப் பன்மையாகக் கூறினன். பயிரும் - கூவும். கன்னி என்பதும் இளமையைக் குறித்தலின், 'கன்னி இள' என்றதற்கு

'மிக்க இளமை' என்று உரைத்துக்கொள்ளப்படும். இன்னுங் காய்த்தலின்றி முதன்முதலாக மலர்ந்து விளங்கும் இளஞ்சோலை என்பது கருதது. பொழில் - பொழிலில். கண்ணின் - கண்ணை விட. (கக)

# 3. மனம்

## மலரும் முள்ளும்

[சிலர் செயல்கள், மலரையும் முள்ளையும்போல இருக்கின்றன. ஒருவரிடமே இவ் விருநிலையும் காணப்படுவதும், அதற்கு ஏற்ப ஒரு செடியே மலர்வதும் முள்ளாவதும், இயற்கையில் அமைவது ஒரு சித்திரமன்றோ !]

நோம்என் நெஞ்சே, நோம்என் நெஞ்சே;
புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக
கட்கின் புதுமலர் முள்பயந் தாஅங்கு,
இனிய செய்தநம் காதலர்
இன்னா செய்தல் நோம்என் நெஞ்சே.

—குறுந்தொகை, உ0உ.

மக்களிற் சிலர், முதலில் இனியவராக நடந்து நட்புச் செய்து மகிழ்ச்சியுண்டாக்குகின்றனர்; பின்பு இனிமை யில்லாதவராக மாறிவிடுகின்றனர். அதுமட்டுமன்று, குத்துதல்போன்ற கொடுஞ் செயல்களையுஞ் செய்ய முற் பட்டுவிடுகின்றனர்

சிலர், கண்ணுக்கு இனியவராய்த் தோற்றத்தில் அழகு மிகுந்து காணப்படுகின்றனர்; ஆனல் அவரை அணுகினல் அவர் செயல்களோ முள்ளைப்போலிருக்கின்றன.

இத்தகைய மக்களியல்புக்குச் சங்ககாலத்துப் புலவன் மார் ஓர் எடுத்துக்காட்டுக் காட்ட முற்பட்டனர் புலவர் கண்கள். மற்றவர் கண்களை விடக் கூரானவையல்லவா ? அறிவு, இயற்கையை ஊடுருவியது. கடைசியில் அதற்கு, புன்செய் வெளிகளில் நெருங்கிப் படர்ந்திருக்கும் சிறிய இலைகளையுடைய நெருஞ்சி முட்செடி தென்பட்டது.

நெருஞ்சிமுள், முதலில் அச் செடியில், கண்ணுக்கு இனிய புது மலராகத் தோன்றும். பின்பு அம் மலரே காயாகிப் பழுத்தால், முள்ளாக மாறும். 'நெருஞ்சி முள்' என்பது, உண்மையில் அச் செடியின் பழமேயாகும். முதலிற் கண்ணுக்கு இனிய புது மலராக இருந்தது பின்பு இங்ஙனம் இன்னலைத் தருகின்ற முள்ளாக மாறிநின்றால், அது பழமேயாயினும் அதனை யார் விரும்புவர்? தகுந்த எடுத்துக்காட்டாக இது புலவர்க்குத் தோன்றியது.

ஆடவரிற் சிலர், காதலுடைய தம் இல்லக் கிழத்தியரிடம் முதலில் இன்முகங் காட்டி அன்புடையராய் ஒழுகிப் பின்பு கொடுமை பூண்டு அன்பிலராயிருப்பதும் உண்டு. ஒருகால், அத்தகைய கணவனுக்காகத் தோழி பரிந்து பேசியபோது, தலைவி, 'என் நெஞ்சு நோவும், என் நெஞ்சு நோவும். முதலிற் கண்ணுக்கு இனிய நெருஞ்சிப் புதுமலர் பின்பு முள் பயந்தாற்போல, முன்னெல்லாம் இனியன செய்த நம் காதலர் இப்போது இன்னாதன செய்தலால் என் நெஞ்சு நோவும்' என்று வருந்திக் கூறுவதாக இப் பாட்டு இயற்றப்பட்டிருக்கின்றது.

தலைவிதான், வருந்தாமல் என்ன செய்வாள்? புலவர் தாம், இந்த எடுத்துக்காட்டினைக் காட்டாமல் எப்படி விடுவார்?

**குறிப்புரை:** நோம் - நோவும்; வருந்தும். நெஞ்சே என்பதில் ஏ அசை. புன் புலம் - புன்செய் நிலத்தில். அமன்ற - நெருங்கிப் படர்ந்த. சிறி இலை - சிறிய இலை. நெருஞ்சி - நெருஞ்சிச்செடியின். கட்கு இன் - கண்ணுக்கு இனிய. பயந்தாஅங்கு - உண்டாக்கினாற்போல. இனிய - இனிமையான அன்பின் செயல்களை. இன்னா - இன்னாதன; இனிமையல்லாதன; அதாவது, இனிமையல்லாத கொடுஞ் செயல்களை. செய்தல் - செய்தலால். (௨0)

## செல்வர் உள்ளமும் புலவர் உள்ளமும்

[செல்வர் உள்ளம் பருமையில் உழலும்; புலவோர் உள்ளம் ஒரோவொருகாற் பருமைக்கு வருமாயினும் நுட்பத்திலேயே உலவும். இவர் கண் இது; அவர் கண் அது. இதனால்,

பருமையாளர் நுண்ணுணர்வாளரை அறியாது பிழைபடுதலும் உண்டு. அக் காலத்தில், தமது தகுதியை இழவாமற் காத்துக் கொள்ளுதலே நுண்ணுணர்வாளர் செயலாயிருக்கின்றது.]

ஒல்லுவ தொல்லும் என்றலும் யாவர்க்கும்
ஒல்லா தில்லென மறுத்தலும் இரண்டும்,
ஆள்வினை மருங்கின் கேண்மைப் பாலே;
ஒல்லா தொல்லும் என்றலும் ஒல்லுவ
தில்லென மறுத்தலும் இரண்டும், வல்லே
இரப்போர் வாட்ட லன்றியும், புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை;
அனைத்தா கியர்இனி இதுவே; எனைத்தும்
சேய்த்துக காணாது கண்டனம்; அதனால்
நோயில ராகநின் புதல்வர்; யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னஎன் நல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாள்நுதல்
மெல்லியல் குறுமகள் உள்ளிச்
செல்வல் அத்தை சிறக்கநின் நாளே.

—புறநானூறு, ககசு.

ஆவூர் மூலங் கிழார் என்னும் புலவர் ஒருநாள் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்னும அரசனிடம் போனார். அவன் விரைவிற் பரிசில் அளியாது காலந் தாழ்த்தான். புலவர் வாயிற் பின்வரு மாறு சொற்கள் பிறந்தன:

'பார்க்கும், முடிந்ததை முடியும் என்று கொடுத்த லும் முடியாததை முடியாது என்று மறுத்துவிடுதலும், தம் தாளாண்மை வகையும் நட்பு வகையுமே யாகும். அங்ஙனமன்றி, முடியாததை முடியும் என்று சொல்லிக் காலங் கடத்தலும் முடிந்ததை முடியாதென்று மறுத்துக்

கையிறுக்கஞ் செய்தலும், இரப்போரை அலைக்கழித்தலல்லாமலும் ஈவோர் புகழும் குறைபடும் வாயிலாகும்.' இப்போது நீ செய்த செய்கையும் அத்தகையது. நெடுங்காலமாக எங்கள் மரபினர் காணாத ஏமாற்றத்தை இன்று யாம் கண்டனம். அத் தீங்கினால், நின் மக்கள் நோயில்லாமல் இருக்கவேண்டும்.'

புலவர்க்கு அதற்குமேல் அங்கே இருப்புக் கொள்ளவில்லை. அவர் ஏதோ பெரும்பரிசில் பெற்று வருவார் என்று கருதி அவர் வருகையை எதிர்நோக்கிக்கொண்டு அவர் மனைவியார், இல்லத்தில் காத்திருப்பார். கல்லை இழைத்தது போலப் பெயராது இறுக்கங்கொண்டு வறுமையே அங்கு நிலைத்திருக்கின்றது இல்லம் காற்றுக்குச் சற்று அடைப்பு; அவ்வளவுதான ; மழையை மறைக்க உதவாது ; வெயிலையும் பனியையும் மறைககப் போதாது. மனைவியாரோ மெல்லிய சாயலுடையார், அவருடைய நெற்றியின் விளக்கத்தை நோக்கினால் அவர் தக்க பேரறிஞர் என்று விளங்கும் : மிக்க கற்பொழுககமுடையவர்; அவர்க்கு இருககும அணிகலனெல்லாம நாணம அல்லது வேறில்லை.

ஆவூர் மூலங்கிழார், தமக்கு அரும் பெரும் பொருளாயிருக்கும இவ் வமமையாரையும பிரியமுடியாமற பிரிநது, நெடுநதொலைவு நடந்து அரசனிடம வந்தார. இனி அவனிடம் அவருக்கு என்ன வேலை? தம நனைவியாரின் அருமையும நினைவும் அவருள்ளத்தில் எழுந்தன. பொருளுண்டோ இல்லையோ உடனிருந்தாற்போதும என்னுங் கருததினா இவ் வாழ்க்கைத் துணைவர் இருவரும. அரசனை நோக்கிப் புலவர் பின்னுஞ் சில தொடர்நது கூறினர் :

'யானும், இனி வெயிலென வெறுபபுக்கொள்ளாமல் பனி யெனச் சோம்பியிராமல் உடனே வழி நடநது, கல்லை இழைத்தாற் போலத திண்ணென்றிருக்கும் எனது வறுமைக்கு உறையுளாகிக் காற்றுக்குச் சற்று மறைவாயிருக்கின்ற எனது வீட்டின்கண் உள்ள, நாணம் என்ப

தன்றி வேறு அணிகலன்கள் எவையுமில்லாத கற்பும் ஒளி நெற்றியும் மென்சாயலுமுடைய என் துணைவியாகிய எளியோளை நினைத்துச் செல்வேன், நின் வாழ்நாள் மிகுவதாக!'.

பாண்டியன் உள்ளம் திடுக்கிட்டது. புலவர் தாம் சொன்னதைச் சொல்லிவிட்டார். என் செய்வது? தனது நாட்டில், தனது ஆட்சியிலா இத்தகைய வறுமை! அதுவும், ஆவூர் மூலங்கிழாரைப் போன்ற புலவர் பெருமக்களின் இல்லத்தில்!

புலவர் தன்னை நோக்கிக் கூறிய நேருரைகளைப் பாண்டியன் நினைந்து நினைந்து உள்ளம் நொந்தான்; அவன் உள்ளத்திற்கு ஏற்பட்ட இவ்வருத்தம், பிற வகைகளால் உண்டாவதாகுமோ? புலவர், இத்தகைய அணிவுரையினால் தமது கருத்தைக் காவாது வேறு வகையில் இழந்திருப்பாராயின், பாண்டியனுக்கும் வழிவழி உடைக்கும், எவ்வளவு பொல்லாங்கினைச் செய்தவராய் ஒழிவர். பண்டைக்காலத்தில் உணர்வுப் பாதுகாப்பு, புலவர்களிடம் இவ்வாறு நன்கு விளங்கியிருந்தது.

குறிப்புரை: ஒல்லுவது - முடிவது. ஒல்லும் - முடியும். ஆள்வினை மருங்கின் - தாளாண்மைப் பக்கத்தோடு கூடிய. கேண்மைப் பாலே - நட்பின் கூறேயாம். வல்லே - விரைவாக. வாயில் - வாயிலாகும். அத்தை, அசை; அதற்குப் பொருளில்லை. இச் செய்யுளின் கடைசி வரியிலும் இச் சொல் அசையாக வந்திருக்கின்றது. அனைத்தாகியா - அத்தன்மையதாகுக; அத் தன்மையிற் சேரும் என்பது கருத்து. இனி இது - இப்போது இந் நிகழ்ச்சியும். எனைத்தும் - சிறிதும். சேய்த்து - நெடுங் காலமாக. காணது - காணததது; எமமனோர் காணததை. அதனல் - அத்தகைய கொடுமையாகிய இதனல். அறிஞர்கள் உள்ளம் வருந்துமாறு செய்யும் செயல்களால் வாழ்நாட் குறைவும் பிள்ளைகட்கு நோயும் உண்டாதல் இயல்பாதலால், 'நின் புதல்வர் நோய் இலராக' என்று புலவர், தமக்கு இயற்கையாக உரிய இரக்கத்தால் ஒரு வாழத்து இங்கே கூறவேண்டுவது கட்டாயமாயிற்று. கடைசி வரியில் 'நின் நாள் சிறக்க' என்று வாழ்த்தியதும் நினைவுகூர்தல்வேண்டும். நாள் - வாழ்நாள்; ஆயுள். சிறக்க-

மிகுவதாக என்பது. முனியேன் - முனியேனாய். மடியேன் - மடியேனாய். குயின்றன்ன - இழைத்தாற்போன்ற. நல்கூர் - வறுமை; வறுமைக்கு உறையுளாகிய. வளி மறை - வளிக்கு மறைவாகிய வீடு; காற்றுக்கு மட்டும் மறைவாகிய வீட்டின்கண் உள்ள. குறு மகள் - எளிய மாது, எளிய வாழ்க்கைத்துணையை என்பது கருத்து. உள்ளி-நினைத்து செல்வல்-போவேன். (உக)

## நிலைவின் திண்மை

முட்டு வேன்கொல்? தாக்கு வேன்கொல்?
ஓரேன்; யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆஅ ஒல்லெனக் கூவு வேன்கொல்?
அலமரல் அசைவளி அலைப்பஎன்
உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே.

—குறுந்தொகை, உஅ.

ஒரு செயல் நிறைவெய்த வேண்டுமானால், நினைவு, உரம் பெறல் வேண்டும். உரம் பெறுதற்கு இயற்கை வழியே சிறந்தது. அறிவோடு தொடர்புகொள்ளும் போது, நினைவு, மேலும் உரம் பெறுகின்றது. அன்பு முதலியவற்றோடு கூடும்போது அது பின்னும் பின்னும் பேருரம் பெற்றுச் செயலுறுகின்றது. அன்பிலும் பல படிகள் உண்டு. காதலன்பு, நினைவை நன்கு உரமேற்று கின்றது. அந்நிலையில் வெளிப்பட்ட சொல் ஒன்று இச் செய்யுளில் வருதலால் அதன் முறுக்கமும் உருவமும் இங்கே இனிது புலப்படுகின்றன. ஆற்றல் சான்ற ஔவை யார்தாம் இச்செய்யுளை அருளினார்.

தலைவிக்குக் காதலன்பு நிறைதுளும்பலாய் மிகுந் திருக்கின்றது. மண நிகழ்ச்சிக்குப் பொருள் தொகுத்து வரும்பொருட்டு வெளி நாடு சென்ற தலைவன் இன்னும் வந்திலன். தலைவியின் நினைவு அன்பிற் பிணிப்புண்டது. அவள் நினைவு மேன்மேல் முறுகி உரமேறியது. தலைவிக்கு இரவெல்லாம் உறக்கம் பிடிக்கவில்லை அசைந்து அசைந்து வருகின்ற தென்றல் மிகவும் வருத்துகின்றது. ஊரோ

அமைதியாக உறங்குகின்றது. தலைவியின் வருந்துதலையுடைய நோயை ஊர் ஒரு சிறிதும் அறியவில்லை. தான் வருந்துதலும் ஊர் ஒன்றும் அறியாது உறங்குதலும் அவளுக்குப் பொறுக்க முடியவில்லை. ஏதாவது ஒரு காரணத்தை மேலிட்டுக்கொண்டு 'ஆ' 'ஒல்' என்று கூவலாமா என்று ஒருபக்கம் தோன்றுகின்றது எங்கேனும் முட்டிக்கொள்வேனோ, தாக்கிக்கொள்வேனோ என்றும் ஒருபக்கம் தோன்றுகின்றது.

தலைவியை அவள் நினைவு சும்மா இருக்கவிடவில்லை. அவ்வளவுக்கு அது, உரமேறி முறுகிவிட்டது. நினைவுக்குச் செயற்கையாக அவ்வளவு உரமேற்றுதலென்றால் அது முடிகிற காரியமா ?

**குறிப்புரை :** முட்டுவேன்கொல் - எங்கேனும் முட்டிக் கொள்ளமாட்டேனோ? தாக்குவேன்கொல் - எதனாலேனும் தாக்கிக்கொள்ளமாட்டேனோ? ஓரேன் - ஒன்றும் அறியேன். ஊர் ஒன்றும் அறியாததுபோல யானும் ஒன்றும் அறியேன் என்பதற்காக, 'யானும்' என்று உம்மை கொடுத்தார். ஓர் பெற்றி மேலிட்டு - அல்லது ஒரு காரணத்தை மேலிட்டுக்கொண்டு. ஆ, ஒல் என்பன, கூவுதலின் ஒலிக்குறிப்புக்கள். அலமரல் - மெல்லச் சுழன்றுவருதலையுடைய. அசை வளி - அசையும் மென் காற்று; என்றது, தென்றல். அலைப்ப - என்னை வருத்த. உயவு நோய் - வருந்துதலையுடைய காமநோயை. ஊர்க்கு - ஊரின் பொருட்டு. 'ஊரின்பொருட்டு ஆ ஒல் எனக் கூவுவேன்கொல்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். கூவுவேன் கொல் - கூவுவேனோ. (உஉ)

## எண்ணியாங்கு எய்துதல்

[நினைத்தலும், மீட்டு மீட்டும் எண்ணுதலும், எண்ணி எண்ணி எண்ணத்தின் வண்ணமாய் உலகியலைப் மருளலும் இயல்பாகவே மக்கட்கு நிகழுகின்றன. இவை நினைவின் படி முறைகளைக் காட்டுகின்றன. நினைவு, மருளல் வரையில உயரவேண்டியிருக்கின்றது. அந்நிலையிற காரியம நன்கு நிறைவேறுகின்றது.]

உள்ளினெ னல்லெனோ யானே ; உள்ளி
நினைத்தனெ னல்லெனோ பெரிதே ; நினைத்து

மருண்டனெ னல்லெனே உலகத்துப் பண்பே;
நீடிய மரத்த கோடுதோய் மலிர்நிறை
இறைத்துணச் சென்றற் றுஅங்கு,
அனைப்பெருங் காமம் ஈண்டுகடைக் கொளவே.

—குறுந்தொகை, கக.

அரும் பெருங் கருத்தொன்று இச் செய்யுளில் நுட்ப திட்பமாக வருகின்றது இயற்கையின் நடைமுறையாகிய அழகிய மறைபொருள் அது.

பொருள் காரணமாகப் பிரிந்த தலைமகன் பொருள் நிறைவேறப்பெற்றுத் திரும்பி வந்தான். தோழி, 'உங்களுக்கு எங்கே எங்களை நினைக்க நேரமிருக்கிறது' என்று கேட்டாள் அதற்குத் தலைமகன், 'நான் நினைக்காமலா இருந்தேன்; நினைத்து எண்ணாமலா இருந்தேன்; எண்ணி உலகியல்புகளைக் கண்டு மருளாமலா இருந்தேன்' என்று ஒன்றுக்கு மூன்று கூறினான்.

தோழி: நான் ஒன்று கேட்டால் நீங்கள் மூன்று சொல்லுகிறீர்களே!

தலைவன் நான் கவலைகொண்ட அவ்வளவு நீங்கள் கவலைகொள்ளவில்லை; அதுதான், நினைப்பது ஒன்றிலேயே நீங்கள் இருக்கிறீர்கள்.

தோழி: ஆனால், நீங்கள் மீண்டும் மீண்டும் நினைத்து, எண்ணமிட்டு, உலகியற்கைகளையும் உங்கள் எண்ணத்தின் உருவாய்க் கண்டு மருண்டுமிருக்கிறீர்களா!

தலைவன்: இல்லாவிட்டால், வெள்ளம்போலப் பெருகியிருந்த ஆவல் இப்போது இவ்வளவு குறுகிவிடுவதற்குக் காரணமான நமது சந்திப்பினை, நாம் பெற்றிருப்போமா?

தோழி: ஓ! இருவர் சந்திப்பிற்கு ஒருவர்மட்டுந்தான் நினைத்து, எண்ணி, மருண்டிருக்கவேண்டுமென்று எவ்வளவு துணிந்து சொல்லுகிறீர்கள்!

தலைவன் தானுக்கூற்றான்; தோழியும் தலைவியும் தன்னைப்போலவே நினைவு முதலியவற்றில் பங்குகொண்டிருந்ததை அறிந்து, அவன் இன்பம இன்னும் பன்மடங்கு பெருகியது. நினைதலும், நினைந்து நினைந்து எண்ணுதலும், எண்ணி எண்ணி எண்ணத்தின் வண்ணமாய் உலகியல்புகளைக் கண்டு மருளுதலுமான இயற்கை நிகழ்ச்சிகள், கருதிய காரியத்தின் நிறைவேற்றத்துக்கு எவ்வளவு இயற்கைக் காரணங்களாயிருக்கின்றன! இச் செய்யுளின் ஆசிரியர் ஔவையார்

**குறிப்புரை:** உள்ளினென் அல்லெனோ - நான் நினைத்தேனல்லேனோ; அதாவது, நான் நினைக்காமலிருந்தேனோ என்றபடி; நினைத்துக்கொண்டுதான் இருந்தேன் என்பது கருத்து. உள்ளி நினைத்தனென் அல்லெனோ - நினைத்து எண்ணினேன் அல்லேனோ: முதலில் உள்ளுதல் வந்தமையால், பின்பு நினைத்தல் என்றது, மீட்டும் மீட்டும் உள்ளுதலாலான எண்ணுதலாயிற்று. மருண்டனென் அல்லெனோ - மருட்சிகொண்டேன் அல்லேனோ. பண்பு - இயல்புகளைக் கண்டு. உலகத்தின் இயற்கைப் பொருள்களாகிய மான், மயில் முதலியவற்றைக் கண்டால், தன் தலைவியின் உருவைப்போலவே கருதி மருளுதல், இங்கே 'மருண்டனெனல்லேனோ' என்பதனால் பெறப்பட்டது. நீடிய மரத்த கோடு தோய் மலிர் நிறை - உயர்ந்த மரங்களினுடைய கிளைகளும் தன்னுள் மறையும்படி மிக்குப் பெருகும் வெள்ளமானது இறைத்து உணச சென்று அற்றாங்கு - கடைசியில் இறைத்து உண்ணும்படி அவ்வளவு குறைந்து சென்றாற்போல. அனைப் பெருங் காமம் - அங்கே எனக்கிருந்த அவ்வளவு பெரிய ஆவலானது, ஈண்டு கடைக் கொள - இங்கே நமது சந்திப்பினால் குறைந்த இறுதி எல்லையைக் கொள்ளும்படி. 'கடைக்கொள யான் உள்ளினெனல்லெனோ, உள்ளிப் பெரிது நினைத்தனெனல்லெனோ, நினைத்து உலகத்துப் பண்பே மருண்டனெனல்லெனோ எனச் சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். (உ௫)

## மறுதலை நினைவு

[நினைவை மாற்றிப் பழகும் நன்முறையினைப் பண்டைக்காலத்துத் தமிழ் மக்கள் நன்கு அறிந்து, வாழ்க்கையிற் கடைப்பிடித்துப், பல நலங்களை அடைந்து விளங்கினர். தூய்மையின்மைக்கு மறுதலையாகத் தூய நினைவையும், துன்ப நினைவுக்கு மறுதலை

யாக இன்ப நினைவையும் போல்வன உள்ளத்திற் கொண்டு வருதலே இது.]

பாம்பளைச் செறிய முழங்கி வலனேர்பு
வான்தளி பொழிந்த காண்பின் காலை
அணிகிளர் கலாவம் ஐதுவிரித் தியலும்
மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்
வீபெய் கூந்தல் வீசுவளி உளர
ஏகுதி; மடந்தை! எல்லின்று பொழுதே;
வேய்பயில் இறும்பிற் கோவலர் யாத்த
ஆபூண் தெண்மணி இயம்பும்
உதுக்காண் தோன்றும்எம் சிறுநல் லூரே.

—நற்றிணை, உ௬௪.

'பாம்பு வளையினுள்ளே அஞ்சி அடங்கிவிடும்படி மேகம் முழங்கும். வளையில், பாம்பு வளைந்து செறிந்திருக்கும். அதுபோல வானத்தில் மேகம் வளைவாகச் செறிய எழுந்து வலமாய் முழங்கி வருகின்றது' என்று ஓர் உவமையும் கொள்ளும்படி இச் செய்யுளின் முதற்பகுதி அமைந்திருக்கின்றது.

மேகம் எழுந்தால் மயிலுக்கு மிக்க கொண்டாட்டம்: மேகம் மழை பொழிந்த காட்சியையுடைய காலை நேரத்தில் மயில் தன் அழகு விளங்கிய தோகையை வியப்புத் தோன்ற விரித்து ஆடும்: அப்போது நீலமணியை ஒத்த அதன் கழுத்து வழுவழுப்பாய் நிமிர்ந்து நிற்பதும் மிக்க காட்சியாயிருக்கும்.

'இங்ஙனம் தோகை விரித்து ஆடுகின்ற மயிலைப் போல் இனி நீ, வீசுகின்ற காற்று மலர்பெய்திருக்கும் நின் கூந்தலை அவிழ்த்து விரித்துவிட, மடந்தாய்! விரைந்து மகிழ்வோடு செல்வாய்' என்று தன் தலைவியை நோக்கித் தலைவன் சொல்லுவது இச் செய்யுளில் அடுத்து வருகின்ற உவமை.

தலைவி தன் தலைவனோடு உடன்போக்கில் வந்தாள். பகல் வெயிலெல்லாம் நடந்து கதிரவன் மறைந்த மாலைப் போதில் ஊருக்கு அருகில் வந்தார்கள். ஊர் அருகில் மூங்கில்கள் செறிந்த ஒரு மலை அங்கே ஆநிரைகள் தங்கியிருப்பது வழக்கம். கோவலர் ஆக்களின் கழுத்தில் மணிகள் கட்டியிருந்தனர். ஆக்கள் அணிந்துகொண்ட அத் தெளிவான மணிகள் அப்போது ஒலிப்பது, அருகில் வந்துகொண்டிருந்த தலைவனுக்கும் தலைவிக்கும் கேட்டது. உடனே தலைவன், தன் தலைவியை நோக்கி, 'உதோ எமது சிறிய நல்லூர் தெரிகின்றது; ஞாயிறும் மறைந்து ஒளி மழுங்கியது' என்றான் அப்போதுதான் தலைவன், மேற் காட்டிய மயில் உவமையைத் தலைவிக்குப் பயன்படுத்திக் கூறுகின்றான்.

தலைவி மயிலைப்போல் மகிழ்வாய் விளையாடிக்கொண்டு நடப்பதையும் அப்போது அவள் கூந்தல் மயிலின் தோகையைப்போல் அவிழ்ந்து விரிந்து இடையிடையே பூக்கள் விளங்குவதையும் பார்ப்பதில், தலைவனுக்கு எவ்வளவுதான் இன்பம் இருக்கின்றது!

மாலைநேரத்திற் காலை வானத்தின் நினைவு; கொடிய வெயிலின் களைப்பில் மழைப் பெயலின் நினைவு; அஞ்சத் தகுந்த பாம்புகள் உலவும் அந்தி வேளையில், அப் பாம்புகட்குப் பகையாகிய இடியையும் மயிலையும்பற்றிய நினைவு! எதற்காக இத்தகைய அமைப்பு இச் செய்யுளில் அமைய வேண்டும்?

துன்ப வுணர்வுகளை நினைவினாலேயே மாற்றிக்கொள்ளும் முறைகள மிகவும் நுட்பம் வாய்ந்தவை பகலெல்லாம் தன்னுடன் வெயிலில் நடந்து களைத்து வரும் தலைவியின் துன்பத்தை மாற்றி ஆறுதல் அடைவிக்கும் பொருட்டுத் தலைவன் செய்யும் விரகுகள் இவை. இன்னல் நேரத்தில் அதன் மறுதலையான இனிமை பயக்கும் நினைவுகளை உள்ளத்திற் கொண்டுவருதல், வாழ்க்கை வளர்ச்சியின் நுண்முறைகளுள் ஒன்று. நினைவு மாற்றிக்கொள்

ளும் இந் நன்முறையின் அடிப்படையிலிருந்து, எத்தனையோ வகையான நலங்கள் வாழ்க்கையில் கிளையோடி மலர்ச்சி பெறுகின்றன!

நன்முறைகளை அறிந்து வைத்து, அவற்றை உற்ற நேரங்களிற் பயன்படுத்திக்கொண்டு மகிழாவிட்டால், அறிவு சான்ற மக்கட்பிறப்பினை அடைந்தும அதனை வீணாக்கிய குற்றமன்றோ உண்டாகும!

குறிப்புரை: அளை - புற்றின் வளை. செறிய - அஞ்சிச் செறியும்படி. வலன் ஏர்பு - வலமாக எழுந்து. வான் - மேகம். தளி - மழை. காண்பின் - காட்சியையுடைய. காண்பு - காட்சி. காலை - காலை நேரத்தில். அணி கிளர் - அழகு விளங்கிய. கலாபம் - தோகையை. ஐது - வியப்புத் தோன்ற. இயலும் - ஆடுகின்ற. மணி புரை எருத்தின் - நீலமணியை ஒத்த நிமிர்ந்த கழுத்தினையுடைய. மஞ்ஞை - மயில். வீ - மலர். வீசு வளி உளர - வீசுகின்ற காற்றினுல் அவிழ்ந்து விரிய, எகுதி மடந்தை- மடந்தையே நீ செல்வாய். எல் இன்று பொழுது - பொழுது எல் இன்று; ஞாயிறு ஒளி இலதாயிற்று; ஞாயிறு ஒளி மழுங்கி மாலைநேரமாயிற்று என்பது கருதது. பொழ்து - ஞாயிறு. வேய் பயில் - மூங்கில்கள் செறிந்து வளர்ந்திருக்கின்ற. இறும்பில் - சிறிய மலையில். யாத்த - கட்டிய. ஆ பூண் - ஆககள் பூண்ட. இயம்பும் - ஒலிக்கின்ற. 'இயம்பும் எம் சிறு நல்லூர் உதுக்காண் தோன்றும்; எல் இன்று பொழுது; மடந்தை மஞ்ஞைபோல எகுதி' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். உதுக் காண் தோன்றும் - உதோ பார் தோன்றுகின்றது. மிகத் தொலைவிலும் மிக அண்மையிலுமின்றி இடைப்பட்ட இடத்தில் எதிராகத் தோன்றும் எதனையும் சுட்டிக் கூறுவதற்கு 'உது' என்பது வழக்கம். உது, சுட்டுச்சொல். (உச)

## சிறந்த செல்வம்

[செல்வம், தளராத உழைப்பினல் உண்டாதல்வேண்டும. பிறரால் விரும்பிப் பாராட்டப்படும் நிலையில், பழி பாவமில்லாத வழியில் ஈட்டப்பட்டிருத்தல்வேண்டும். பழுமரம் உள்ளூர்ப் பழுத்தது போலப் பிறர்க்கு ஒப்புரவும் ஈகையும் உடையதாய் விளங்குதல்வேண்டும். அது சிறந்த செல்வம்.]

கறங்குமிசை யருவிப் பிறங்குமலை நள்ளி!நின்
அசைவில் நோன்தாள் நசைவளன் ஏத்தி
நாடொறும் நன்கலம் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசில்முற் றளிப்பப்
பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெம் சிறுசெந் நாவே.

—புறநானூறு, கசஅ.

'நள்ளி! நின் தளர்வில்லாத வலிய முயற்சியினலான செல்வத்தைப் புகழ்ந்து, அதன்பின், அத்தகைய பீடில்லாத ஏனை மன்னர்களின் முகமன் கருதி அவர்கள் செய்யாதனவெல்லாம் பொய்யாகக் கூறிப் புகழ்தலை எமது சிறிய செவ்விய நாக்கு அறியாததாயிருக்கின்றது' என்று இங்ஙனம் வன்பரணர் என்பவர் கண்டீரக்கோப் பெருநள்ளியை நோக்கிக் கூறுவதாக இச் செய்யுள் வருகின்றது. மற்றொரு கருத்தையும் இச் செய்யுளில் அவர் கூறுகின்றார். 'நாடோறும், நெற்கூடு விளங்கும் நின் அகன்ற அரண்மனையின் முன், யானைகளோடு அணிகலன்களைக் கொண்டு வந்து பரிசிலர்க்கு முழுதும் நீ பரிசிலளித்தலால்' அத்தகைய அன்போடளாந்த நினது வளத்தை ஏத்திவிட்டு, அந்த அன்பின் பெருமையில்லாத ஏனை மன்னர்களின் நிலையைப் பாராட்டுதற்கு எமது நாக்கு எழவில்லை என்பது.

நள்ளியின் செல்வம், தளராத வலிய முயற்சியினல் வந்தது; பலராலும் விரும்பிப் புகழப்படுவது; மேலும், பலர்க்கும் பயன்படுவது. அத்தகைய செல்வம், உண்மையில் நிலையற்றதாயினும் நலம் பொருந்தியிருத்தலின் பாராட்டுதற்குரியதாயுள்ளது. அவன் வளத்தை ஏத்துதலென்பது அவனை ஏத்துதலே. மற்றவரைப் பாராட்டுதல் எவ்வாறு பொருந்தும்? நலம் இருந்தன்றே பாராட்டல் வேண்டும். செய்யாதனவெல்லாம் செய்ததாகக் கூறுதல் நல்ல நாக்குக்கு ஒக்குமா?

பண்டைக்காலத்துப் புலவர்களின் மெய்ப்போக்கு இதனாலும் நன்கு விளங்குகின்றது.

**குறிப்புரை :** மிசை - உச்சியிலிருந்து. கறங்கும் - ஒலித்து இழிகின்ற. அருவி - அருவியையுடைய. பிறங்கும் - உயர்ந்த. அசைவு இல் - தளர்வு இல்லாத. நோன் தாள் - வலிய முயற்சியினாலான. நசை - பிறரால் நசசப்படுகின்ற; அதாவது, விரும்பிப் பாராட்டப்படுகின்ற. நன்கலம் - அணிகலம். கூடு - நெற்கூடு. வியல் நகர் - அகன்ற மாளிகையின் முன். முற்று - முழுதும். அளிப்ப - அளித்தலால்; செய்யா - செய்யாதன. கிளத்தல் - இங்கே, புகழ்தல் என்னும்பொருட்டு. எய்யாதாகின்று - அறியாதாகின்றது. 'நள்ளி, அளித்தலால் நின் வளன் ஏத்திப் பின், செய்யா கூறிக் கிளத்தல் எம் நா எய்யாதாகின்று' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். (உரு)

## விருப்பு வெறுப்பு

[காமம், விருப்பு வெறுப்புத் தரும் மலத்தின் தன்மை; காதல், சமநிலை அன்பாகிய உயிரின் உணர்வு. காமம், நிலைத்த தொடர்பினைத் தராது, வாழ்க்கையில் மயக்கங்களும் துன்பங்களும் விளைக்கும்.]

வேம்பின் பைங்காய்என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர்; இனியே,
பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்;
ஐய அற்றால் அன்பின் பாலே.

—குறுந்தொகை, ககசு.

மிக்க விருப்பமிருந்தால், கசப்புள்ள பண்டங்களும் இனிப்பது போலத் தோன்றும். மிக்க வெறுப்பிருந்தால் இனிப்புள்ள பண்டங்களும் கசப்பது போலத் தோன்றும். அதனாலேதான், விருப்பு வெறுப்பின்றி மக்கள் அமைதியான சமநிலையில் விளங்கவேண்டும் என்பது. அப்படி விளங்கினால், ஏதொன்றை நோக்கினாலும், அப்போது

அதன் உண்மைத்தன்மை மாறுபாடின்றித் தோன்றும்; அதாவது, கசப்புப் பொருள் கசப்பாகவும், இனிப்புப் பொருள் இனிப்பாகவும் தோன்றும் என்பது. ஆதலால், சமநிலையில் உள்ளவர்கள் ஒழுக்கம், என்றும் மெய்யொழுக்கமாக முடிகின்றது.

ஆண் பெண் மக்கள் தம்முள் உயிருணர்வாகிய காதலால் நேசிக்காமல், அவா என்னும காம நினைவால் அளாவுகுவராயின், முதலில் விருப்பாகவும் பின்னர் வெறுப்பாகவும் இருக்க நேரும் உடம்பு நன்றாயிருக்கும் வரையில், வேறு இடையூறுகள் இல்லாதிருக்கும் வரையில், விருப்பமாய் ஒழுகுவார்கள்; தலைவி வேப்பங்காய் தந்தாலும் தலைவனுக்கு அப்போது அது, இனிப்புக்கட்டியாய் இருக்கும். பின்பு, சிலகாலங் கழித்து, உடம்பு தளர்ந்து அழகு மாறினாலும், வேறு இடையூறுகள் உண்டானாலும், அவர்களிடம் வெறுப்புத் தோன்றிவிடும். அப்போது, தலைவி குளிர்நத இன்சுவை நீர் தந்தாலும், தலைவன் அது வெப்பமாய் உவர்ப்பாய் இருக்கின்றது என்பான். அம் மக்கள், தம்முள் காதலால் நேசித்திருந்தால், இவ்வாறெல்லாம் அவை நிலைமாறித் தோன்ற மாட்டா.

'காதல்' என்பது தெய்வத்தன்மை வாய்ந்தது; அது, சமநிலைத் தன்மை; அது, உயிரின் உணர்வு நிலை. 'காமம' என்பது உயிருணர்வன்று, அது, உயிரைப்பற்றிய மலததின் தன்மை. விருப்பு வெறுப்புத தன்மை. நுட்பமும் முதன்மையுமான இவ் வேறுபாடு மிகவும் திட்டமாக அறிநதுகொள்ளுதறகுரியது

தலைவனுக்கும் தலைவிக்கும் ஒருகால் ஊடல் நேர்ந்தது. உண்மைக் காதலர்க்குள் ஊடல், வேண்டுமென்றே ஏதாவதொன்றின்மேல் நேரும்; அன்பின் இயல்புகளுள் இங்ஙனம் நேர்தலும் ஒன்று. தலைவன் தோழியின் உதவியை நாடினன். அவளும் வேண்டுமென்றே தலைவன் மேல் ஒரு குற்றம் கூறக் கருதி, 'நீங்கள் காதலால் நேசித்

திருந்தால் இப்படி இடையிடையே ஊடல் வரக் காரண மில்லை; காமத்தால் தலைவியை அணுகினீர்கள்போலும்' என்னுங் கருத்துப் புலப்படும்படி, இச் செய்யுட்பொருளைக் கூறினாள். அது வருமாறு :

'முன்பெல்லாம, வேம்பின் பச்சைக் காயை என் தலைவி தந்தால், அது அழகான இனிப்புக்கட்டி என்றீர்கள்: இப்போதோ, பாரிவேளின் பறம்பு மலையிலுள்ள குளிர்ந்த சுனையின் தெளிந்த நீரை, அதுவும் தைத்திங்களிற் குளிர்ந்த நீரைக் கொண்டுவந்து தந்தாலும, அது வெப்பமாய் உப்பாய் இருக்கின்றது என்கின்றீர்கள்! ஐயா, உங்கள் அன்பின் தன்மை இங்ஙனம் காமத்தின் தன்மையாயிருக்கின்றது. இதற்கு நான் என்ன செய்யலாம்?' என்பது.

உள்ளபடியே தோழி என்னசெய்ய முடியும்? இந்த ஊடலுக்குத்தான் உண்மைக் காரணம் ஒன்றுமில்லையே! அவரவர் மன நிலையே அவரவர் பேறு.

**குறிப்புரை:** பைங் காய் - பசிய காய். தோழி - இங்கே, என் தலைவி என்னும்பொருட்டு. தே - இனிய. பூங் கட்டி - அழகு வடிவமாய்த தோன்றுங கட்டி. இனி - இப்போது. தைத் திஙகள் என்பது தைஇத் திங்கள் என்று செய்யுள் ஓசைக்காக அளபெடுத்து நின்றது. தண்ணிய - குளிர்ந்த நீர்களை; இஙஙனம் பன்மையாகக் கூறியது, 'சுனை நீரைப் பல தடவை கொடுத்தாலும் அத்தனைத் தடவையும் அந்த நீர்கள்' என்னும பொருட்டு. வெய்ய - வெய்யவாய். வெப்பமுடையனவாய்; தண்ணிய எனப் பன்மையாகக கூறியபடி வெய்ய என இதனையும் பன்மையாகக் கூறினார். ஐய - ஐயா. அன்பின்பால் - உங்கள் அன்பின் வகை. அற்று - அததகையது; அதாவது, காதலைச சேர்ந்ததன்று; காமத்தைச சேர்ந்தது என்று குறும்பாகக் கூறியபடி. (உசு)

## கனவு நிலை

[கனவு என்பது நுண்ணுடம்பின் நுகர்வு; அந்நுகர்வின் பயன் பருவுடம்பையும் பொருந்தும். இன்பமான நல்ல கனவினால் உடமபு அமிழ்தமாகின்றது; அழகும் நலமும் பெறுகின்றது.

உணர்வின் நிலைமைக்கேற்ப, இங்ஙனம் நுண்ணுடம்பின் இனிய நுகர்வும் பருவுடம்பின் நலனும் உண்டாகின்றன.]

தோள்துறந் தருளா தவர்போல் நின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
ஆடுகோட் டிருந்த அசைநடை நாரை
நனியிருங் கங்குல் நந்துயர் அறியாது
அளியின்று பிணியின்று விளியாது நரலும்
கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை என்றி யாயின்,
நனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டியான் செய்தது.

—கலித்தொகை, கஉஅ : க - கூ.

கனவுநிலை உயிரை நுண்ணுடம்பில் இருத்துகின்றது மேலே இருக்கும் பருவுடம்பின் உள்ளே உள்ளது நுண்ணுடம்பு. நுண்ணுடம்பின் நுகர்ச்சிகள் பருவுடம்பையும் பொருந்தும் உயிரின் ஒளியால் நுண்ணுடம்பு மேலு மேலும் விளக்கமும் நலமும் எய்தும்; அந்த விளக்கமும் நலமும் பருவுடம்பையும் பொருந்துகின்றன. அதனால், பருவுடம்பு அழகு பெற்றுத் தோன்றும் இந் நுட்பமுணர்ந்த சான்றோர், அடிக்கடி நுண்ணுடம்போடு செறிந்து அதனை மேலுமேலும் தூயதாக்கி அதனால், தம் பருவுடம்புக்கும் நலம் விளைத்துக்கொள்வர்.

நுண்ணுடம்பின் நுகர்வு 'கனவு' எனப்படும், பருவுடம்பின் நுகர்வு 'நனவு' எனப்படும். இன்பமான நல்ல கனவுகள் உடம்பை அழகாக்குகின்றது. இச் செய்யுட் பகுதியில் அந் நலன் எடுத்துக்காட்டப்படுகின்றது.

திருமண முயற்சிகட்காகத் தலைமகன் பிரிந்திருக்கின்றான், தலைவிக்குப் பிரிவாற்றாமை உள்ள நேரம். தலைவியின் பொலிவு வாடியுள்ளது திடுமென ஒருநாள் காலையில் தலைவியின் இயற்கையழகு பொங்கித் தோன்றியது

தோழி, 'என்ன அம்மா, நம் தலைவனைக் கண்டாய்போலப் புதிய அழகினைப் பெற்றிருக்கின்றாய்' என்று கேட்டாள். தலைவி, உண்மையைச் சொல்லும்படி நேர்ந்தது: 'ஆம் நனவில் வாராத அந்த நயனிலாளரைக் கனவிற் கண்டு யான் செய்தது இது' தோழிக்குச் செய்தி விளங்கியது. இப்படி எண்ணி எண்ணி உருகும் தலைவிக்கு விரைவில் திருமணம் நேரவேண்டும் என்று தனக்குள் வேண்டிக் கொண்டாள்.

கனவு கண்ட இரவில், தலைவி நெடுநேரம் உறக்கங் கொள்ளாமல் இருந்தாள். வாடைக்காற்று வேறு அவளை வருத்தியது. அந்தக் காற்று, பக்கத்திலுள்ள தாழை மரங்களின் வளைந்த கொம்பைத் தாக்கித் தாக்கி விட, அதன்மேலே இருந்த நாரையானது கூவத் தொடங்கி விட்டது. தலைவியின் வருத்தத்தை அது அறியவில்லை; அதற்குக் காதல் நோய் ஒன்றுமில்லை. தன்னைப் பிரிந்து தனக்கு அருள் செய்யாத தலைவனது செயலைப்போலவே அந்த நாரையின் செயலும் அப்போது அவளுக்குத் தோன்றியது. தலைவி, கடற்கரைச் சேரியில் இருப்பவள், அதனாலே அவளுக்கு இத் தொல்லைகள் நேர்ந்தன. தலைவனும் அக் கடற்கரை நாடுகளின் தலைவன். இச் செய்திகளும் இச் செய்யுட்பகுதியில் வருகின்றன.

**குறிப்புரை:** **தாக்க** - அசைத்தலால். **வணங்கிய** - வளைந்த. **ஆடு கோட்டு** - அசையுங் கொம்பிலே. **அசை நடை** - அசைந்த நடையினையுடைய. **நளி இரு கங்குல்** - செறிந்த கரிய இரவில். **அளி இன்று** - நம்மிடம் இரங்குதலின்றி. **பிணி இன்று** - காதல் நோய் இன்றி. **விளியாது நரலும்** - விடாமல் கூவுகின்ற. **கானல் அம் சேர்ப்பனை** - சோலைகளையுடைய கடற்கரைத் தலைவனாகிய நம் தலைவனை; இதில் அம், சாரியை. **புதுவது** - புதியதான. **கவினினை** - அழகினையுடையை. **என்றியாயின்** - என்று நீ கூறுகின்றாயாயின். **நயனிலாளனை** - அன்பில்லாத நம் தலைவனை. **யான் செய்தது** - யான் இன்புற்றது. (உ௭)

## வசவு

[சில நாகரிகமான வசவுச் சொற்கள் தமிழகத்தில் கையாளப்படுவதுண்டு. அறிவுடைய மக்கட் பிறவியிற் பிறந்தும், அப் பிற

விக்கேற்ற அறிவொழுக்கத்தில் ஒழுகாதவரை 'நீ மனித னல்லே' என்று கூறுவதே அது. விலங்குப் பிறப்பே என்பது பொருளாயிற்று. மனித்தப் பிறவியின் விழுப்பத்தை முற் கால மக்கள் நன்கு தெரிந்திருந்ததே இங்ஙனங் கூறுதற்குக் காரணம்.]

செவ்விய தீவிய சொல்லி அவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யானியாங் கறிகோமற் றைஇய
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகல்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன் ;
மகனல்லை மன்ற இனி.

—கலித்தொகை, ௧௯ : ௧ - ௬.

திட்டமொழிகள் உலகிற் பல உண்டு. இச் செய் யுட் பகுதியில் ஒரு நாகரிகமான வசவுச் சொல் வருகின்றது.

தலைவன் தலைவியை முதலிற்கூடி அளவளாவியபோது, நேர்மையும் இனிமையுமான சொற்களைச் சொல்லி மெல்ல நட்புக்கொண்டு முயங்கினான். 'எப்போதும் நின்னைப் பிரியமாட்டேன் ; பிரிந்தாலும் ஆற்றமாட்டேன்' என்று தலைவிக்கு அவன் உறுதி சொன்னதுண்டு ஆனால், திரு மணம் நடந்துவிட்டபின், அடிக்கடி தலைவன் பொருள் முதலிய முயற்சிகட்காகப் பிரிய நேர்ந்தது, சிலகால மானால் தலைவி பொறுத்துக்கொள்வாள ; நீண்டகாலப் பிரிவும இடையே நேர்ந்தது. தோழி தலைவனை நெருங் கிச் சொல்லுகின்றாள் :

'அந்தக் காலத்தில் நேர்மையாகவும் இனிமையாகவும் சொன்ன சொற்கள் இங்ஙனம பொய்யாதலை யான் அப் போது எங்ஙனம் அறிவேன் ? வீட்டிலுள்ளவர்களால் அடக்க முடியாத அலர் மொழிகளை எங்களிடம் நிறுத்தி, ஞாயிறு முனிந்த கொடிய காட்டின்வழிச் செல்ல நினைத் தலை அறிந்தேன் ; நீ இனித் திண்ணமாய் மகன் அல்லை.'

நீ மனிதப் பிறவியிற் பிறந்தும் மனிதனல்லை என்று வைவதை விடக் கொடிய வசவு ஒன்று உண்டோ! அறிவுடைய தலைவனுக்கு இதனினும் வேறே என்ன வேண்டும்? முன் தான் சொன்ன சொற்களெல்லாம இப்போது அவன் நினைவுக்கு வந்தன.

**குறிப்புரை :** செவ்விய - நேர்மையான சொற்களையும். தீவிய - இனிய சொற்களையும். பைய - மெல்ல. யாங்கு - எங்ஙனம். மற்று, அசை. அகல் நகர் - அகன்ற மனையிலுள்ளவர்களால். கொள்ளா - தாங்க முடியாத. அலர் - வெளியார் அலர் மொழிகளை. தலைத் தந்து - எங்களிடம் உண்டாகச் செய்து. பகல் முனி - கதிரவன் காய்ந்த. சுரம் உள்ளல் - சுரத்திற் பிரிந்து செல்ல நினைத்தலை. மன்ற - திண்ணமாக. (உஅ)

### பாவையாடல்

[உலகம் வளமாயிருத்தற்கும் நலமாயிருத்தற்கும், நினைவாற்றல் மிகுவோரின் எண்ணம் இன்றியமையாதது. பண்டைக்காலத்தில் கன்னி மகளிர் தைந்நீராடுதலாகிய நோன்பு ஒன்று உடையராயிருந்தனர். கன்னி மகளிரின் இவ்வாடல், 'பாவையாடல்' எனப்பட்டது. 'உலகில் மழை வளம் மிகுக' என நோன்பின் முடிவில் அவர்கள் வேண்டிக்கொள்வது வழக்கம். 'எமக்குக் காதற் கணவர் பொருந்துக' என வேண்டுவதும் உண்டு.]

கனைகதிர் அதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து,
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து,
மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப,
வெம்பா தாக வியன்நில வரைப்பென
அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்,
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமணல் அருவியின்

ஊதை ஊர்தர உறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பின்
தையல் மகளிர் ஈரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று;
மையாட லாடல் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பின் அவரவர்
தீயெரிப் பாலும் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்
நீயுரைத்தி வையை நதி.

—பரிபாடல், கக · எச - கூஉ.

மகளிர் நோன்பு நோற்பது, தமிழ் நாட்டில், பண்டைக்காலத்திலிருந்தே வழக்காயிருக்கின்றது. நோன்புக்கு மகளிர் மிகவும் உரியவர்கள். அவர்கள் அமைதியும் மென்மையும் நோன்புக்குப் பெரிதும் துணை செய்யும். மணமாகாத பருவ நங்கையர், ஏதொரு கவலையும் தளர்வும் அறியாத மின்னுற்றல் நிரம்பிய கன்னி மகளிராதலின், அவர்கட்கு நோன்பு மிகவுஞ் சிறந்த பெரும் பயன் விளைக்கும். சங்க காலத்தில் கன்னி மகளிர் நோற்று வந்த நோன்பு ஒன்று இச் செய்யுட்பகுதியில் வருகின்றது.

நோன்புக்குப் புலனடக்கம் கட்டாயமானது. குளிர் காலம் இயல்பாகவே அந் நலத்தைத் தருகின்றது. அதனால் உள்ளத்தின் நினைவாற்றல் பின்னும் வலுப்படுகின்றது. அதனாலேதான், நமது நாட்டில் மழை கால குளிர் காலங்களில் நோன்பு நாட்கள் கொள்ளப்பெற்றிருக்கின்றன. மழை காலத்திலும் குளிர் காலமாகிய மார்கழி மாதம் நோன்புக்குப் பின்னும் ஏற்றதாகும். மார்கழி மாதம் நோன்பு மாதம் என்றே சொல்லப்படும். அப்படியே, ஒரு நாட்பொழுதில் விடியற்காலமே நோன்புக்குரிய நேரமாகும். மார்கழி மாதத்தில் விடியற்காலம் பனி மிகுந்து மிகவும் குளிரெடுக்கும். அந்நேரத்தில் 'சில்'லென்ற

குளிர்ந்த நீரில் நீராடுவார் நிலை எவ்வாறிருக்கும்? புலன் அடங்கி உள்ளம் உறுதி பெறுதற்கு இன்னும் வேறு வேண்டுமோ?

ஒவ்வொரு மாதத்திலும் முழுநிலாவுடன் கூடி வருகின்ற நாள் ஆற்றலுடைய நாள். மார்கழி மாதத்தில் அவ்வாறு மதி நிறைந்த நன்னாள் திருவாதிரை. மார்கழி மாதம் திருவாதிரை நாள் வரப்போகின்றதென்று, முன்னிருந்தே மக்கள் ஆர்வமாய் எதிர்பார்த்துக்கொண்டிருப்பர். அந் நன்னாளில் மகளிர் விடியலில் எழுந்து குளிர்ந்த நீரில் நீராடி நோன்பு நோற்று ஒன்று எண்ணினால், அந்த எண்ணம் உறுதியுற்று இயங்கி உலகிற் பயன்படுகின்ற இயற்கையாற்றல் அமைந்ததாய் இருக்கின்றது.

கன்னி மகளிர் இளமகளிராதலின் அவர்கள் அந் நாள் விடியலில் தம் தாய்மாரொடு சென்று ஆற்றில் நீராடி நோன்பு நோற்பது வழக்கம். கன்னி மகளிர் பலரும் அங்ஙனம் ஒருவரோடொருவர் சேர்ந்து செல்வர். பாவை என்பதற்குக் 'கன்னிப் பெண்' என்பது பொருள். கன்னி மகளிரின் நீராடல் 'பாவை யாடல்' எனப்பட்டது. காலத்தை நோக்கி 'மார்கழி நீராடல்' என்றும், சில காலங்களில், மார்கழிக்குரிய காலத்தில் தை மாதம் பிறந்து விடுதலால் 'தைந்நீராடல்' என்றும் சொல்லப்படும்.

நீராடும்போது, மகளிர் உமையைப்போலவும் சிவத்தைப்போலவும் இணையிணையாய்க் கோலம் பூண்டு மகிழ்வர். இங்ஙனம் முழுமுதற் றெய்வத்தோடு ஒற்றுமைப்பட்ட நோன்பென்னும் ஒருமை நினைவினால், பின்பு, 'உலகம் மழை பெய்து குளிர்வதாக' என்று வாழ்த்துவர்; தத்தமக்கு உள்ளம் அமைந்த காதலர் அமைக எனவும் வேண்டுவர்.

திருவாதிரை நாளில் சிவபிரானுக்கு விழா நிகழ்த்தி வழிபாடு செய்தல் வழக்கம். ஞான நூலையுடைய சிவ அந்தணர் விழாத் தொடங்கினர். பூணூலையுடைய பிற அந்தணர் விழாவுக்குரிய பொற்கலங்களை ஏந்தி நின்றனர்.

மார்கழிமாதமாதலால், கார்காலம்போல் வெள்ளமின்றி வையையாற்றில் நீர் தெளிந்து நீராடுதற்குரிய தகுதியில் வந்தது. ஆற்றின் கரையில் நான்மறை முனிவர் முத்தீ வேள்வி வளர்த்துக்கொண்டிருந்தனர்.

கன்னி மகளிர் பலர் தொகுதி தொகுதியாக நீர்த் துறைக்கு வந்து சேர்ந்தனர். முனிவரரின் பெண்டிர், நோன்பு செய்யும் முறையை அம் மகளிர்க்குத் துணையாயிருந்து அறிவிக்க, அவர்கள் அப் பனி மிக்க விடியற் காலத்தில் நீராடி நோன்பு நோற்றனர். அதன்பின், கரையில் அங்கங்கும் முனிவர் வளர்க்கின்ற வேள்வித்தீயின் அருகிற் சென்று, அம் மகளிர், ஊதைக்காற்றின் குளிர்க்கு ஆற்றாது தம் ஈர ஆடையை உலர்த்திக்கொண்டனர்.

இங்ஙனம் வையையாற்றில் மகளிர் தைந்நீராடுதல் பற்றி இச் செய்யுட்பகுதியிற் குறிப்பு வருகின்றது. 'வையையே! இளங்கன்னியர், முன்பு பலகால் தவத்தைச் செய்தோ, இவ்வாறு தம் தாய்மார் அருகிலிருந்து அதுவும் நினது நீரில், தவத் தைந்நீராடுதல்?' என்று இறுதியாக வருகின்ற குறிப்பு, மிகவும் உருக்கமாயிருக்கின்றது. அக் காலத்தில், இத்தகைய நோன்புகளாலெல்லாம் உலகம் பல வளங்களினும் நலங்களினும் தழைத்து விளங்கியது. பிற்காலங்களில் இந் நோன்பு, மேலும் பற்பல வகையாக விரிவடைந்துள்ளது.

**குறிப்புரை:** கனைக்கும் அதிர் குரல் - ஒலிக்கின்ற நடுங்குதற்கு ஏதுவான இடிக்குரலையுடைய. கார் வானம - மழை மேகங்கள். பனி படு - பனி மிகுதலால். பைதல் - குளிரினால். விதலை - நடுக்கத்தையுடைய. காயா - மிகுதியாக வெயில் உண்டாககாத. நளி - குளிர்ச்சி மிகக. மாரி - பனி மழையையுடைய. பிற்குளம் - திருவாதிரை நாளில்; மார்கழித் திருவாதிரை நாளில் என்றபடி. விரி நூல் அந்தணர் - மெய்ப்பொருள் விரிக்கும் ஞானநூலையுடைய சிவ அந்தணர்; அவர் ஆதிசைவர் என்றும குருக்கள் என்றுங் கூறப்படுவோர். புரி நூல் - முப்புரி நூல்; பூணூல். பொலஙகலம் - பொற்கலஙகள். ஏற்ப - ஏந்த. வெம்பாதாக - வெப்பத்தால் வெம்மை கொள்ளாதாகுக;

அதாவது, மழையால் குளிர்வதாகுக என்றபடி. வியன் நில வரைப்பு - அகன்ற இந் நிலவெல்லை. 'வியன்நில வரைப்பு வெம்பாதாகுக என அம்பா ஆடலைச் செய்யும் ஆய் தொடிக் கன்னியர்' என்று கொள்ளவேண்டும். அம்பா - தாய்; தாயின் அருகிலிருந்து நீராடுதலால், தைந்நீராடல் 'அம்பாவாடல்' எனப் பட்டது. தொடி - வளை யணிந்த. முனித் துறை - தவத் துறையினையுடைய. முதல்வியர் - முதிய பெண்டிர். முறைமை - நோன்பு செய்யும் முறைமையை. பனிப் புலர்பு - பனியையுடைய புலரிக் காலையில். ஆடி - நீராடி. பரு மணல் - பரு மணலை யுடைய. அருவியின் - ஒழுகி வருகின்ற நீரிலிருந்து. ஊதை - குளிர் காற்று. ஊர்தர - வீசுதலால். உறை சிறை வேதியர் - சிறைக்கண் உறைகின்ற முனிவரது. சிறை யென்றது இங்கே ஆற்றின் கரையை; நெறி நியிர் - அருள் நெறி பற்றி வளர்ந்த. நுடங்கு அழல் - கொழுந்தோடி அசையும் வேள்வித் தீயை. பேணிய - போற்றிக்கொண்ட. தையல் மகளிர் - ஒப்பனையை யுடைய அக் கன்னி மகளிர்; முன்னே 'கன்னியர்' என்றதை மீண்டுந் 'தையல் மகளிர்' என்றபடி. ஒப்பனை என்றது, உமையை யும் சிவத்தையும் போலச் செய்துகொண்ட ஒப்பனை. ஈர் அணி - தம் ஈர ஆடையை. புலர்த்தர - உலர்த்த. வையை - வையை யாறே. மடை - வேள்வியில் கொடுத்த அவியுணவு. வாய்த் தன்று - வாய்த்தது; நினக்குக் கொடுத்ததாயிற்று; வையை நீரையே இறைவியாக எண்ணி மகளிர் அவ் விறைவியாகிய அரு ளில் நீராடி நோன்பு செய்தமையால், முனிவர் அம்மையப்ப ராகிய முதல்வற்குத் தரும் அவியுணவு, வையைக்குக் கொடுத்த தாயிற்று எனப்பட்டது. மையாடல் ஆடல் - மஞ்சளாகிய மையைப் பூசிய எழுத்தோலையை முதன்முதற் கையிற்கொண்டு சிறு பிள்ளைகள் கல்வி கற்கத் தொடங்கும் நிகழ்ச்சி. மையாடல்- மை பூசுதலையுடைய ஓலையை. ஆடல் - முதன்முதலாகக் கை யாளுதலுடைய. மழ புலவா - இளம் புலவர்களின் விளையாட் டுக்கு; கற்கத் தொடங்கும் சிறு பிள்ளைகளை 'மழ புலவர்' என்றார். மாறு - மாறாக. பொய் யாடல் - காமக் குறிப்புடை யார் போலப் பொய்யாக விளையாடுதலுடைய புணர்ப்பின் - ஆய மகளிரின் சேர்க்கையோடு. அவரவர் - அவ்வக் கன்னி மகளிரும். பள்ளிப் பிள்ளைகளைப்போல அவர்க்கு மாறாக விளை யாடுதலுடைய இளமகளிர் என்றபடி. தீ எரிப் பாலும் - தீய்க் குஞ் சுடரையுடைய நெருப்பிடையிருந்தும். நீரின்கண் அன்றித் தீயின்கண்ணும் என்றபடி. செறி தவம் முன் பற்றியோ -

புலனடங்கிய தவத்தை முன்பெல்லாம் மேற்கொண்டோ. தாய் அருகா - தாயின் அருகாக. தவத் தைந்நீராடுதல் - நோன்பாகிய தைந்நீராடுதல். உரைத்தி - சொல். வையை - வையையாறே. தவத்தை முன் செய்தமையினலோ வையையே இம் மகளிர் இப்போது நின்பால் தைந்நீராடுதல் என்றபடி. (உக)

---

## 4. உள்ளம்

### வளமும் குணமும்

[குணம் என்பது உதவுங் குணமாகும். வளம் இருந்தால் அக் குணம் உண்டாகும் என்று சிலர்க்குத் தோன்றலாம். ஆனல், குணம் இருப்பவர்க்கே வளம் உண்டாவது இயற்கையா யிருக்கின்றது. குணம், முயற்சியாற்றலைக் கொடுத்துப் பின்னா வளத்தை உண்டாக்குகின்றது.]

வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோன் எந்தை இசைதனதாக;
வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்ததும்பின ;
புறவே, புல்அருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும் பின்று ;
கடலே, கால்தந்த கலன்எண்ணுவோர்
கானல் புன்னைச் சினைநிலைக் குந்து ;
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கல் நன்னாட்டு உமண்ஒலிக் குந்து ;
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே,
பொராஅப் பொருநரேம் ;
குணதிசை நின்று குடமுதல் செலினும்,
குடதிசை நின்று குணமுதல் செலினும்,
வடதிசை நின்று தென்வயின் செலினும்,

தென்றிசை நின்று குறுகாது நீடினும்,
யாண்டு நிற்க வெள்ளி; யாம்
வேண்டிய துணர்ந்தோன் தாள்வா ழியவே.

—புறநானூறு, ௩௮௬.

தமிழ் நாட்டின் நானிலச் செழுமையையும் பண்டைத் தமிழரசரின் ஈகை இயல்பினையும் ஒரு சிறிது எண்ணினாலும், நமக்குக்கூட 'வெள்ளி எந்தப் பக்கம் முளைத்தால் என்ன' என்னும் நினைவு ஒரோவொருகால் எழாமலில்லை. ஆனால், நாட்டினைப் பண்டுபோல் மேலுமேலுஞ் செழுமை செய்து கொடைக் குணத்தையும் வளரச்செய்துவந்தாலன்றோ அந்நினைவு நிலைபெறும்!

மேலும், குணமும் வளமும் ஒன்றுக்கொன்று காரண காரியமுமாகும். ஆயினும், முதலிற் குணமிருந்தால் பின்பு மேன்மேல் வளத்திற்குரிய முயற்சி தோன்றி வளமும் மிகும் என்னும் இயற்கையுண்மையை விளக்கும் பொருட்டு, ஆசிரியர் இச் செய்யுளில் முதற்கண் ஈகைப் பண்பையும் பின்னர் நாட்டின் நானிலச் செழுமையையும் விரித்துப் பேசி, இறுதியிலும் பண்பிற்கே முதன்மை தந்து அது முயற்சியுள்ளம் உண்டாக்குதலையுங் குறிப்பிட்டு அதற்கு ஒரு வாழ்த்துங் கூறி முடித்திருக்கின்றார். வாழ்க்கையில் அறிந்துகொள்ளவேண்டிய அழகிய நுட்பக் கருத்தை இச் செய்யுள் நன்றாக விளக்கியிருக்கின்றது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆசிரியர் கோவூர் கிழார் பாராட்டிப் பாடிய பாட்டு இது. கருத்து வருமாறு:

'எம் தலைவனாகிய கிள்ளி வளவன், எம்போன்றார்க்கு, சூடு பதமான உணவுதனை உண்பதனால் உண்டான வியர்வை யல்லது வேறு செய்தொழிலால் வியர்வை உண்டாகாதபடி, புகழ் தனதேயாக, ஏராளமாய் உதவிசெய்யும் பண்புடையோன் ஆவன்.

அதனால், வயல் நிலங்கள் செந்நெல்லுங் கரும்பு மாய்ச் செழித்தன; கான் நிலங்கள் புல அருந்தும் ஆன் நிரைகளால் நிரம்பின; கடலிடங்கள் வாணிகஞ் செய்யும் மரக்கலங்களால் அழகு பெற்றன கழி நிலங்கள், மலை நாடுகளிலுஞ் சென்று உப்பு விற்கும் உமணர்களால் விளக்கம் பெற்றன.

அத்தகைய ஈகைக் குணமும் வளமும் பொருந்திய சிறந்த சோழநாட்டின் கூத்தரேம் யாம்.

ஆதலால், வெள்ளி கிழக்கேயிருந்து மேற்கே சென் றாலும், மேற்கேயிருந்து கிழக்கே சென்றாலும், வடபக்க மிருந்து தெற்கிடஞ் சென்றாலும், தென்பக்கமிருந்து வடக்கே நீண்டாலும், எப்படியோ எங்கேனும் நிற்கட்டும் : எமக்கொன்றும் குறைவில்லை

யாம் வேண்டியதை, உணர்ந்து கொடுப்போனது குணமிருக்கின்றது; அதனால் அவனுக்கு இயற்கையாகப் பெருகிவரும் முயற்சியிருக்கின்றது. அம் முயற்சி வாழ்வ தாக! எல்லாம் அது தரும்'

புலவர் எவ்வளவு அன்றைந்து பேசுகின்றனர்! இவ் வளவு செம்மாப்புக்குக் காரணம் என்ன? 'உலகப் பொருள்கள் குணங்களால் இயங்குகின்றன, அவ் வுணர்வு நலம தலைவன்பால் உள்ளது' என்னும் அரிய மறைபொரு ளுண்மையில் அவர்க்குத் தெளிவிருந்ததனாலன்றோ இத துணிவுமொழி எழுந்தது!

'அறியவேண்டுவது இது; நம்பவேண்டுவது இது' என்று அறியாது கலங்கும் இப் பேதையுலகத்துக்கு இச் செய்யுள் எவ்வளவு இன்றியமையாததாயிருக்கின்றது! பேராசிரியர் கோவூர்கிழாருக்கு இவ்வுலகம் செய்யுங் கைம் மாறுதானும் ஒன்று உண்டோ?

**குறிப்புரை :** வெய்து - சூடு பதமாக. வியாப்பு - வியர்வை. அறியாமை - அறியாதபடி. ஈத்தோன் - கொடுத்தவன். எந்தை - எம் தலைவன். இசை - புகழ். நெல்லின் வேலி - நெல்லிற்கு

வேலியாக. பாத்தி - பாத்தியில். மலர்ப் பூ ததும்பின - மலராகிய பூக்கள் நிரம்பின; மலர்ந்த பூக்கள் என்பதற்கு மலர்ப்பூ எனப்பட்டது. ஆயத்தான் - ஆன் நிரைகளோடு. வெங் குறும்பின்று - வெங் குறும்புகளையும் உடையது. வெம் குறும்பு - காவலின் கடுமையுடைய சிற்றரண்கள். கால் தந்த - காற்றாற் கொண்டுவரப்பட்ட. கலன் - மரக்கலங்கள். எண்ணுவோர் - எண்ணிக் கணக்கிடுவோரால். சினை நிலைகுந்து - கிளையிற் கயிறு தொடுத்துக் கட்டி நிலைபெற்றிருக்கும்; நிலைக்குந்து - நிலைக்கும் என்றபடி. கொள்ளை - விலை. சாற்றி - பலரும் அறியச் சொல்லி. பெரு கல் நன் நாட்டு - பெரிய நல்ல மலைநாட்டின்கண்; கல் - மலை. உமண் - உப்பு விற்குஞ் சாதி. ஒலிக்குந்து - ஒலி செய்யும். கழி, இங்ஙனம் உமண்சாதி மலைநாட்டிற் சென்று ஒலிசெய்யும் இயைபுடையது என்று கொள்ளப்படும். அன்ன - அத்தகைய பொருநம் - பொருநரேம்; கூத்தராயிருக்கின்றனம். பொருநர் என்பது போர்க்களத்திற் போர் செய்யும் வீரர்களுக்கும் பெயர்; ஒப்பக் கோலம் புனைவோர் என்னுங் கருத்திற் கூத்தருக்கும் பெயர். ஆதலால், இங்கே கூத்தர் என்னுங் கருத்தில் வைததுக்கொள்ளும்பொருட்டுப் 'பொராஅப் பொருநரேம்' என்றார். 'போர்க்களத்திற் போர் செய்தலறியாத கூத்தரேம் என்பது அதன் பொருளாகும. குணதிசை - கிழக்குப் பக்கத்திலிருநது. குட முதல் - மேற்கிடம்; முதல் - இடம்; பக்கம். தென் வயின் - தெற்கிடம். குறுகாது நீடினும் - தன் நிலையில் நில்லாது நீளினும். யாண்டும் - யாண்டேனும். தாள் - முயற்சி; முயற்சியாற்றல். (௩௦)

## கிளர்ச்சியும் முயற்சியும்

[தோன்றில், புகழோடு தோன்றவேண்டும்; அரிய பெரிய செயல்களுடையவர்களாய் விளங்கவேண்டும்; கிளர்ச்சியோடும் முயற்சியோடுந் திகழவேண்டும். சோழன் கரிகாலனை இதற்குச் சிறந்த எடுத்துககாட்டானவன்.]

மலைஅகழ்க் குவனே கடல்தூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற் றுவன்எனத்
தான்முன்னிய துறைபோகலின்,
பல்ஒளியர் பணிபுஒடுங்கத்
தொல்அருவாளர் தொழில்கேட்ப

வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் திறல்கெடச் சீறி, மன்னர்
மன்எயில் கதுவும் மதனுடை நோன்தாள்
மாத்தானை மறமொய்ம்பு.

—பட்டினப்பாலை, உஎக - கூ.

சோழன் கரிகால் வளவன் என்பவன் பழைய சோழ மன்னர்களுள் ஒருவன். சிறந்த புகழ் படைத்தவன். இவன் காலத்தில், 'இந்தியா' என்னும் இந் நாவலந் தீவு முழுமையும் இவன் தலைமையில் அடங்கியது. இளமை வயதி லிருந்தே இவன் திறமைகள் தகரிகரின்றி விளங்கின. அறிவும் ஆண்மையும் திறமையும் ஒருங்கு படைத்த மேலோன்.

கண்டாரனைவரும், இவன் செய்துவரும அருஞ் செயல்களுக்கும், இவனுக்குக் கிடைத்துவரும் இணையற்ற வெற்றிகளுக்கும், நேர்ந்துவரும் நற்பேறுகளுக்கும மிக வியந்து, 'இவன் ஏதோ தெய்வத்தன்மை வாய்ந்தவன்; இவன் எல்லாஞ் செய்ய வல்லவன்: தான் கருதியதை இவன் எப்படியும் நிறைவேற்றியே தீர்கின்றான், நினைத் தால் மலையையும கல்லுவன்: கடலையும் தூர்க்குவன்; வான் உலகுகளையுங் கீழ் வீழ்க்குவன், காற்றையும் இயங்கவொட்டாமல் தடுப்பன்' என்று புகழ்ந்து கூறும படி அவ்வளவு சிறந்தோனாய் இவன் விளங்கினன்.

இவன் காலத்திற் பெருநிலக் கிழவர்களாய் விளக்கம் வாய்ந்திருந்தார் பலரும் இவனுக்குப பணிந்து அடங் கினர். பழைய அருவாள நாட்டின் தலைவர்களும இவன் ஏவல்வழிக் கட்டுப்பட்டு ஒழுகினர். வடநாட்டின் அரசர் கள் இவனுக்குமுன் நிலை குறைந்தனர் குடநாட்டார் தம் அதிகாரங் குறைந்து ஒடுங்கினர். அன்றியும் பாண்டி நாட்டரசனும் திறல்கெட்டு நின்றான். இவர்களெல்லாரும் இங்ஙனஞ் சீர்குலைந்து மடங்கும்படி சீறி, அம் மன்னர் களின் நிலைபெற்ற அரண்களை வெற்றிகொள்ளும் பெருங்

கிளர்ச்சியுடைய வலிய முயற்சியோடு, பெரிய படைகளின் மற வலிமையும் உடையவனாய்க் கரிகால் வளவன் வீறு பெற்று விளங்கினான். கரிகால் வளவனது மொய்ம்பு இத்தகையது.

ஒரு தமிழ் மன்னன் பண்டு இவ்வளவு பேராண்மையுடன் இந்நாட்டில் திகழ்ந்தனன் என்பது, அறிவதற்கும் கருதுவதற்கும் எவ்வளவு மகிழ்ச்சி தருகின்றது!

**குறிப்புரை**: அகழ்க்குவனே - தோண்டுவானே! வான் - வானுலகு; வளி - காற்று. மாற்றுவன் - இயங்காது தடுப்பானே! என - என்று வியந்து போற்றிக் கூறும்படி முன்னிய - கருதிய. துறை போகலின் - போர்ச்செயல்கள் நிறைவேறி முடிதலின். ஒளியர் - ஒளிநாட்டார்; இந்நாட்டின் விளக்கமுடைய பெருநிலக் கிழவராகிய வேளாளர் என்பது. இவர்கள் சோழநாடல்லாத பிற நாடுகளுக்கு அரசராவதற்கு உரியவர்கள் என்பது உரையாசிரியர் நச்சினார்க்கினியரது கருத்து. அருவாளர் - அருவாள நாட்டு அரசர். இந் நாடுகள் செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரு நாடுகளுள் வைத்துக் கூறப்படும். குடவர் - மேற்கு நாட்டார். கூம்ப - ஒடுங்க. மன் - நிலைத்த. எயில் - இஞ்சி, அரண். கதுவும் - வென்று உரிமையாக்கிக்கொள்கின்ற. மதன் - செருக்கு; அதாவது, உள்ளக்கிளர்ச்சி. நோன் தாள் - வலிய முயற்சி. மா - பெரிய. தானை - படையின். மறம் - வீரமுடைய. மொய்ம்பு - வலிமை முயற்சியும் இம் மொய்ம்பும் உடையவன் என்பது கருத்து. (௩௧)

## வீரத்தின் அடிப்படை

[வீரம் என்பது உள்ளத்தின் இயல்பு. அது புறப்பொருள்களையே ஏதுவாக உடையதன்று. புறப் பொருள்களாகிய படை, வீரத்துக்குத் துணைபுரியும் வெளிக் கருவிகள். மற்று, வீரத்துக்கு ஏதுவாய உரமளிப்பது அருட் பண்பாகிய கொடைத் தன்மையே.]

ஆர்ப்பெழு கடலினும் பெரிது; அவன் களிறே
கார்ப்பெயல் உருமின் முழங்கல் ஆனாவே;
யார்கொல் அளியர் தாமே; ஆர்நார்ச்

செறியத் தொடுத்த கண்ணிக்
கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

—புறநானூறு, அக.

சோழன் போர்வைக்கோப் பெருநற் கிள்ளியின் திறம் இச் செய்யுளிற் கூறப்படுகின்றது. அவன் திறம இங்கே இரண்டு வகையில் வைத்து விளக்கப்படுகின்றது. ஒன்று, படையின் திறம்; மற்றொன்று, கொடையின் திறம்.

இத் திறங்களை அவன் உடையனாதலால், அத்தகைய வீரன் கையில் அகப்பட்டார் அதோடு தம் நிலை அழிந்து போதல் திண்ணமாதலின், பாவம், அவர் யாரோ இரங்கத் தக்கார் என்று இச்செய்யுள் அவர்மேற் பரிவுகொள்கின்றது. இதனாற், கிள்ளியின் வெற்றியே பெறப்படுதலின், அவனையே புகழ்ந்தபடியாகும்.

'கிள்ளியினது படையின் ஆரவாரம் எழுகடல் ஒலியினும் பெரிது; அவன் களிறுகள் இடியினும் மிகுதியாக முழங்குதலுடையன. நாரில் ஆத்தி மலரைச் செறியத் தொடுத்த கண்ணியையுடைய, கொடையினாற் கவிந்த கைவாய்ந்த அவ் வீரனது கையில் அகபபட்டார் யாரோ? இரங்கத தக்கார்' என்பது இச் செய்யுளின் கருத்து.

முதல் இரண்டு வரிகளாற் படையின் சிறப்புக் கூறப்பட்டது. கடைசி வரியில் 'கவிகை' என்பதனாற் கொடையின் சிறப்புக் கூறப்பட்டது. படையின் சிறப்புக்குங் கொடையின் சிறப்பே அடிப்படைக் காரணமாகும். வெற்றிக்குரிய மறைபொருள் திறமெல்லாம் இக் கொடையின் திறமே யல்லது வேறில்லை கொடைக்குரிய அருட் பண்பு ஏனை எல்லா வீரங்களுக்கும் வலிமை தருதலால், கொடை வீரமே அடிப்படை வீரமாயிருக்கின்றது.

இங்கு அவ்வுண்மை 'கவிகை மள்ளன்' என வீரக் கருத்தோடு கூறி, மூலைக்கயிறுபோல நிறுத்தப்பட்டிருக்கின்றது.

**குறிப்புரை:** ஆர்ப்பு - படையின் ஆரவாரம். களிறு - களிறுகள். கார்ப் பெயல் - கார்காலத்துப் பெயலின். உரு மின் - இடியைவிட. முழங்கல் ஆனு - முழங்குதல் அமையா; அமையாதனவாய் மிகுதியாக முழங்கும் என்றபடி. தாம் எ அசைகள். அளியர் - இரக்கப்படுதற்குரியர் ஆர் - ஆத்தி மலரை. நார் - நாரில். செறிய - பொருந்தி அழகுற. கண்ணி - தலைமாலையையுடைய. கவி கை - கொடுத்தலால் கவிந்த கையினை அமைந்த. மள்ளன் - வீரனது; 'அத்தகைய கொடை வீரனது கைப்பட்டார் யார்கொல்' என்று இணைத்துக்கொள்ள வேண்டும். (௩௨)

## உள்ளுதற்குக் காரணம்

[மக்களிற் பெரும்பான்மையோர், பலருந் தம்மைக் கருதி மதிக்க வேண்டும் என்று எண்ணுகின்றனர்; ஆனால், அதற்குத் தம மிடம அமைந்திருக்கவேண்டிய காரணங்களில் அவர்கள எண்ணம இருத்துவது அரிதாயிருக்கின்றது. ஆற்றலும் அரு ளெண்ணமுமே அமையவேண்டிய காரணங்கள என்று இச் செய்யுள் தெரிவிக்கின்றது.]

வரைபுரையும் மழகளிற்றின்மிசை
வான் துடைக்கும் வகையபோல
விரவுஉருவின கொடிநுடங்கும்
வியன் தானை விறல்வேந்தே!
நீ, உடன்று நோக்கும்வாய் எரிதவழ
நீ, நயந்து நோக்கும்வாய் பொன்பூப்பச்
செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்திங்களுள் வெயில்வேண்டினும்
வேண்டியது விளைக்கும் ஆற்றலை யாகலின்
நின்நிழற் பிறந்து நின்நிழல வளர்ந்த
எம்அளவு எவனோ? மற்றோ இன்னிலைப்
பொலம்பூங் காவின் நன்னாட் டோரும்
செய்வினை மருங்கின் எய்த லல்லதை
உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்

கடவ தன்மையின் கையற வுடைத்தென
ஆண்டுச்செய் நுகர்ச்சி ஈண்டுங் கூடலின்
நின்னா டுள்ளுவர் பரிசிலர்
ஒன்னார் தேஎத்தும் நின்னுடைத் தெனவே.

—புறநானூறு, ௩௮.

ஒரு நாள் ஆவூர் மூலங்கிழார் என்னும் ஆசிரியர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடஞ் சென்றார். அவரை அவனுக்கு முன் பின் தெரியாது 'எம்மை நினைந்த நீவிர் எந் நாட்டீரோ?' என்று அரசன் வினவினான். புலவரோ, கிள்ளிவளவனது சோழநாட்டைச் சேர்ந்தவரே. அறிஞராதலின், ஏற்ற காரண காரியங்களுடன் நிறைவான விடை தருகின்றார்

'வேந்தே! நின் நிழல் பிறந்து நின் நிழல் வளர்ந்த உரிமையுடையேனே யான்' என்று அரசன் கேள்விக்கு இப்படி அவர் விடை சொல்லியிருந்தாற் போதுமே என்று பிறர்க்குத் தோற்றலாம். இது, 'எந்நாட்டீரோ' என்னுங் கேள்விக்கே போதிய விடையாகப் புலவருக்குத் தோன்றவில்லை. அதற்கு மேலும் அவன், 'எம்மை நினைந்த நீவிர்' என்று வினாவைத் தொடங்கியிருத்தலின், அதற்கும் ஏற்ற படியன்றோ விடை கூறவேண்டும்?

'அரசே, நீ சேனையால் ஆற்றலுடையை.' இது முதல் நான்கு வரியின் கருத்து. அடுத்த ஐந்து வரிகளின் கருத்து, 'மேலும் வேண்டியதை வேண்டியபடியே உண்டாக்கவல்ல உணர்வாற்றலும் உடையை' என்பது. இனிக், கடைசி ஏழு வரிகளின் கருத்து, 'இங்ஙனம் புற ஆற்றல் அக ஆற்றல் உடையையாதலோடு, பிறர்க்கு உதவும் அளியும் உடையை' என்பது.

தேவருலகத்தில் எல்லாம் இருந்தாலும், பிறர்க்கு ஒன்று உதவுதற்கு ஏற்ற வாய்ப்பு இல்லை. ஏனென்றால், அங்கே எல்லாரும் தத்தம் செய்வினைச் சார்பால் இன்பம் நுகர்கின்றவராய் இருக்கின்றனர். அதனால், இல்லோர்

இரத்தலுக்கும் உடையோர் ஈதலுக்கும் அங்கே இடமில்லை; ஒருவரை யொருவர் கருதவோ, அருளுணர்வு பெருகவோ வாயிலில்லை. ஆனால், நினது நாடு தேவருலகத்தைப்போல் நுகர்ச்சிக்கும் இடம்; அருளுணர்வுக்கும் இடம்: இத்தகைய இரண்டு நலன்களையும் உண்டாக்கவல்ல நின்னை நினது நாடு உடையதாயிருக்கின்றமை தெரிந்து பலரும் மகிழ்கின்றனர். பரிசிலர், நினக்குப் பகைவரது நாட்டில் இருப்பவராயினும், நினது நாட்டையே தேவருலகினும் மேம்பாடுடையதாகக் கருதி நினைந்துவருவர். இக் கருத்துக்களும், கடைசி ஏழு வரிகளாற் புலப்படுகின்றன.

'அங்ஙனமாயின், நின் நாட்டிலேயே பிறந்து, நின் ஆட்சியிலேயே வளர்ந்த எனது நினைவைப்பற்றியுங் கூறவேண்டுமோ' என்பது இடையில் வரும் இரண்டடிகளின் கருத்து.

இப்போது விடை எவ்வளவு நிறைவாயிருக்கின்றது? உள்ளுதற்குக் காரணம் ஆற்றலும் அளியுமே என்று இதனாற் புலப்படுகின்றதன்றோ?

பலருந் தம்மைப்பற்றிக் கருதவேண்டுமென்று மக்களிற் பெரும்பான்மையோருங் கருதுகின்றனர்; ஆனால், அங்ஙனங் கருதுதற்குத் தம்மிடம் அமையவேண்டிய காரணம் எவை யென்று கருதி, அவற்றைத் தாம் பெற்றிருக்க முயலவேண்டுமன்றோ? ஆவூர் மூலங்கிழார் கிள்ளிவளவனுக்குக் கூறுமுகமாக உலகமே ஆற்றலும் அளியும் அரும்பித் திகழுமாறு உதவிசெய்திருக்கின்றார்.

காரணங் கண்டு வழங்கிய ஆவூர் மூலங்கிழார்க்கு உலகம் என்ன செய்ய இருக்கின்றது?

**குறிப்புரை:** வரை புரையும் - மலையை யொத்த. துடைக்கும் - தடவுகின்ற. வகைய - வகையுடையன. விரவு உருவின - கலந்த நிறங்களையுடையனவான. நுடங்கும் - அசைந்து தோன்றும். தானை - சேனையையுடைய. உடன்று - சினந்து. நோக்கும் வாய் - நோக்குகின்ற இடம். பொன் - செல்வம். ஞாயிற்று-

ஞாயிற்றின்கண். விளைக்கும் - உண்டாக்கும். நின் நிழல் - நினது ஆட்சியையுடைய நாட்டில். எம் அளவு எவனோ - எமது நினைவளவைப்பற்றி என்ன சொல்லவேண்டியிருக்கிறது இன்னிலைப் பொலம் பூங் காவின் நன்னாட்டோரும் - தேவரும் என்றபடி. இன் நிலை - இனிய நிலையையுடைய. பொலம் பூங் கா என்றது, பொற்பூக்களையுடைய கற்பகசசோலை. எய்தல் அல்லதை - இன்பம் அடைதலே யல்லது, கடவது அன்மையின் - அங்கே செய்யக்கடவ தல்லாமையால். கையறவு உடைத்து - தேவருலகம் செயலறவு உடையது; முயற்சிகள் அற்றது. ஈண்டும் - நினது நாடாகிய இவ்விடத்தும். கூடலின் - பொருந்துதலால். ஒன்னார் தேஎத்து - நினக்குப் பகைவரது நாட்டின்கண் தாம் இருந்தும். நின் உடைத்து என - நினது நாடு இத்தகைய ஆற்றலும் அளியு மிக்க நின்னை உடையது என்று கருதி. 'வேந்தே! பரிசிலர் ஒன்னார் தேஎத்து இருந்தும் நின்னை உடைத்து என நின் நாடு உள்ளுவர்; அங்ஙனமிருக்க, நின் நிழல் பிறந்து நின் நிழல் வளர்ந்த எம் அளவு எவனோ?' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (௩௩)

## ஓர் அருஞ் செயல்

[ஒரு வரலாற்று அருஞ்செயல் பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டில் நிகழ்ந்தது. பாண்டியன் நெடுஞ்செழியன் இளைஞன்; அவனைத் திடுமென எழுவர் மாற்று வேந்தர் ஒருங்கு எதிர்த்தனர். நெடுஞ்செழியன், விழித்துக்கொண்டு பெருவீரத்தோடு கறுவி அத்தனை பேரையும் ஒருங்கே தோற்கடித்துக் களத்திலேயே கொன்றான்.]

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை;
இன்றி னூங்கோ கேளலம் திரள்அரை
மன்ற வேம்பின் மாச்சினை ஒண்தளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியல் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவின் பசும்பூட் செழியன்

பீடுஞ் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன்றலை வந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே.

—புறநானூறு, எசு.

'பாண்டியன் நெடுஞ்செழியன்' என்று பண்டு பாண்டி நாட்டு மன்னன் ஒருவன் விளங்கினான். அவன் மிக இளைஞனாயிருந்தபோதே சோழ சேர மன்னர்கள் அவன் மேற் போருக்கு எழுந்தனர். திதியன், எழினி, எருமை யூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் ஐம் பெரு வேளிரும் அச் சோழ சேர மன்னர்களோடு சேர்ந்து நெடுஞ்செழியனை எதிர்த்தனர். பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானம் என்ற இடத்தில் அவ் வெழுவரையும் தான் ஒருவனாகவேயிருந்து எதிர்த் துத் தொலைத்து வெற்றி பெற்றான். இடைக்குன்றூர் கிழார் என்னும் பெரியார், இச் செய்யுளிற் செழியனது வீரத்தைப் புகழ்ந்தெடுத்துப் பாடுகின்றார்.

'ஒருவனை ஒருவன் கொல்லுதலும், ஒருவனுக்கு ஒரு வன் தோற்றலும் புதுமையல்ல: அவை இவ்வுலகத்தின் இயல்பு. ஆனால், தனமேற் பொருது வந்த தன்னைப் போன்ற முடியுடைப் பெருவேந்தர் இருவர், அவரோடு ஒருங்கு சேர்ந்த பெருவேளிர் ஐவர் என எழுவர் எதிரி களை ஒருங்கே ஒருவன் எதிர்த்து அழித்து வெற்றி கொண்ட அருஞ்செயலை இன்றைக்குமுன் கேட்டறியேம்.'

வரலாற்றோடு தொடர்பு கொண்ட இப் பெரு வீரச செயல் உலகப் பெருஞ் செயல்களுள் ஒன்றன்றோ !

**குறிப்புரை :** அடுதலும் - போரிற் கொல்லுதலும். தொலைத லும் - ஒருவனுக்கு ஒருவன் தோல்வி எய்துதலும். இன்றி னாங்கோ என்பதில் ஓ, அசை ; அதற்குப் பொருளில்லை. இன்றி னாங்கு - இன்று தவிர ; 'இன்று தவிர இதற்குமுன்' என்றபடி. கேளலம் - கேட்டிலம். இச செய்யுளின் கடைசி வரியோடு

இதனைக் கூட்டி 'ஒருதானாகிப் பொருது களத்தடல் இன்றி னூங்குக் கேளலம்' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். திரள் அரை மன்ற வேம்பின் மா சினை ஒண் தளிர் - திரண்ட அடி மரத்தினையுடைய மன்றம் என்னும் வெளியிடத்தில் வளர்ந்த வேப்பமரத்தினது பெரிய கிளையில் தழைத்த ஒள்ளிய தளிரை. நெடு கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து செறியத் தொடுத்த தேம் பாய் கண்ணி ஒலியல் மாலையொடு பொலியச் சூடி - நீண்ட கொடியாகிய உழிஞைக் கொடியோடு இடைப்பெய்து செறியத் தொடுத்த தேன் மிக்க தலைமாலையை அதற்குமுன் தலையில் வளைத்துச் சூடியிருந்த தழைத்த மாலையுடன் விளங்கச் சூடி. நெடுங்கொடியாகிய உழிஞைப் பவரொடு என்று கொள்ள வேண்டும். பவரொடு - கொடியொடு மிடைந்து - விரவ வைத்து; இடைப்பெய்து. செறிய - நெருங்க. தேம் - தேன். பாய் - பாய்கின்ற; மிக்க என்னும்பொருட்டு. கண்ணி - தலை மாலை; என்றது, வேப்பமாலையை. ஒலியல் - தழைவினையுடைய. பாடு இன் தெண் கிணை கறங்க - ஓசை இனிதான தெளிந்த கிணைப்பறை என்னும் போர்ப்பறை ஒலிக்க. காண் தக நாடு கெழு திருவின் பசும்பூண் செழியன் - காட்சி தக்க நாடுகளைப் பொருந்திய செல்வத்தையுடைய பசும் பொன்னாலான அணிகளை யணிந்த நெடுஞ்செழியனது. பீடும் செம்மலும் அறியார் கூடி - பெருமையையும் தலைமையையும் அறியாராய்த் தம்முட் கூடி. பொருதும் என்று தன் தலை வந்த புனை கழல் எழுவர் நல் வலம் அடங்க - பொருது வெல்வோம் என்று கருதிக்கொண்டு தன் மேற் படையெடுத்து வந்த புனைந்த வீரக் கழலினையுடைய எழு வர் வேந்தரது நல்ல வென்றியானது அடங்கும்படி. ஒரு தான் ஆகிப் பொருது களத்து அடல் - தான் ஒருவனேயாய் எதிர் நின்று அவரோடு போரிட்டு அவ்வெழுவரையும் போர்க்களத்தில் ஒருங்கு கொல்லுதலை. கொல்லுதலை இன்றுதவிர இதற்குமுன் கேட்டிலம் என்று சேர்த்து முடித்துக்கொள்ளவேண்டும். 'திர ளரை ....தேம்பாய் கண்ணி' என்பது, உழிஞைக் கொடியிற் கட்டிய வேப்பமாலையின் விளக்கம். அதுவும், அதற்குமேல் நான்கு வரிகளும் செழியனுக்கு அடைமொழிகள். செழியன் - பாண்டியன் நெடுஞ்செழியன். (கூ௪)

## ஆற்றல்

[மக்களாய்ப் பிறந்தால் ஆற்றலோடு விளங்குதல் வேண்டும். கிளர்ச்சியான உள்ளம், மேன்மேல் அருஞ்செயல்கள் செய்

யும் உயர்ந்த எண்ணமும், அவற்றிற்கான வீரம் வண்மை, அவற்றை உந்தும் மானம் முதலியன மக்கட்கு ஆற்றலாகும். சேரமான் கடுங்கோவாழியாதன் அங்ஙனம் ஆற்றலில் இணையற்று விளங்கினான்.

வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ்சிறி தென்னும் ஊக்கந் துரப்ப
ஒடுங்கா உள்ளத் தோம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம்?
பொழுதென வரைதி; புறக்கொடுத் திறத்தி;
மாறி வருதி மலைமறைந் தொளித்தி;
அகலிரு விசும்பி னானும்,
பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே.

—புறநானூறு, அ.

இது கபிலர் பாடிய பாட்டு. சேரமான் கடுங்கோவாழியாதனைப் பாடியிருக்கின்றார்.

கதிரவன் உலகத்துக்கே எடுத்துக்காட்டாய் உயர்ந்த நிலையில் விளங்குகின்றான். அத்தகைய கதிரோனும், சேரமான் கடுங்கோவாழியாதனுக்கு ஒப்பாகான் என்று கபிலர் இச் செய்யுளில் காரணங்களோடு விளக்குகின்றார்.

கடுங்கோவாழியாதன், தனக்கென ஒரு நாட்டினை வரம்பு செய்துகொண்டு அதன்கண்ணேயே வாழாது, பிறரால் இடர்ப்படும் நாடுகளையெல்லாம் தன்னுடையாக்கிக் கொள்ளும் ஊக்கமும் அதன்கண் பின்வாங்காத உள்ளமும் உடையவன்; நிலையான ஈகையொழுக்கத்தினால், கொடைக்குப் பின்வாங்கி ஒளித்துக்கொள்ளமாட்டான். வஞ்சனையாய்ப் போர் செய்யாது எதிர்த்துப் பொருது பகைவர்

களை வெல்லும் வீரமுடையவன் ; எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் பின்வாங்கமாட்டான்.

கபிலர் இவன் நிலைகளைக் கதிரவனோடு ஒப்பிட்டுப் பார்த்தார். கதிரவனோ பகல் நேரமே தனது நேரம் என்று வரம்பு செய்துகொள்கின்றான் ; அந்தி நேரத்தில் திங்களுக்குப் புறங்கொடுத்து வீரங் குன்றியவனாகின்றான். தெற்குப் பக்கமும் வடக்குப் பக்கமுமாகச் சற்று மாறி மாறி ஒரு நிலையில்லாதவனாய்த் தோன்றுகின்றான் ; மாலையில், தன் கதிர் வழங்குவதற்குப் பின்வாங்கி மலையில் மறைந்து ஒளிந்துவிடுகின்றான். பரந்த வானத்தின்கண் இருந்தும், பகல் நேரத்தில் கதிர் வழங்குகின்றானேயன்றி, இரவையுங் கடந்து எங்கும் வழங்குகின்றிலன்.

ஆதலால், 'ஞாயிறே ! நீ சேரலாதனை யாங்ஙனம் ஒத்தியோ ?' என்று கபிலர் முடிவுகட்டிவிட்டார். மக்களாய்ப் பிறந்தால் இங்ஙனமன்றோ ஆற்றலோடு ஓங்கி விளங்குதல் வேண்டும் !

**குறிப்புரை :** வையம் காவலர் - நிலவுலகத்தைக் காக்கும் அரசர் பலரும். வழி மொழிந்து - தனக்கு வழிபாடு சொல்லி. ஒழுக - அடங்கி ஒழுக. போகம் - நுகர்ச்சி. பொதுச்சொல் - நிலவுலகம் அரசர் பிறர்க்கும் பொது என்னுஞ் சொல். இடம்-தனது நாடு. துரப்ப - உந்துதலால். ஓங்கு உள்ளத்து - அதற்குச் சோம்பாமல் கிளர்ச்சியோடு படையெடுத்துச் செல்லும் உள்ளத்தையும். ஓம்பா ஈகை - சிக்கனஞ் செய்யாத ஈகைக்குணத்தையும் உடைய. கடந்து அடு தானை - வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் வீரப் படையையும் உடைய. யாங்ஙனம் ஒத்தியோ வீங்கு செலல் மண்டிலம் - ஒளி மிக்குச் செல்லுதலையுடைய ஞாயிற்று மண்டிலமே நீ எங்ஙனம் ஒத்து நிற்பாயோ ; ஒவ்வாய் என்பது கருத்து. பொழுது என - பகற்பொழுதே உரியதென. வரைதி - வரையறை செய்கின்றனை. புறக் கொடுத்து - முதுகு கொடுத்து. இறத்தி - மறைந்தொழிகின்றனை. வருதி - வருகின்றனை ; அதாவது, தோன்றுகின்றனை. ஒளித்தி - ஒளிக்கின்றனை. அகல் இரு - அகன்ற பெரிய. விசும்பினானும் - விசும்பிலும். விளங்குதி - விளங்குகின்றனை ; ஆல்; அசைச்சொல். பல் கதிர் விரித்து விளங்குகின்றனை என்பது. (நடு)

## எண்ணத்தின் உயர்வு

[மக்கள் எப்போதும் உயர்ந்த எண்ணமுடையவர்களாக விளங்கி வருதல் வேண்டும். குறுகிய தாழ்ந்த எண்ணங்கள் பிறர் உள்ளத்திலும் எழாதபடி தமது நடத்தையாற் காத்து வர வேண்டும். அங்ஙனங் காவாவிட்டால், தமக்கேயன்றி வழி வழி உலகத்துக்கும் ஊறுசெய்து பாழ்படுத்தியதாக முடியும். நாகரிக வளர்ச்சிக்கு இடமில்லை. இச் செய்யுள் மிக்க அறி வாண்மையுடன் இயற்றப்பெற்றிருக்கின்றது.]

எழுவினி, நெஞ்சம்! செல்கம்; யாரோ,
பருகு வன்ன வேட்கை யில்வழி
அருகிற் கண்டும் அறியார் போல
அகன்நக வாரா முகன்அழி பரிசில்
தாளி லாளர் வேளா ரல்லர்;
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே யுலகம்; பேணுநர் பலரே;
மீளி முன்பின் ஆளி போல
உள்ளம் உள்ளவிந் தடங்காது வெள்ளென
நோவா தோன்வயிற் றிரங்கி
வாயா வன்கனிக் குலமரு வோரே.

—புறநானூறு, உ0எ.

குறுகிய எண்ணங்களுக்கு இடங்கொடாமை, அறிவின் சிறப்புக்கு நல்ல அடையாளமாகும். முற்காலத்தில், பேரறிஞராகிய புலவர்கள் அங்ஙனம் விளங்கினார்கள். பெருஞ்சித்திரனார் அத்தகைய பெருமையமைந்த பெரு வீரர்.

சித்திரனார்க்கு வெளிமான் என்னும் செல்வன் மிகவும் வேண்டியவன். அவன் இறந்துபோனபின், அவன் தம்பியாகிய இளவெளிமான் என்பவனிடம் ஒருகால் சித்திரனார் சென்றிருந்தபோது, அவரை அவன் செவ்வையாக அறிந்துகொள்ளாமல், கையிறுக்கத்தோடு சிறிது

பரிசில் கொடுக்க வந்தான். மானமே பெரிதென்று வாழ்ந்தவர்களுள், தந்நிகரற்றவர் பெருஞ்சித்திரனார். உயர்ந்த எண்ணங்களுக்குக் கொள்கலமானவர். நாட்டில் குறுகிய எண்ணங்கள் தலையெடுக்காதபடி தமது அறிவாண்மை வாழ்க்கையால் உறுதி வழுவாமல் தொண்டு செய்து விளங்கிய பெரியார். இவ்வெளிமான், அகத்தில் மகிழ்ச்சியின்றி முகத்திலும் அன்பு மாறித் தந்த அந்தப் பரிசிலை அவர் கொள்ளவில்லை. முயற்சியற்ற எளியோர்களானால் அவர்கள் அத்தகைய புல்லிய பரிசிலை விரும்பாதிரார். சித்திரனார் அத்தகையவரோ! அவர் திருவாய் மலரிற் பின்வருஞ் சொற்கள் தோன்றின :

'நெஞ்சமே! இனிப் புறப்படு; போவோம்; நேரிற் சென்றால், பருகுவது போன்ற ஆர்வம் இல்லாதபோது அருகிற் கண்டும் அறியாதார்போல இருந்து, பின்பு அகம் மகிழ வாராத முகம் மாறிய பரிசிலை ஈவது, இத்தகைய சிலர்க்கு இயல்பு. முயற்சியற்ற உள்ளத்தோரே, கிடைத்தவரையிற் கிடைக்கட்டுமென்று மதிப்பிழந்த அப் பரிசிலை விரும்பி ஏற்றுக்கொள்வர் வருக என விரும்பி வரவேற்றற்குரிய தகுதியுடையோர்க்கு, உலகம் பெரிதாகவே இருக்கின்றது; போற்றுவோரும் பலராவர். வீரம் பொருந்திய வலிமையையுடைய சிங்கத்தைப்போல, உள்ளம் முயற்சியவிந்து ஒடுங்காமல் பலர்க்கும் வெட்டவெளிச்சமாய் இக் கருத்துத் தெரியும்படி இப்போதே புறப்படுவாய். பிறரைப்பற்றிச் சிறிதும் மனம் இரங்கி வருந்ாதவனிடத்தில் வாளா வற்றிக்கிடந்து அங்ஙனங் கிடந்தாலும் வாய்ப்பது அரிதாகிய வன்கனிக்காக உழல்வோர், அவர் யாரோ ?

புலவர் வீரம் எப்படியிருக்கின்றது? இங்ஙனமெல்லாம் முற்காலத்திலிருந்தே அறிஞர் பெருமக்கள் தன்மான உணர்வைக் காத்துக்கொண்டு வந்திராவிட்டால், இத் தமிழகம் நாகரிகச் செவ்வியில் துலங்குதற்கு வேறு வாயிலேது?

**குறிப்புரை :** பருகு - பருகுதல். வேட்கை - ஆர்வம். கண்டும் அறியார் போல - கண்டும் காணாதார்போல நக - மகிழ. அழி - மாறிய. 'அறியார்போல நக வாரா பரிசில்' என்று தொடரவேண்டும். தாள் இலாளர் - முயற்சி இல்லாதோர். வேளார் அல்லர் - விரும்பாதார் அல்லர்; விரும்புவார் என்றபடி. வரிசையோர்க்கு - தகுதியுடையோர்க்கு; தகுதியுடைய புலவர்கள் போன்றோர்க்கு என்றபடி. பேணுநா - விரும்பிப் போற்றுவோர். மீளி - வீரம் மிக்க. முன்பின் - வலிமையையுடைய. ஆளி - சிங்கம். உள் அவிந்து - ஊக்கம் அவிந்து. அடங்காது - ஒடுங்காமல். வெள் என - வெளியாக; 'அடங்காது வெள்ளென எழு இனி நெஞ்சம் செல்கம்; யாரோ நோவாதோன்வயின் திரங்கி வாயா வன்கனிக்கு உலமருவோர்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளப்படும். இனி - இப்போதே. நெஞ்சம் - நெஞ்சமே. செல்கம் - செல்வோம். 'உலமருவோர் யாரோ' என்பது தொடர் யாரோ - எத்தகையவரோ; மனிதரல்லர் என்பது கருத்து. நோவா தோன் வயின் - இரங்கி வருந்தாதவனிடம். திரங்கி - வற்றிச் சுருங்கி; தொங்கிக்கொண்டு என்றபடி. வன் கனி என்றார், தானே உள்ளூறிக் கனியாமையால். உலமருவோர் - உழலுவோர். (௩௬)

## குணமும் பணமும்

[இரண்டும் உலகில் உள்ளன. ஆனால், தேவை என்று கூறுதற்குரியது குணந்தான், குணத்தைப் பெருக்கிக்கொள்ளும் பொருட்டே பணம் கருவியாக உள்ளது. பிழைப்புக்காக மட்டும அன்று பணம். அப் பிழைப்பும் குணம் என்னுங் குன்றேறி நிற்றற்கேயன்றி வேறில்லை. இவ்வுமை அறிந்து செல்வார்க்குப் பெருஞ்சித்திரனாரின் இச் செய்யுள் திறன் மிருதியும் உதவும்.]

குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்
கென்ற என்நயந் தருளி ஈதுகொண்டு [கென;
ஈங்கனஞ் செல்க தானென, என்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்?
காணாது ஈத்த இப்பொருட்கு யானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன்; பேணித்

திணையனைத் தாயினும் இனிதுஅவர்
துணையளவு அறிந்துநல்கினர் விடினே.

—புறநானூறு, உ0அ.

வாழ்க்கையை, மதிக்கத்தக்க மாட்சிக்கே உருவாகப் பயன்படுத்தியவர்களில் பெருஞ்சித்திரனார் பெரிதுங் கருத் தூன்றுதற்குரியவர் பொருளை, எவ்வளவு வறுமையிலும் ஒரு பொருளாக எண்ணாதவர் தகுதிக்கு ஆக்கந் தரும் பொருள்மட்டுமே அவரால் விரும்பப்படும்.

ஒருநாள் அதியமான் நெடுமான் அஞ்சியிடம் அவர் சென்றார். அதியன் அன்று அவரைக் காணாமலே, வேண்டும் பரிசில்மட்டும் அவர்க்கு வழங்கச் செய்தான். பெருஞ்சித்திரனார்க்கு மனம் தாங்கவில்லை. பின் வருமாறு கூறினார் :

'பரிசில் பெற்றுப் போவதற்கென்று, குன்றுகளும மலைகளும் பல பின்னே கழியும்படி நான் மிகத் தொலைவிலிருந்து வந்தேனென்று கருதி, நின்ற என்னை இரக்கத்தால் முக நோக்கி 'இதோ இப் பொருளைப் பெற்றுக் கொண்டு இந் நெறியே செல்க' என்று அவன் கூறி விடுதற்கு, அக் காவலனை அதியன் என் இயல்பை எங்ஙனம் அறிந்தனனோ தெரியவில்லை; என்னைக் காணாமல் கொடுத்த இப் பொருளுக்கு நான் ஒரு வாணிகப் பரிசிலன் அல்லேன் ; விரும்பிக் கொடுப்பது தினையளவினதேயாயினும், பரிசிலரின் கல்வி முதலிய ஆற்றலின் எல்லை யறிந்து வழங்கி யனுப்புவதானால், அது, இனியது.'

இங்ஙனஞ் சொல்லி, அவர் அப் பரிசிலைக் கொள்ளாமலே சென்றுவிட்டார். இதைப்போன்ற செல்வர் சிலர் செயல்களைப் பொறுத்தற்குரிய பிழைகளாக அவர் உள்ளம் கருதவில்லை. தகுதியின் வழியிற செலவாகாத பொருள், உலகில் தீங்கினையே விளைக்கும என்பது அவர் கருத்து.

**குறிப்புரை:** ஒழிய - கழிய. பரிசில் கொண்டனென் செலற்கு வந்தனென் என - பரிசில் கொண்டு செல்லுதற்கு வந்தேன் என்று கருதி. என் நயந்தருளி - என்னை ஓர் எளிய பிச்சைக்காரனைப்போல இரக்கத்தால் முகங் கொடுத்து. நயந்து-விரும்பி; இங்கே ஓரளவு முகங் கொடுத்து என்னும் கருத்தில் வந்தது. ஈது - இப்பொருளை. ஈங்கனம் - இவவாறு; இந் நெறியே. தான் - அவன். செல்க தான் என - செல்க என்று அவன் சொல்லுவதற்கு. தாங்க அரு காவலன் - பகைவர்களால் தடுத்தற்கரிய அம் மன்னனை அதியன். வாணிகப் பரிசிலன் - ஊதியமே கருதும் பரிசிலன். பேணி - விரும்பித் தருவது. அவர் - பரிசிலரின். துணை அளவு - ஆற்றலின் எல்லையை. நல்கினர் விடின் - நல்கி யனுப்பினால். 'நல்கினர் விடின் தினையனைத்தாயினும் இனிது' என்று உரைத்துக்கொள்ளப்படும். ()

## தன்மானம்

[ஒருவனை உயர்ந்தோனாக்குவது தன்மானம. அவ் வுணர்ச்சிக்கும் அடிப்படை தெளிவுதான். எப்போதும் தெளிவை முன்னிட்டுக்கொண்டு வாழ்வோன் ஒருவன், உலகில் எல்லா ஆற்றல்களுங் கைவரப் பெறுகின்றனன். நிலையான முன்னேற்றத்தைப் பயப்பது அது. செல்வம முதலியன அதற்குத் துணை வாராவாயின், அவை இகழ்ந்தொதுக்கப்படும். இச் செய்யுளின் அடிப்படையில் விளங்கும் உளளப்பான்மை ஆழ்ந்து கருதுதற்குரியது.]

வெள்வேல் விடலை சென்றுமாய்ந் தனனே;
ஆங்கது நோயின் றாக; ஓங்குவரைப்
புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்
எலிபார்த் தொற்றா தாகும்; மலிதிரைக்
கடல்மண்டு புனலின் இழுமெனச் சென்று
நனியுடைப் பரிசில் தருகம்,
எழுமதி நெஞ்சே துணிபுமுந் துறுத்தே.

—புறநானூறு, உ௩எ.

ஊக்கமும் முயற்சியும் தாமே உண்டாய்விடுவன அல்ல. அவற்றிற்குத் தெளிவு அடிப்படையாய் இருக்க

வேண்டும். அதனோடு பெருந்தன்மையுங் கூடுமாயின், முயற்சி தகுதியாகச் செல்லும் இவை அமையாதார் மக்கள் வடிவிலிருந்தாலும் மக்கள் ஆகார். பெருஞ்சித்திரனார் என்னும் பண்டைக்காலத்துச் சான்றோர் அருளிய இச் செய்யுளில் இந் நலங்களெல்லாம் நன்கமைந்துள்ளன.

வெளிமான், இளவெளிமான் என்று இருவர் அண்ணன் தம்பியர் பெருஞ்சித்திரனார் காலத்தில் தக்க செல்வர்களாய் விளங்கியிருந்தனர். வெளிமான் கண்ணியமானவன்; இளவெளிமான் கையிறுக்கமானவன். வெளிமான் பெருஞ்சித்திரனாரின் அருமையை நன்கறிந்தவன். அதனால், அவன் பழக்கம் அவருக்கு இனிமையாய் இருந்து வந்தது. அவன் சிலநாட் கழித்து இறந்துபோனான். இளவெளிமான் பெருஞ்சித்திரனார்பால் தக்கவாறு நடந்து கொள்வதில்லை. ஒருகால் அவன், அவர் தகுதி கருதாது சிறிது பரிசில் வழங்க வந்தான் சித்திரனாரோ அதனைக் கொள்பவர்? அவர் தெளிவும் பெருநதன்மையும், அவற்றால் அவருக்கு அவ்வப்போதும் கிளர்ந்தெழும் ஊக்கமும் முயற்சியும் இளவெளிமானுக்கு என்ன தெரியும? அப்போது பெருஞ்சித்திரனார் அவன் புல்லிய பரிசிலைக் கொள்ளாமல், தம் தகுதியைப் புலப்படுத்திய செய்யுளே இது. அவர் வாய்மொழி வருமாறு :

'வெளிமான் சென்று மாய்ந்தனன்; அவனை மாய்தத கூற்றம் நோயில்லாமல் இருக்கட்டும். உயர்ந்த மலையிடத்தில் ஒரு புலியானது, தான் பார்த்து வீழ்த்திய யானையாகிய இரை தப்பிவிட்டால், தனக்குப் போதிய அளவிலில்லாத எலியைப் பார்தது வீழ்த்தாது. கடலில் செறிந்து வீழும் ஆற்றுநீரைப்போல நாமும் விரைந்து சென்று மிகுதியுடைய பரிசிலைக் கொண்டு வருவோம்; நெஞ்சே! தெளிவினை முன் நிறுத்திக்கொண்டு உடனே புறப்படுவாய்.'

இவ் வாய்மொழிகள் எவ்வளவு உறுதியுடையனவாய்த் திகழ்கின்றன. பரிசில் குறைவாகக் கிடைத்தபோது

பலர்க்கும் உள்ளந் தளர்ந்துபோவது இயல்பு. சித்திரனார் உள்ளம் வில்லென விசைத்தெழுகின்றது. தன்னுறுதி, தன்னம்பிக்கை, தன்மானம் முதலிய தெளிந்த பண்பு களே அவ் விசைக்குக் காரணம். வேண்டுவது எது, வேண்டாதது எது, எதனை முதன்மையாகக் கொள்ள வேண்டும், எதனைத் துணையாகக் கருதவேண்டும் என்பவற்றில் தெளிவு கொள்ளாத இவ் வுலகத்துக்குப் பெருஞ் சித்திரனார் நடத்தைதான் எத்துணை அரண!

**குறிப்புரை:** வெள் வேல் - வெண்ணிறமான வேற்படை; ஊறு நேராத காரணத்தால் எஞ்ஞான்றும் இரத்தம் தோயாமல் வெண்ணிறமாய் இருக்கும் வேற்படையையுடைய என்றபடி. விடலை - வீரன்; வீரனை வெளிமான். ஆகலின் - அதனால். அது - கூற்றம். ஒற்றிய - வீழ்த்திய. களிற்றிரை - களிறாகிய இரை. பிழைப்பின் - தப்பிவிட்டால். மலி திரை - மிக்க திரையை யுடைய. கடல் - கடலில். மண்டு புனலின் - செறிந்து வீழும் ஆற்றுநீரைப் போல. ஆற்று நீர், விரும்பி வீழ்தற்கு உவமை. இழும் என - விரைவாக. இழும் என்பது விரைவுப்பொருள் உணர்த்தும் ஒலிக்குறிப்பு. நனி உடை - மிகுதியையுடைய. தருகம் - கொண்டு வருவேம். மதி, முன்னிலை அசை. துணிபு - தெளிவை. முந்துறுத்து - முன்னிட்டுக்கொண்டு; தெளிவு மற்ற நலங்களைத் தருதலால் அதனை முன்னிட்டுக்கொண்டு நெஞ்சே புறப்படு என்றது, நுட்பமாயிருக்கின்றது. (௩அ)

## மானம்

[இழிவுக்கு நாணுவது மானம். இது சிறந்தோர்க்கு குணம். சிறந்தோர் தமது செயலால் இழிவு உண்டாகும்படி செய்துகொள்ள மாட்டார்கள். தற்செயலாக நேர்ந்துவிட்டால், அவர்க்கு மானந் தாங்காது; உயிரையும் விட்டுவிட நேரும். அதனால் அவர்க்குப் புகழேயன்றி இகழ் இல்லை.]

நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக!
களியியல் யானைக் கரிகால் வளவ!
சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற

வென்றோய் நின்னினும் நல்ல னன்றே,
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே.

—புறநானூறு, சுசு.

சோழன் கரிகாற்பெருவளவனுக்கும் சேரமான் பெருஞ்சேரலாதனுக்கும் போர் மூண்டது. வெண்ணி என்னும் ஊரின் புறத்தே போர் நடந்தது. சேரனுக்குத் துணையாகப் பாண்டிய மன்னனும் வேறு வேளிர் பதினொருவரும் போரிற் கலந்துகொண்டனர். எனினும், கரிகால் வளவன் ஆற்றலுக்கு முன் அவர்கள் வலி செல்லவில்லை. சேரலாதன் தோற்றான்.

மானந் தாங்கக்கூடவில்லை. புறங்கொடுத்தமைக்கு நாணி வடக்கிருந்து அவன் உயிரை விட்டுவிட்டான். சேரலாதன், இனிய உள்ளமுடையவன். என்ன செய்வது? இனிமை வேறு, திறமை வேறு, ஆற்றல் வேறு.

கரிகால் வளவனை நோக்கி வெண்ணிக்குயத்தியார் என்னும் பெண்புலவர், 'வளவ! நின்னினும் நல்லன், புறப்புண் நாணி வடக்கிருந்தோன்' என்று கூறிச் சேரலாதனது இனிய பண்பைக் கூறுவதுபோல, கரிகால் வளவனின் ஆற்றலை இச் செய்யுளின் வாயிலாக நன்கு புலப்படுத்துகின்றார்.

சோழன் கரிகாலன் தனது வெற்றியால் இவ்வுலகிற் புகழை நிறுத்தினனென்றால், சேரமான் பெருஞ்சேரலாதன் தனது மானத்தால் இவ்வுலகிற் புகழை நிறுத்தினான். ஒவ்வொருவர்க்கு ஒவ்வோரியல்பு சிறந்து விளங்குகின்றது

**குறிப்புரை :** நளி - நீர் செறிந்த. நாவாய் - மரக்கலம். வளி தொழில் ஆண்ட - காற்றை ஏவல் கொண்ட. மரக்கலத்தை ஓட்டி, இடையில் காற்றில்லாதபோது அதனை வீசச்செய்து பயன்படுத்திய என்பது கருத்து. உரவோன் - வலியோன்.

அப்படி ஒரு சோழன் முன்பு விளங்கினன் என்பது. மருக - மரபில் வந்தவனே. களி இயல் - மதம் பொருந்திய. சென்று அமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற வென்றோய் - முன்பு பல தடவைகளில் எதிர் சென்று போரை வென்ற நின் ஆற்றல் தோன்ற இப்போதும் வென்றோய். அன்று, ஏ, அசை. கலி கொள் - தழைத்தலைக் கொண்ட. யாணர் - புது வருவாயை யுடைய. வெண்ணிப் பறந்தலை - வெண்ணி என்னும் ஊரின் புறத்திடத்தில் உண்டான. பறந்தலை - ஊர்ப்புறமான வெளி யிடம். புறங்கொடுத்த நிலை 'புறப்புண்' எனப்பட்டது. உலகம் - இவ்வுலகத்தில். 'வெண்ணிப் பறந்தலையில் தனக்கு உண்டான புறப் புண்ணுக்கு நாணி இவ்வுலகத்தில் மிகப் புகழ் எய்தி வடக் கிருந்தோன் நின்னினும் நல்லன்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (௩௬)

## நல்ல உள்ளம்

[அன்பு விளங்கிய உள்ளம் நல்ல உள்ளமாகவே திகழுகின்றது. அது தன் நலத்தை எண்ணாமல் பிறர் நலத்தையே முன் வைத்து எண்ணுகின்றது. உயர்ந்த எண்ணங்களையே எண்ணு கின்றது. ஆற்றலாகவும் எண்ணுகின்றது. இதனால், எண் ணியபடியே நிறைவேறவும் வாய்ப்புண்டாகின்றது. வெளி யிற் செல்லும் ஆடவர் காரியங்கள் இல்லில் இருக்கும் மகளி ரின் அன்பெண்ணத்தினால் இங்ஙனம் எளிதில் நிறைவேறு தற்கு ஏது உண்டு.]

உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பிற்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போலத்
தையல் நின்வயின் பிரியலம் யாமெனப்
பொய்வல் உள்ளமொடு புரிவுணக் கூறித்
துணிவில் கொள்கைய ராகி இனியே
நோய்மலி வருத்தமொடு நுதல்பசப் பூர
நாம்அழத் துறந்தன ராயினும், தாமே
வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி

பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும்பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன
செழுநகர் நல்விருந் தயர்மார் ஏமுற
விழுநிதி எளிதினின் எய்துக தில்ல.

—அகநானூறு, உ0ரு : க - கச.

உயர்ந்த எண்ணங்கள் தன்னல மறுத்த உள்ளத்தினின்றே எழுகின்றன. அவை அதனால் ஆற்றலும் பெற்று விரைவிற் பெரும்பயன் விளைக்குந் தகுதி உறுகின்றன.

தலைவன் இயற்கைக் கூட்டத்தின்போது தலைவியை நோக்கி, நின்னைப் பிரியேன் என்று கூறியிருந்தும், பின்பு இல்லறம் நடத்தும்பொருட்டுப் பொருளீட்டுதற்காக வெளியிற் பிரிந்து சென்றான். தலைவி, பிரிவுக்கு ஆற்றாதவளாய் வருந்தினாள். தோழி தலைவன்மேற் குறையாகச் சில சொன்னாள். தலைவி, தான் எவ்வளவு வருந்தினாலும் தன் தலைவனைப் பிறர் குறை சொல்ல உடன்படமாட்டாள். உடனே அவள் தோழியை நோக்கி,

'தோழி! தலைவர் நாம் அழத் துறந்தனராயினும், பின்பு, நமது இல்லத்தில் உயர்ந்த விருந்தினரை ஓம்பும் பொருட்டு அவர் மிக்க செல்வத்தை எளிதாக அடைந்து திரும்பட்டும்' என்று கூறினாள் என இச் செய்யுட் பகுதியிற் கருத்து வருகின்றது.

தலைவன் நலத்திலும் இன்பத்திலும் தலைவி எவ்வளவு நல்லெண்ணமுள்ளவளாய் இருக்கின்றனள்! அத்தகைய நல்லெண்ணத்திலிருந்து தோன்றிய அவள் வேண்டுகோள் எங்ஙனேனும் பொய்க்குமோ! மனைவியர் அன்பெண்ணத்தினன்றோ வெளியிற் சென்ற கணவன்மாருடைய நன்முயற்சிகள் எளிதிற் கைகூடி வருகின்றன! மாதர் பலர் இதனை நினைந்தொழுகுவாரானால், உலகில் ஆடவர் முயற்சிகளெல்லாம் எளிதின் இனிது நிறைவேறி மிக்க நலம் பயப்பதாயிருக்கும்.

**குறிப்புரை :** தொன்று படு - தொன்று தொட்ட. செயிர் தீர் - குற்றமற்ற. செறிந்தோர் போல - நெருங்கிப் பொருந்தி னோரபோல. தையல் - பெண்ணே நின் வயின் - நின்னிட மிருந்து. வல் - வல்ல. புரிவு உண - விருப்பம உண்டாக. இனி - இப்போது. நோய் மலி - நோய் உண்டாதற்கு எது வான. ஊர - பரவ துறந்தனராயினும் - நீங்கினராயினும். நூறி - அழித்து. நிலம் - கோசரது நிலத்தை. வெஃகிய - விரும்பிய. பொலம் பூண் கிள்ளி - பொன்னாலாகிய பூணினை அணிந்த சோழமன்னனது பூ விரி - மலர்கள் மலர்ந்துள்ள நாப்பண் - நடுவில். பெரும் பெயர் - மிக்க புகழையுடைய. கா விரி படப்பைப் பட்டினத்து அன்ன - சோலைகள் விரிந்து தழைத்துள்ள தோட்டத்தையுடைய பட்டினத்தைப் போன்ற. செழு நகர் - வளமான நமது மனையில். அயர்மார் - செய்யும் பொருட்டு. 'கோசர் என்னும் ஒருவகையினரின் படையை அழித்து அவரது நிலத்தைக கொள்ள விரும்பிய சோழமன்ன னது கழி நடுவில் உள்ள படப்பையையுடைய பட்டினத்தை யொத்த நமது மனையில் விருந்தயரும் பொருட்டு' என்று கருத தைத் தொடர்ந்துகொள்ள வேண்டும். 'சோழமன்னனின் பட்டி னத்தை யொத்த மனை' என்பது கருத்து. ஏம் உற - இன்பம் பொருந்தும்படி. விழு நிதி - மிக்க செல்வத்தை. எய்துக - அவர் பெறுக. இல், அங்ஙனம் பெறுக என்னும் விழைவுப் பொருள் உணர்த்திநின்றது. 'தலைவர் நாம் அழத் துறந்தன ராயினும், அவர் எளிதின் விழுநிதி எய்துக' என்று தலைவி கூறிய தாக இச் செய்யுள் வந்தது. (சo)

## காதலின் மென்மை

[காதலின் இயல்பு மிக மெல்லியது. நாணம் என்னும் மிக நுண் ணிய பண்பின் அடிப்படை கொண்டது. பிற ரெவரும் அறிய லாகாத, மிக ஆழ்ந்த அகவுணர்வு நிகழ்ச்சியே அது; மிக்க தெய்வத்தன்மை அமைந்தது. சிறிது பழகிய ஓரறிவு உயிா களின் எதிரிலும், காதலர் தமது காதற்றன்மையைப் புலப் படுத்திக்கொள்ள நாணுவர். தமிழர் இத்துணை மென்மை யாகக் காதலை உணர்ந்து ஒழுகினோராவர்.]

விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப

நும்மினும் சிறந்தது நுவ்வை யாகும்என்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே;
அம்ம நாணுதும் நும்மொடு நகையே.

—நற்றிணை, கஎஉ : க - கூ.

தமிழ்நாட்டு மாதர்க்குச் செடி கொடிகளை வளர்ப்பதில் மிக்க ஊக்கமும் இன்பமும் உண்டு. ஓரறிவு உயிர்களாகிய மரஞ் செடி கொடிகளிடத்தில் அவர்கள் காட்டும் அன்புக்கு ஓர் எல்லையே இல்லை. இந்த அன்பின் அடிப்படையிலிருந்தே, தமிழ்நாட்டிற்கே சிறப்பாகிய உழவு தொழில் தழைத்துப் பெருகியது. இச் செய்யுளில் ஒரு தமிழ் மகள் பால் வார்த்துச் செடி வளர்த்த குறிப்பு ஒன்று வருகின்றது.

கடற்கரை நிலத்தில், சிறிய வயதில், தோழிமாரோடு ஒரு பெண் விளையாடிக்கொண்டிருந்தாள். அந்த நிலத்து வெண் மணலில் ஒரு புன்னை விதையை விளையாட்டாக அழுத்தியவள், பின்பு அதனை மறந்துவிட்டாள். நாட்கள் சில ஆயின. அந்த விதை முளைவிட்டு வளர்ந்தது அறிந்த அந்தப் பெண், மிக்க அன்புகொண்டு நாளும் அதனை நெய்யோடுகூடிய இனிய பால் ஊற்றிக் கருத்தாக வளர்த்து வந்தாள். தோழியரும் அதற்குத் துணைபுரிந்தனர். பெண்ணின் தாய், இந்த அன்பின் செய்கையைக் கண்டு, ஓரறிவு உயிராகிய அச் செடியினிடத்தில் இன்னும் அவர்கட்கு அன்பு மிகுமாறு, ஒருநாள், 'இந்தச் செடி உங்களினும் சிறந்தது; இது உங்கள் தங்கையாகும்' என்று அதன் சிறப்பினைக் கூறினள். இங்ஙனம் தமிழ் மாதர் ஓரறிவு உயிர்களையுங் கேளிரென்றே கருதி அன்புருவாய் விளங்கினர்.

பின்னுஞ் சில நாட்கள் கழிந்தன. புன்னைச் செடியை வளர்த்த பெண் மங்கைப் பருவம் எய்தினள்; தன் தலைவனுந் தானுமாக ஒருநாள் அவள் அச் செடியருகில் வர நேர்ந்தது. அப்போது அவள், தன் தங்கையாகிய அச் செடியின் எதிரில் தன் காதலனோடு விளையாடுதற்கு

நாணி, அவனை நோக்கி, 'அம்ம, நாணுதும் நும்மொடு நகையே' என்று கூச்சத்தோடு கூறுகின்றனள்.

புன்னைச் செடியைத் தங்கையென்றே உண்மையோடு கருதி, எவ்வளவு அழுந்திய நேயவுணர்ச்சி பெற்றிருந்தால் அத் தமிழ் மகள் அங்ஙனம் அதனெதிரில் நாணுவாள்! இத தமிழ் மகளின் ஆருயிர் நேயத்திற்கும் ஓர் எல்லையுண்டோ?

**குறிப்புரை:** ஆயமொடு - தோழிமாரோடு. மறந்தனம் துறந்த - மறந்தனமாய் விட்டு நீங்கிய. காழ் - விதை; புன்னை விதையானது. முளை அகைய - முளையாகித் தளிர்க்க. நெய் பெய் - நெய்யோடு கூடிய. தீம் பால் - இனிய பால்; ஆவின் பால். வெண்ணெய் எடுத்த பாலை விடாமல் அதனோடு கூடிய நல்ல பாலையே விட்டு என்றபடி. நுவ்வை - நும் தங்கை. அம்ம - வியப்புக்குறி. பொருளுணாத்தும் இடைச்சொல். நகை- விளையாட்டுக்கு. (சக)

# 5. அறிவு

## அரசு விற்றிருத்தல்

[அரசியல் என்பது உலகுககு அளி செய்தல. அதற்கு, மயக்கந் தீர்ந்த அறிவும், நடு நிலைமையும், முறை வேண்டுவார்க்கும் குறை வேண்டுவார்க்கும் எளிதாகவும் இனிதாகவும் இடந் தரும் பண்பும், உதவும் உளளமும், நல்லமைச்சர் முதலிய ஆட்சிக் குழுவினருமம அரசனுக்கு வேண்டும். உலகுக்கு இங் ஙனம் நலம் உதவும் உள்ளொளி நிகழ்ச்சியே அரசு வீற் றிருக்கை என்பதுமாம.]

குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி,
இடைத்தெரிந் துணரும் இருள்தீர் காட்சிக்
கொடைக்கடன் இறுத்த கூம்பா உள்ளத்து
உரும்பில் சுற்றமோடு இருந்தோன்.

—பெரும்பாணாற்றுப்படை, சசக - சஎ.

அரசன் அத்தாணி மண்டபத்தில் அமைச்சர் முதலிய அரசியற் சுற்றங்களின் நடுவில் உயர்ந்த தோற்றத்துடன் ஒளியோடு இருந்து ஆட்சி புரியும் இயல்பு இச் செய்யுட் பகுதியில் வருகின்றது. உயர்ந்த தோற்றத்துடன் ஒளியோடு இருத்தல் என்பதுதான் இதன்கண் காணப்படும் சிறப்பு. இப்படி இருத்தலை வீற்றிருத்தல் என்று சொல்லுவார்கள். அது, எப்படி?

இந் நிலைமையை விளக்குதற்கு இப் பகுதியில் ஓர் உவமை வருகின்றது. கிழக்குப் பக்கம், கடல் நடுவில், இருள் நீக்கி எழுகின்ற ஞாயிற்று மண்டிலம் தன் கதிரொளியை நாற்புறமும் விரித்துக் காட்சியாய்த் தோன்றுதல்போல அரசன் அரசியல் மாந்தரின நடுவில் வீற்றிருப்பான் என்பது.

ஞாயிறு அப்படி நாள்தோறுங் கீழ் கடலில் தோன்றி என்ன செய்கின்றது? அதனையே அரசனும் செய்கின்றனன். ஞாயிறு இருள் தீர்ந்த ஒளியுடையது. உலகத்தில் எல்லா உயிர்களுக்கும் நடுவு நிலையாய் இருந்து உதவி வருகின்றது. அற முறைமையை விரும்பி வாழ்க்கை நடத்துகின்றவர்களுக்கும் அது, உதவியாயிருக்கின்றது. பொருட்குறையை விரும்பி வாழ்க்கை நிகழ்த்துகின்றவர்க்கும் அது, உதவியாயிருக்கின்றது. மொத்தத்தில் அது, உயிர்களுக்கு உதவுதலையே கடமையாகக் கொண்டு, அதன்கண் தாராள உள்ளத்துடன் கடலலையாகிய சுற்றத்துடன் விளங்குகின்றது. இங்ஙனமே, அரசனும், இவ்வுள்ளொளி உயர்வுடன் நல்ல அமைச்சர் முதலியவர்களின் இடையில் வீற்றிருக்கின்றனன்.

இவ் வுள்ளொளியின் மாட்சியே அரசற்கு மாட்சியாவது. மற்று உடை குடை முடி இருக்கை முதலிய வெளியடையாளங்களெல்லாம், இவ் வுள்ளொளி வீற்றிருக்கையை உணர்த்துதற்கே உள்ளன.

காஞ்சியில் தொண்டைமான் இளந்திரையன், முன்பு இங்ஙனம் அரசு வீற்றிருந்தான் என்பது இச் செய்யுட் பொருள்.

**குறிப்புரை :** குணகடல் வரைப்பில் - கீழ்கடல் எல்லையில். முந்நீர் நாப்பண் - அக் கடலின் நடுவில். முந்நீர் - கடல். பகல் செய் மண்டிலம் என்றது ஞாயிறு, இருளை நீக்கி உலகத்திற்குப் பகற்பொழுதை உண்டாக்கும் மண்டிலம் என்பது பொருள். பாரித்தாங்கு - பரப்பினாற்போல; கதிர்களை விரித்துத் தோன்றினாற்போல. முறை - அறம். குறை - பொருள். வேண்டுநர்க்கும் - விரும்புவார்க்கும். வேண்டுப - வேண்டியவற்றை. வேண்டினர்க்கு - வேண்டினபடியே அவரவர்க்கு. அருளி - அருளோடு வழங்கி. இடை - நடுநிலைமை. இருள் தீர் காட்சி - மயக்கம் நீங்கின அறிவினால். கொடைக் கடன் இறுத்த - உதவும் முறைமையைச் செய்த. கூம்பா உள்ளத்து - குவியாத தாராள உள்ளத்துடன். உள்ளத்துடன் இருந்தோன் என்று கொள்ள வேண்டும். உரும்பு இல் - கொடுமையில்லாத. சுற்றம் என்றது, அமைச்சர் முதலிய அரசியற் குழுவினர். (சஉ)

## பொருளை வழங்கு முறை

[பெரிய நிலையிலுள்ளோர், தம் பெருமைக்கேற்பவும் பெறுவோர் தகுதிக்கேற்பவுமே பொருளை வழங்குதல் இயல்பு; முறையுமாகும். ஆயினும், தங் கடமைகளை அளவறிந்து காத்துச் செய்தலும் இன்றியமையாதது. அது, வழங்குவோர்க்கும் நாட்டுக்கும் வழிவழி நலம் பயக்கும்.]

கடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்,
மடவன் மன்ற; செந்நாப் புலவீர்!
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாம்சில
அரிசி வேண்டினெ மாகத், தான்பிற
வரிசை யறிதலின் தன்னும் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே; அன்னதோர்
தேற்றா ஈகையும் உளதுகொல்?
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.

—புறநானூறு, கசO.

ஔவையார் ஒருநாள் நாஞ்சில் மலைக்குச் சென்றார். அவருடன் வேறு விறலியர் சிலருஞ் சென்றனர். நாஞ்சில் மலையின் வேந்தனை நாஞ்சில் வள்ளுவன் என்று கூறுவர். ஔவையாருக்குப் பெரிய வேந்தர்களும் வள்ளல்களும் பழக்கம். நேராய் வள்ளுவன் அரண்மனைக்குச் சென்றார்.

ஔவையாருடன் வந்த வளையல் அணிந்த விறலியர், தம்முடைய வீட்டின் பக்கத்திற் பறித்த கீரைக்கு அதன் மேல் தூவும்பொருட்டு அரிசி சிறிது விரும்பினர். அரண்மனையிலுள்ளோர்க்கு இது தெரிந்தது. ஔவையார் வருகையை அரசனும் அறிந்தான் சிறிதுநேரம் அவருடன் மகிழ்ச்சியாய் அளவளாவியிருந்து பின்பு ஒரு மலையைப் போன்ற பெரிய யானையை அவருக்குப் பரிசிலாக அளித்தான்.

அன்புடன் வழங்குதலை மறுத்தல் முறையல்லாமையால், அவ் வியானையை ஔவையார் பெற்றுக்கொண்டார். பெற்றுத் திரும்பிய ஔவையார், தம்மை எதிர்ப்பட்ட புலவர் பெருமக்களை நோக்கிப் பின் வருமாறு கூறுகின்றார் :

"புலவீர்! நாஞ்சில் மலைத் தலைவன் இருக்கின்றானே, அவன் மிகவும் மடமையுடையவன். நாங்கள் கீரையின்மேல் தூவும் பொடிக்காகச் சிறிது அரிசி விரும்பினேமாக, அவன், பரிசிலர் தகுதியை அறிந்து உதவும் வழக்கமுடையனாதலின் அத் தகுதியையும், தனது தகுதியையும் எண்ணிப் பார்த்து, மலையைப்போன்ற ஒரு பெரிய யானையை எங்கட்கு வழங்கினான். ஒருவர்க்கு ஒன்று கொடுப்பதில் இங்ஙனம் அளவு தெளியாமற் கொடுக்கும் கொடையும் உண்டுபோலும்! பெரிய நிலையிலுள்ளோர், தாம் செய்வதற்குரிய முறைமை தெரிந்து அம் முறைமை போற்றிச் செய்யமாட்டார்கள்போலும்!"

இங்ஙனம் ஔவையார் வியந்து கூறியதில், நாஞ்சில் வள்ளுவனைப் போன்ற கொடையாளிகளின் பெருமையும்

உள்ளவியற்கையும் நன்கு வெளிப்படுமாயினும், முறைமை கருதாது இவ்வாறு வழங்குவது பின்பு அவர்க்கும் நாட்டுக்கும் நலந் தராமற் போகுமே என்னும் இன்றியமையாத அறிவுரையும் அடங்கியிருக்கின்றது.

தமக்கு ஒன்று கிடைத்தாற் போதும் என்று எண்ணுவோருள் ஒருவரா ஔவையார்!

குறிப்புரை: தடவு நிலை - பெரிய நிலைமையையுடைய. பலவின் - பலா மரங்களையுடைய. நாஞ்சில் பொருநன் - நாஞ்சில் மலையின் வேந்தன். மடவன் - அறிவு மெல்லியன். மன்ற - உறுதியாக. செம் நா - பொய் கூறாத நடுவு நிலைமை வாய்ந்த நாவினையுடைய. விறலியர் - பாட்டுப் பாடும் மகளிர். படப்பை - பக்கம்; வீட்டின் பக்கம். அடகின் - இலைக்கறியின். கண் உறை - தன்கண் தூவும் பொடியாகிய பொருள்; தன்மேல் இடும் பொடிப்பொருள். சில - சிறிது. தான் - அவன். பிற என்பதற்குப் பொருளில்லை; அசை. வரிசை - பரிசிலர் வரிசை; வரிசை - தகுதி. அறிதலின் - அறிந்து உதவும் வழக்கமுடையனாதலின். தன்னும் - தன் நிலையையும். உம்மை, பரிசிலர் வரிசையோடு என்னும் பொருளையுந் தழுவிநின்றது. தூக்கி - கருதிப் பார்த்து. இரு கடறு வளைஇய குன்றத்து அன்னது ஓர் - பெரிய வெளிநிலஞ் சூழ்ந்த மலையை ஒத்ததொரு. கடறு - சுரம். வெளிநிலத்தின் இடையே உள்ள மலை திரண்டு பெரிதாகத் தோற்றுமாதலின், மிகப் பெரிய யானை என்று புலப்படுத்துதற்காக இங்ஙனங் கூறினார். நல்கியோன் - நல்கும் இயல்புடையனாயிருந்தான். தேற்றா - அளவு தெளியாத. போற்றார் - போற்றார்கொல் என்று 'கொல்' என்பதைப் பின்புங் கூட்டி உரைத்துக்கொள்ள வேண்டும். அம்ம - வியப்பிடைச்சொல். கடன் - முறைமையை. (சங)

## வகை தொகை

[இது, பொதுவில் 'திறமை' என்னும் பொருளில் வழங்குகின்றது. தொகுத்தும் வகுத்துங் கூறுதலுஞ் செய்தலும் காரிய வெற்றிக்கு இடஞ் செய்யும். அழகுமாகும். அது சான்றோரியல்பு. திருமண நிகழ்ச்சியைப் போன்ற அரிய செயல்களுக்கு இவர் போன்றார் முதன்மையானவர்.]

நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை
[முந்துறீஇத்,
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவர்
[இனமாக,
வேய்புரை மென்தோள் பசலையும், அம்பலும்,
மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடன்நீங்கச்
சேய்உயர் வெற்பனும் வந்தனன்
பூஎழில் உண்கணும் பொலிகமா இனியே.

—கலித்தொகை, ௩௯ : ௪௬ - ௫௧.

திறமை யில்லாதவனை வகை தொகை யில்லாதவன் என்பர்; எனவே, வகை தொகை யுள்ளவன் திறமை யுள்ளவன் என்பது பெறப்படும் வகை தொகை என்பது இச் செய்யுளில் 'தொகை வகை' என முறைப்படி வந்துள்ளது.

எதனைச் செய்தாலும் அல்லது எதனைப் பேசினாலும் வகை தொகையாகச் செய்யவேண்டும்; பேசவேண்டும். அதுவே திறமை எனப்படுவது. அந்தத் திறமைதான் அழகுமாகும். அதனாலேதான் தொகை வகையை இச் செய்யுளில் 'தகை மிகு தொகை வகை' என்று ஆசிரியர் வழங்கியிருக்கின்றார். தகை மிகு என்பதற்கு அழகு மிகு என்பது பொருள்.

மேலும், இந்தத் தொகை வகை யழகு எல்லாரிடமும் அமைவது அருமை. சான்றோரிடம் இயல்பாக அமைந்திருக்கும். ஒருவரை, அவர் சான்றோரா அல்லரா என்று அறிந்துகொள்வதற்கு இத் தொகை வகை அழகையே ஓர் அடையாளமாகவுங் கொள்ளலாம். இங்கே 'தொகை வகை யறியுஞ் சான்றவர்' என்றே சான்றோர் கூறப்படுதலை அறிதல் வேண்டும்.

எல்லாவற்றிற்கும் இங்ஙனம் வகை தொகையானவர் வேண்டும்போது, சிக்கலான களவொழுக்கத்திலிருந்து

நிலையான கற்பொழுக்கத்தில் தலைவன் தலைவியரை நிலைப் பிப்பதான, எவ்வளவோ முதன்மையான, திருமண நிகழ்ச்சியைக் கூட்டுவிக்குஞ் செயலுக்கு மட்டும் அத் தகைய சான்றோர் வேண்டாமற்போவரா? சான்றோ ரினந்தான் திருமண நிகழ்ச்சிக்குக் கட்டாயம் வேண்டப் படும்.

தோழி, தன் தலைவிக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தி யைச் சொல்லுகின்றாள்.

"அம்மே! திருமணத்துக்கு முழுத்தம் பார்த்து வைக்கும் கோள்நூல் வல்ல ஆசிரியனை முன்னிட்டுக் கொண்டு, எதனையும் வகை தொகையாகப் பேசுதலை அறி யுஞ் சான்றோராகிய சுற்றத்துடன் நின்னை வரைதற்குத் தலைவன் வந்துவிட்டான். பிரிவினால் உன் தோளிற் பரந்த பசலையும, களவினால் பிறர் அறியாது நிகழும் அம்ப லும், காதலால் நீ கனவினிற் கண்ட மாயப் புணர்ச்சியு மெல்லாம் ஒருங்கே நீங்கும்படி வந்தனன். இனி, 'பூவி னது அழகையுடைய நின் கண்கள் பொலிவு பெறுவன வாக" என்பது.

இச் செய்யுட் பகுதியில், முதல் இரண்டடிகளிற் செறிவமைந்த ஓசை யழகு எதிர்ந்துள்ளமை அறிந்து மகிழ்தற்குரியது.

**துறிப்புரை:** நெறி அறி செறி குறி - நூல் நெறியினால் அறிந்த, இருவருங் கூடுதற்குரிய நன்முழுத்தம். 'அறி குறி' என்று கூட்டிச் செல்க. புரி திரிபு அறியா - இட்ட முழுத்தம் எக்காலும் வேறுபட்டுத் திரிதல் அறியாத. அறிவன் - கணி; கோள்நூல் வல்லோன். முந்துறீஇ - முன்னிட்டுக்கொண்டு. இனமாக - தனக்குச சுற்றமாக. வேய் புரை - மூங்கிலை யொத்த. அம்பல் - அலராத பழிசசொல்; குறிப்பாகப் பழிக்கும் பழிப்புக் கள். மாயப் புணர்ச்சி - கனவிற் பொய்யாகத் தோன்றிய புணர்ச்சி. உடன் - ஒருங்கே. சேய் உயர் வெற்பனும் - தொலை வாக உயர்ந்த மலைநாட்டவனாகிய தலைவனும். பொலிக மா - பெரிது பொலிக. (சச)

## வரிசை யறிதல்

[தகுதி வேறுபாடு அறிந்து காரியஞ் செய்தல், உயிரறிவின் வளர்ச்சிக்கு இடஞ் செய்யும். அவ் வறிவு வளர்ச்சிக்குரிய உயர்ந்த நோக்கங்களை எழுப்பும். பொதுநோக்காற் காரியஞ் செய்தல் அவ்வளவு பெரிதன்று ; வரிசை யறிந்து செய்யும் இதுவே மேம்பாடுடையது. ஈதலுக்கும் இது பொருந்தும்.]

ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள் ;
வரிசை யறிதலோ அரிதே, பெரிதும்
ஈதல் எளிதே, மாவண் தோன்றல் !
அதுநற் கறிந்தனை யாயின்,
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே.

—புறநானூறு, கஉக.

'ஈதல்' எளிதன்று ; ஆனால் ஈதலும் மிக எளிதாம்படி அதனினும் பல மடங்கு மேம்பட்ட பண்பு வேறொன்று உள்ளதென்றால், அது, எவ்வளவு விரும்பத்தக்கது ! அதுவே, 'வரிசை யறிந்து ஈதல்' என்பது.

பொதுநோக்காக எல்லாரையும் ஒன்றுபோற் கருதி ஈதலால், பொதுவாக உடம்பு வாழ்க்கைக்கு நலனுண்டாகும். சிறப்பாகத் தகுதியறிந்து ஈதலால், அத் தகுதிகளாகிய அறிவு வாழ்க்கையும் அருள் அன்பு வாழ்க்கைகளும் ஓங்கும். இவற்றுள் எது சிறந்தது ? எத்தனை மடங்கு சிறந்தது ?

இச் சிறந்த உண்மையை உலகுக்கு அறிவுறுத்தும் ஆசிரியரது திறம் எவ்வளவு பாராட்டத்தகுந்தது !

உயிரறிவின் கிளைகளை ஓங்கச்செய்யுங் கொடைகளே நாட்டுக்கு இன்றியமையாதன. அவற்றின் வழி, உடம்பு வாழ்க்கை தானே அமையும். அது கருதத் தகுந்ததுமன்று ; நோக்கமுமன்று ; அதனையே நோக்கமாகக் கருதி

ஞல், மேல் நிலையாகிய உயிரறிவின் வளர்ச்சிகளை இழந்து விடுதலோடு, நோக்கம் பொய்ம்மையிற் செல்லுதலால் உடம்பின் ஊண் வாழ்க்கைக்கும் வறுமையுண்டாகும். நாட்டில், வறுமை அலை வெள்ளமாய் உள்ளதெனின், அதற்குக் காரணம், இவ்வுயர் நோக்கங்கள் இல்லாக் குறைவேயாம்.

வரிசை யறிந்த செயல்கள் உயர் நோக்கங்களை எழுப்பிப் பிறவியை மாட்சிமைப்படுத்தும். கபிலர் இவ வரும் பேருண்மையை மலையமான் திருமுடிக் காரிக்கு அறிவுறுத்துதலே இச் செய்யுள் வடிவில் வந்துள்ளது. அவர் பின்வருமாறு அறிவுறுத்துகின்ருர் :

'ஒரு திசைக்கண் வள்ளன்மையுடைய ஒருவனை நினைந்து நான்கு திசையினுமுள்ள பரிசின் மக்கள் பலரும் வருவர். பெரிய வண்மையையுடைய தோன்றலே! அவர்களுக்கு ஈதல் என்பது எளிது, ஆனல், அவர்கள் வரிசையறிந்து ஈதல் அரிது. அதனை நீ நன்கு அறிந்தனையானல், அறிவுடையோரிடத்தில், வரிசை கருதாத பொதுநோக்குக் கொளுதலை விட்டொழிவாயாக'

குறிப்புரை : உள்ளி - நினைந்து. பரிசில் மாக்கள் - பரிசில் நாடி வரும் மக்கள். வரிசை - தகுதிப்பாடு. மா - பெரிய. வண் - வண்மையுடைய. நற்கு - நன்கு. பொது நோக்கு - தகுதி வேறுபாடு கருதாது எல்லாரையும் ஒரே தரமாகப் பார்க்கும் பொதுவான நோக்கு. மதி, முன்னிலையில் வரும் அசை. ()

## போருக்குக் காரணம்

[நாட்டில் அறிவு விளக்கம் உண்டாகும்படி ஆட்சி செய்யாமை, உலகிற் போர் எழுதற்குக் காரணம். அறிவு விளக்கத்துக்கு அறிஞர்களும் அவர்களை ஆதரித்தலும் இன்றியமையாதன. அறியாமை உறையும் இடம் போர்க்களமாதல் இயல்பு. இச் செய்யுள் மிக்க நுட்பம் வாய்ந்து மிளிர்கின்றது.]

மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்

புலவ ரெல்லாம் நின்னோக் கினரே;
நீயே, மருந்தில் கணிச்சி வருந்தவட் டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே.

—புறநானூறு, சஉ: கக - உச.

"மலையிலிருந்து இறங்கி நிலவெல்லை கடந்து யாறுகளெல்லாம் கடலை நோக்கிச் சென்று வீழ்வது போலப், புலவரெல்லாம் நின்னை விரும்பி நின்னை நோக்கி வருகின்றனர்; நீயோ, அவர்களுக்குத் தக்க பரிசில் நல்கும் பொருட்டு, நினக்கு மாற்றாராகிய சேர பாண்டிய அரசர்களின்மேல் போர் எதிர்ந்து அவர்கள் நிலத்தை நோக்கிச் செல்கின்றனை" என்று கோவூர்கிழார் ஒரு நாள் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை நோக்கிக் கூறுகின்றார்.

அறிஞர்களைப் பாதுகாக்கும்பொருட்டே ஆட்சியும் போரும் என்பது இதனால் விளக்கமாகின்றது. பொது மக்களுக்கு அறிவை விளக்கும்பொருட்டு அறிஞர்கள் பணி செய்கின்றனர். அறிஞர்களைப் புரப்பது அரசன் கடன். பிறநாட்டு மன்னர்களை நோக்காது, சோழநாட்டு மன்னனைப் புலவரெல்லாரும் ஒருங்கு நோக்கினரென்றால், இவன்பால் பேராதரவு இருக்கின்றதென்பது பெறப்படும். அறிஞர்கட்கு ஆதரவில்லாத பிற நாடுகள் வாளா உண்டு உடுத்து இருந்து என்ன பயன்? அதனால், அந் நாட்டு மன்னர் போருக்கு உரியராகின்றனர்; இவன் அவ் வேந்தருடைய மண் நோக்கும்படி நேர்கின்றது; அதுவும், கூற்றுவன் தனது 'கணிச்சி' என்னும் படைக்கலத்தை உயிர்கள் வருந்தச் சுழற்றிக்கொண்டு சினந்து சென்றாற் போன்ற வலிமையோடு அவர்மேற் படையெடுத்துச் செல்லும்படி நேர்கின்றது.

அவரவரும் தத்தம் நாட்டை அறிவு நிலைக்கு ஆதரவாகப் புரந்துவந்தால், போர் உண்டாக இடமில்லை;

அறம் துணை செய்யும். உலகிற் போர் எழுவதற்குரிய அழுகிய காரணத்தை இச் செய்யுள் ஆழ்ந்தறிந்து விளக்கியிருக்கின்றது.

குறிப்புரை: மலையின் - மலையிலிருந்து. இழிந்து - இறங்கி. மா - பெரிய. நிலவரை இழிதரும் - நிலவெல்லையைக் கடந்து செல்லும். மருந்து இல் - வேறு பரிகாரம் இல்லாத. வருந்த - உயிர்கள் வருந்த. வட்டித்து - சுழற்றி. முன்பொடு - வலிமையோடு. மாற்று இரு வேந்தர் - நினக்கு மாறுபாட்டினையுடைய இரு வேந்தர்களுடைய. 'கணிச்சி வட்டித்து' என்றதனால், போர் கொண்டு மண் நோக்கினை என்பது பெறப்பட்டது.

## நேரத் தறிவு

[வாழ்க்கைக்கு இது மிகவும் இன்றியமையாதது. புலவர்கள் நுண்ணுணர்வினராதலின், பண்டைக்காலத்தில் அவர்கள் இவ்வறிவிற் சிறந்திருந்தனர். இதனால், அரசர்களுக்கும் இவர்களால் மிக்க உதவியிருந்தது. புலவர்கள் அரசியலில் நுழைந்து நாட்டுக்குச் செய்திருக்குந் தொண்டு அளப்பரிது.]

இவன்யார் என்குவை யாயின், இவனே,
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழில் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே;
களிறே, முந்நீர் வழங்கும் நாவாய் போலவும்
பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே;
நோயில னாகிப் பெயர்கதில் அம்ம!
பழனம் மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே.

—புறநானூறு, கந.

'சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறை' என்னும் மன்னன் ஒரு நாள் 'உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்' என்னும் புலவர் பெருமானுடன், கருவூரில், 'வேண்மாடம்' என்னும் தனது அரண்மனையில் இருந்தான். புலவரும் அரசனும் பலவும் பேசி அளவளாவி மகிழ்ந்திருந்தனர். தொலைவில் திடுமென ஒரு பேரிரைச்சல் கேட்டது. இருவரும் உற்று நோக்கினர். படை வீரர் பலரிடையே பெரிய யானை யொன்று வீறி வருதலும், அந்த யானையின்மேல் மன்னன் ஒருவன் ஊர்ந்து வருதலும தெரிந்தன. சேரமான் உள்ளம் சற்று விரைந்து உருத்தெழுந்தது. அவ்வுருத்தல், 'யார் இவன்?' என்னுங் கேள்வியை எழுப்பியது. புலவர் கூர்ந்து நோக்கிப் பின் வருமாறு கூறினார் :

"இவன் யார் என்குவையாயின் இவன் கூற்றுவனை யொத்த வீரனாகிய களிற்றின் மேலோன்; நீர்நாடாகிய சோழநாட்டு மன்னன் சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளியாதல் வேண்டும். யானையோ, தன்னைச் சூழ்ந்த படைவீரர் குழுவை நீக்கிக்கொண்டு தன்மேற் பொருந்திய பாகரைப பொருள் செய்யாது ஓடி வருதலின் அது மதம்பட்டதாகல்வேண்டும். அவன் இன்னலின்றித் திரும்புவானாக"

சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறைக்கும், சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளிக்கும் இணக்கமில்லை; பகையுமுண்டு. புலவர் குறிப்பறிந்து நன்மொழியாகச் சொன்ன காரணத்தால், பகை, மேலும உருத்தெழாது அடங்கியது இன்றேல், அவ் விரு மன்னர்க்குமிடையே அப்போது என்ன நேர்ந்திருக்குமோ? புலவர்கள், நாட்டின் அமைதியை விரும்பிச் சங்க காலங்களில் அரசர்களிடையே அவ்வப்போதுஞ் செய்து வந்திருக்குந் தொண்டுகளை நினைந்தால், பிற்காலத்தவர்கள் அவர்களுக்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பது விளங்காமற் போகாது. என்ன செய்யலாம்? நன்றி நினைவோடு பலரும் நினைக்கவேண்டுமே!

**குறிப்புரை :** புலி நிறக் கவசம் - புலியின் தோலால் ஆகிய மெய்புகு கருவி; நிறம் - இங்கே, தோல் என்னும் பொருட்டு. பூ பொறி சிதைய - அதன் அழகிய புள்ளிகள் சிதையும்படி. எய் கணை கிழித்த - போரிற் பிறர் எய்த அம்புகள் அக் கவசத்தைக் கிழித்த. பகட்டு எழில் மார்பின் - பெருமை வாய்ந்த எழுந்த மார்பினையுடைய; 'மார்பினையுடைய களிற்றுமிசையோன்' என்பது. மறலி அன்ன - கூற்றுவனை ஒத்த; இவ்வுவமை தான் கருதியதை நிறைவேற்றியே தீர்வதற்கு வந்தது. மிசையோன் - மேலோன். முந் நீர் - கடலில். வழங்கும் - கிழித்துச் செல்லும். நாவாய் - மரக்கலம். மீன் - விண்மீன். நாப்பண் - நடுவில் விளங்கும். வாளோர் - வாள் வீரர். மொய்ப்ப - சூழ. படையைக் கிழித்துக்கொண்டு ஓடிவருதற்கு நாவாய் போலவும் எனவும், வீரர் பலரிடையே தலைமை தோன்ற வருதற்குத் திங்கள் போலவும் எனவும், பிறரைக் கொல்லுங் கொம்பினையுடைய சுறா மீனைப்போல் படைஞர் வாள் பிடித்துக்கொண்டு வருதலின் சுறவினத் தன்ன எனவும் உவமைகள் வந்தன. சுறவு இனம் - சுறா மீன் திரள். மரீஇயோர் - யானையுடன் பழகுவோரான பாகர். அறியாது - பொருள் செய்யாது. மைந்து - மதம். நோய் - வருத்தம். தில், அம்ம, அசைகள். பழனம் மஞ்ஞை உகுத்த பீலி - கழனியில் மயில் உதிர்த்த தோகையை. சூட்டொடு - நெற்கட்டோடு. 'தொகுக்கும் நாடு' என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். கொழு மீன் - கொழுவிய மீனும். விளைந்த கள்ளின் - அங்கங்கும் உண்டான கள்ளையும் உடைய. விழு நீர் வேலி - மிக்க நீராகிய வேலியையுடைய. நாடு கிழவோன் - சோழநாட்டை யுடையோனான சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி என்போன். (௭௭)

## கல்வியும் செல்வமும்

[ஒருவரிடமே கல்வியும் செல்வமும் பொருந்துவது இயலாதென்றும் சிலர் கருதுவர். சங்க காலத்து அரசர் சிலர் வரலாறுகளை உற்றுநோக்கும்போது அது முரண்படுகின்றது. கல்வியிற் சிறந்த புலவர்களும், வேறு பல கலையறிஞர்களுங்கூட வியந்தெண்ணும்படி அச் செல்வர்களின் அறிவுநிலை மிகவும் அஃகியகன்று ஓங்கியிருந்தது. இச் செய்யுளில், சிறந்த ஆசிரியரே அதனை விளக்குகின்றனர்.]

செஞ்ஞா யிற்றுச் செலவும், அஞ் ஞாயிற்றுப்
பரிப்பும், பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்,

வளிதிரிதரு திசையும்,
வறிது நிலைஇய காயமும் என்றிவை
சென்றளந் தறிந்தோர் போல என்றும்
இனைத்தென் போரும் உளரே; அனைத்தும்
அறிவறி வாகாச் செறிவினை யாகிக்
களிறுகவுள் அடுத்த எறிகல் போல
ஒளித்த துப்பினை யாதலின், வெளிப்பட
யாங்கனம் பாடுவர் புலவர்? கூம்பொடு
மீப்பாய் களையாது, மிசைப்பரம் தோண்டாது,
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே.

—புறநானூறு, ௩௦.

தமிழ் நாட்டு அரசர்களிற் பலர், புலவர்களும் வியக்கத்தக்க பேரறிஞராகத் திகழ்ந்திருந்தனர். அவருள், சோழன் நலங்கிள்ளி என்பானும் ஒருவன். உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் பெரியார், அம் மன்னனின் பேரறிவினை மிக அழகாக இச் செய்யுளில் வியந்து கூறியிருக்கின்றார்.

பண்டைக்காலத்தில் பல துறைகளிலும் மிக்க கல்வியுடையார் பலப்பலர் விளங்கியிருந்தனர். ஞாயிறு செல்லும் வான் வழியையும், அதன் இயக்கத்தையும், அவ்வியக்கம் சூழ்ந்த உலகத்தையும், காற்று இயங்கும் திசையையும், ஓர் அடிப்படையுமின்றி நிலைபெற்றிருக்கும் ஆகாயத்தையும் அவ்வவற்றின் எல்லையளவுஞ் சென்று நேரில் அளந்து அறிந்தவர்களைப்போல இவை ஒவ்வொரு நாளும் இவ்விவ்வளவு அளவுடையன என்று ஆராய்ந்து திட்டமாகச் சொல்லும் ஆழ்ந்தகன்ற கலையறிவு படைத்தோரும் இருந்திருக்கின்றனர் என்று தெரிகின்றது.

அவ்வளவையும் அறியவல்ல அத்தகைய பேரறிவி ஞலும் அறிய முடியாத அத்தனை அடக்கமான பேரறி ஞன் நலங்கிள்ளி என்று முதுகண்ணன் சாத்தனர் இங்கே கூறுகின்றார். இதனைக் கேட்க, கருத மிக்க மகிழ்ச்சி உண்டாகின்றது. காலம் பார்த்துப் பிறர்மேல் எறிவதற் குரிய கல்லைக் களிறு தனது கதுப்பில் மறைவாய் அடைத்து வைத்துக்கொண்டிருப்பது வழக்கம். அதைப் போலத் தனது திறமையாகிய வலிமையைக் கிள்ளி அடக்கிவைத்துக்கொண் டிருப்பவன் என்று ஆசிரியர் விளக்குகின்றார். புலவர்கள், அத்தகையோன் வல்ல மையை எங்ஙனம் இயல்பறிந்து தெளிவாக விளங்கும்படி பாடமுடியும் என்றும் அவர் வியந்துரைக்கின்றனர்.

தமிழ்நாடு இத்தகைய அறிவும் வலிவும் உடையோரை யெல்லாம் பண்டு பெற்றுப் புகழ் எய்தியிருக்கின்றது.

கிள்ளி, செல்வத்திலுங் குறைந்தவனல்லன். அவனது நாடு சோழ வள நாடு. அன்றியும், கடல் வாணிகத்தி லும் அவன் ஓங்கி விளங்கினன். துறைமுகங்களை அவன் சிறந்த முறையில் அமைத்திருந்தான். ஆறு, கடலொடு கலக்குந் துறை தக்கபடி அமைந்திருந்தது. ஆற்றுமுகத் தில் வரும் மரக்கலங்கள், பாய்மரத்திலிருந்து பாய்களை யாமலும் மேலுள்ள சுமைகளை இறக்கியெடுக்காமலும் இனி தாகத் துறைகளில் வந்து தங்கும்படி, அவ்வளவு அமைப் போடு அவன் துறைமுகங்கள் விளங்கின. கடலால் வரும் பண்டங்களோ பலப் பல. செழுமை மிகுதியினால் அவற் றின் தகுதி போற்றாதவரான கடற்கரைப் பரதவர் அள வர் முதலியோர், அப் பண்டங்களை மரக்கலத்திலிருந்து இறக்கிக்கொண்டு போகும்போது இடைநிலமாக உள்ள அகன்ற வழியிலெல்லாம் சிந்தும் மேலுமாகச் சொரிந்து விடுவர். அத்தனை வளமான கடற்பண்டங்களையுடைய நாட்டிற்குரியவன் நலங்கிள்ளி.

இவ்வளவு பெருஞ் செல்வங்களோடு அவன் அவ் வளவு பேரறிஞனாகவும் இருந்து விளங்கியது எவ்வளவு

அருமை! கல்வியும் செல்வமும் ஒருங்கு இரா என்னுங் கருத்து இயற்கைக்கு எவ்வளவு மாறுபட்டதாயிருக்கின்றது! சோழன் நலங்கிள்ளியின் புகழ் இவ்வுலகில் நீடு நிலைபெறுக என்று நாமும ஒரு வாழ்த்துக் கூறும்படி அவன் திறன் எவ்வளவு கண்ணியமாக விளங்குகின்றது!

**குறிப்புரை:** செலவும் - செல்லும் வீதியும். பரிப்பும் - இயக்கமும். மண்டிலம் - உலகம். வளி - காற்று. வறிது நிலைஇய - ஆதாரம் இல்லாமல் நிலைத்திருக்கின்ற. காயமும் - ஆகாயமும். இவை - இவற்றை. என்றும் - நாடோறும். இனைத்து - இவ்வளவினது. என்போரும் - என்று அளவிட்டு அறிந்து சொல்வோரும். அனைத்தும் அறிவு - அவ்வளவும் அறிந்து காணும் அறிவானது. அறிவு ஆகா - அளந்தறிய இயலாத. செறிவினையாகி - அடக்கமுடைய அஃகியகன்ற பேரறிவினை யுடையையாய். அடுத்த - அடைத்த. துப்பினை - வலியினையுடையை. வெளிப்பட - விளங்கும்படி; அத்தகைய நின் திறம் தெளிவாக விளஙகும்படி. கூம்பொடு - பாய்மரத்திற் பொருந்திய. மீ பாய் - மேல் விரித்த பாயை. மிசைப் பரம் - மேலுள்ள பாரத்தை. தோண்டாது - எடுத்து இறக்காமல். புகார் - ஆற்றுமுகததில். பெருங் கலம் - பெரிய மரக்கலத்திலிருந்து. தகார் - பண்டங்களின் தகுதியறியாதவரான பரதவர், அளவர் முதலாயினர். இடைப்புலப் பெருவழி - இடைநிலமாகிய அகன்ற வழியிடங்களில். சொரியும் கடல் பல் தாரத்த நாடு கிழவோய் - சொரிந்துவிடுகின்ற அவ்வளவு வளமான பற்பல கடற்பண்டங்களைப் பொருந்திய நாட்டையுடைய நலங்கிள்ளீ! 'நாடு கிழவோய், அறிவு அறிவாகாச் செறிவினையாகி ஒளித்த துப்பினையாகலின் புலவர் நின் திறம் வெளிப்பட யாங்கனம் பாடுவர்?' என்று உரைத்துக்கொள்ளப்படும். (சூஅ)

## சூழ்ந்து செயல் புரிதல்

[செய்கை நிறைவேறுதற்கு ஏதொன்றையும் ஆராய்ந்து செயல் புரிதல் இன்றியமையாதது. அகத்திணை யொழுக்கங்களில், தோழி இத் திறமையில் மிக வல்லுநள். சூழ்ந்து செயல் புரிதலில், அறத்தொடு நிற்கும் முறைகளும் அடங்கும். இச் செய்யுளில் அம்முறை ஒன்று இனிமையாய் வருகின்றது.]

அகவன் மகளே, அகவன் மகளே!
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்

அகவன் மகளே! பாடுக பாட்டே;
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.

—குறுந்தொகை, உரு.

கட்டுவிச்சி, முறத்தில் சில நெல்லை வைத்து எண்ணிக் கொண்டு தனக்குத் தெரிந்த மலைகளின் வளத்தையெல்லாம் பாடித் தெய்வத்தை அழைத்துக் குறி பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவள் அங்ஙனம தெய்வம் அழைப பவளாதலின், அவளை 'அகவல் மகள்' என்று சொல்லு வது வழக்கம. கழுத்தில் சங்கு மணிகளைக் கோதது அக் கோவையை அணிந்துகொண்டிருப்பாள். அம் மணிக்கோவையின் வெண்ணிறத்தை யொப்ப அவள் தலைமயிரும் அவ்வளவு வெள்ளையாய் நரைத்திருந்தது.

தலைவியின் வேறுபாட்டுக்குக் காரணந தெரியாமல் செவிலி முதலியோர் இங்ஙனங் கட்டுவிசசி குறி பார்ப்ப தற்கு ஏற்பாடு செய்தனர். தலைவி காதலித்த கணவனை அவளுக்குத் திருமணங் கூட்டாமல், இவையெல்லாம் என்ன வீண் வேலை என்பது தோழியின் எண்ணம். குறி பார்க்குமிடத்தில் தலைவியும் தோழியுங்கூட உடனிருந்து நிகழ்ச்சிகளைக் கவனித்துக்கொண்டிருந்தனர்.

ஒரு வாய்ப்புக் கிடைத்தது. கட்டுவிச்சி தனக்குத் தெரிந்த பலப்பல மலைகளின் வளங்களையெல்லாம் மிகவும் அழகாகப் பாடிக்கொண்டு வந்தவள், இடையில், தலைவி காதலித்த தலைவனது மலையைப்பற்றியும் பாடினாள். தோழிக்குந் தலைவிக்கும இனிப்புத் தட்டியது. உடனே தோழி இதுவே நேரமென்று கருதி, 'அகவன் மகளே, அகவன் மகளே! அந்தப் பாட்டையே திருப்பிப் பாடு; இன்னும் பாடு; அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டையே இன்னொரு தரம் பாடு' என்று கிளர்ச்சியோடு கூறினாள்.

செவிலி முதலியோர்க்கு ஆராய்ச்சி பிறந்தது; 'அவர் நன்னெடுங் குன்றம்' என்று தோழி சொல்லிய சொல்லில், 'அவர்' என்றது யாரை? அவர் மலையைப்பற்றிப் பாடுவதில் அவள் அவ்வளவு மகிழ்ச்சிகொள்வதற்குக் காரணம் என்ன? என்று கருதத் தொடங்கினர். செய்தி வெளிப்பட்டது. தலைவி, தான் காதலித்த கணவனையே எய்தும் பேறு பெற்றாள்.

தோழியின் வல்லமை எப்படியிருக்கிறது? சூழ்ந்து செயல் முயன்றால், உள்ளன்போடு கூடிய மெய்ம் முயற்சிகள் தக்கபடி நிறைவேறுதல் திண்ணமன்றோ!

**குறிப்புரை:** அகவல் - அழைத்தல். **அகவன் மகளே** - தெய்வத்தை அழைத்துக் குறிபார்க்கும் கட்டுவிச்சியே. மனவு - சங்கு மணி; கோப்பு - கோவை. அவள் கழுத்தில் அணிந்து கொண்டிருந்த சங்கு மணி மாலையையே அவள் தலைமயிரின் நரைக்கு உவமை கூறியபடி. கட்டுவிச்சி இதனால் நரைமூதாட்டி என்று தெரிதலால், அவள் தலைமயிர் சிக்கலாய்ப் பொலிவிழந்து குறுகியே தோன்றும்; அப்படியிருந்தும், அதனை 'நன்னெடுங் கூந்தல்' என்று தோழி பெருமையாகக் கூறியது, விளையாட்டுக் கருதியது. கூந்தலையுடைய அகவன்மகளே என்று உரைத்துக் கொள்ள வேண்டும். நல் நெடு குன்றம் - இனிய உயர்ந்த குன்றத்தை. 'இன்னும் பாடுக' என முன் வந்த தொடரைக் 'குன்றம் பாடிய பாட்டே இன்னும் பாடுக' என மீண்டுங் கூட்டிக்கொள்வது சிறக்கும். (௪௬)

### திறமை யுரை

[உலகியலில் திறமையான உரையாடல் இன்றியமையாது வேண்டும். இனிமைக்கும் நல்லது. மகளிர்க்கு இத் திறமை சிறக்குமாயின் மிக்க பயன் உண்டு. அகத்திணை முறையில் தோழி இத் திறமையில் மிகு வல்லுநள்! இலக்கியங்களில் அவள் திறமைகள் பலப் பல முறைகளில் மின்னிக் காணப்படும். இச் செய்யுளில் அவள் இயல்பு ஒன்று அழகாக வருகின்றது.]

கோழிலை வாழைக் கோள்மிகு பெருங்குலை
ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த

சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியா துண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல்செல் லாது
நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கும் எய்து நாட!
குறித்த இன்பம் நினக்கெவன் அரிய?
வெறுத்த ஏஎர் வேய்புரை பணைத்தோள்
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளும் இனைய ளாயின், தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்
கங்குல் வருதலும் உரியை; பைம்புதல்
வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன;
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே.

—அகநானூறு, உ.

தோழி: "மலையில் குரங்கு இருந்தது. வாழைப் பழங்களிலிருந்தும் பலாச் சுளைகளிலிருந்தும் தேன் ஒழுகிப் பாறையின் சுனைகளிற் பாய்ந்திருந்தது. குரங்கு அதனை நீர் என்று நினைத்துக்கொண்டு பருகிவிட்டது தெவிட்டிப் போய், மரம் ஏறமாட்டாது, தரையில் உதிர்ந்துகிடந்த பூக்களின்மேல் படுத்து அப்படியே உறங்கிவிட்டது. குரங்குக்கு இது, எதிர்பாராத இன்பம். இப்படியே பல விலங்குகளும் எதிர்பாராத இன்பத்தை மலையில் அடைந்து வந்தன."

தலைவன்: "என்ன தோழி! ஏதோ கதை சொல்லுகிறாய்! அப்படிப்பட்ட வளமான மலையா? ஆனால், நாமும் ஒரு நாளைக்கு அங்கே போய் வரலாம். அது, எங்கே இருக்கிறது?"

தோழி: "உம்! மலைக்குச் சொந்தக்காரரே இப்படிச் சொன்னால், அவரும் அப்படி எதிர்பாராத இன்பத்திற் சிக்கிக்கொண்டு, தன் தொழிலை மறந்து, அவ்விடத்தி லேயே பலகாலும் அழுந்தி ஏமாந்திருக்கவேண்டும் என்று தானே நினைக்கவேண்டியிருக்கிறது."

தலைவனுக்கு இப்போதுதான் கருத்துப் புரிந்தது. 'நமது நாட்டின் மலை நிகழ்ச்சியைப்பற்றி ஏதோ சொல்லு வதுபோலச் சொல்லி, எதிர்பாராத நிலையில் நாம் தலைவி யின் இன்பத்தைத் துய்த்து, நம் அறச் செயலை மறந்து, இக் களவொழுக்க இன்பத்திலேயே அழுந்தியிருக்கிறோம் என்று நமது செயலையே குறிப்பாகப் புலப்படுத்தி, நம் மைக் குரங்காகவும் விலங்காகவும் ஆக்கிவிட்டாள்' என்று தலைவன் உள்ளம் எண்ணியது.

தலைவன்: "தோழி! எனக்கு நல்ல பட்டங் கட்டி யிருக்கிறாய். பகலில் வரும்படி நீயே குறியிடங் காட்டி னாய்; இப்போது இப்படிச் சொல்லுகிறாய்; சரி, நான் இனி என்ன செய்யவேண்டுமென்கிறாய், சொல்."

தோழி: "நான் என்ன சொல்வது இருக்கிறது? எனக் கும் ஒன்றுந் தோன்றவில்லை. வேங்கை மரங்களும் பூங் கொத்துகள் மலர்ந்தன. இந்தக் காலங்களில் தினைப்புனம் அறுவடை செய்வது வழக்கம். தலைவியம்மாளுக்கு இனி இங்கே காவல் வேலை இல்லை. உங்களுக்கும் வேலை இல்லை."

தலைவன்: "அப்புறம்!"

தோழி: "அப்புறம், வீட்டுப்புறந்தான்; வேறென்ன செய்வது? இவளோ தன் நெஞ்சத்தை நிறுத்துகின்றவளா யில்லை என்றால் உங்கள் தலைவியை இனி வைத்து ஆற்று வித்துக்கொண்டிருத்தல் முடியாது. இல்லத்தில் காவலர் சோரும் பதம்பார்த்து, இரவில் வேண்டுமானால் நீங்கள் வரலாம்"

தலைவன்: "அதைப்பற்றிக் கவலையில்லை."

தோழி : "உங்கள் வீரத்தில் எனக்கு அப்படி ஒன்றும் ஐயமில்லை. கருக்கல் நேரமானால் கவலையில்லைதான். நிலா தான் இப்போது வளர்பிறைக் காலமாய் ஊர் நிரம்பப் பொழிந்து தள்ளுகிறதே, என்ன செய்வது?"

தலைவன் : "பின்னை என்ன செய்வது ?"

தோழி : "அதையேதான் நானும் திருப்பிச் சொல்ல வேண்டும். பின்னை என்ன செய்வது ?"

தலைவன் : "அப்படிச் சொன்னால்,....?"

தோழி : "வேறு எப்படிச் சொன்னாலுந்தான் நான் ஏதோ பட்டங் கட்டுகிறேன் என்கிறீர்கள். மறுபடியும் களவொழுக்கமாகிய அந்தக் குறியா இன்பத்திலேதானே தவிக்கப் பார்க்கிறீர்கள் ; வரைந்துகொள்ளுதலாகிய குறித்த இன்பம் உங்களுக்கு என்ன அருமை என்று கேட்கிறேன். காலமும இப்போது மணவினை நடைபெறு கின்ற தகுநத காலம்; வேங்கையும் மலர்ந்தன ; வளர் பிறையுங் கூட."

தலைவன் உள்ளத்தில் அசைவு பிறநதது. 'வரைந்து கொள்ளுதலைத் தவிர வேறொன்றும் செய்யக்கூடாத நிலை யில், தோழி தன்னைக் குரங்கென்றும் விலங்கென்றுங் கூடத் துணிவாகத் திட்டாமல் திட்டிக்கொண்டு வந்து விட்டாள்' என்று அவன் உள்ளம் நினைத்தது. தான் முன்பே வரைதலுக்கு முந்திக்கொள்ளாத ஏழைமைக்கு வருந்தினான். தனது பிழைக்கு நினைந்து திருந்தி னான். விரைவில் வரைந்துகொண்ட பின், களவொழுக் கத்திற்போல அவ்வப்போதுந் தவறிப்போகாத குறித்த இன்பத்தைத் தலைவியின்பால் எய்தி, இவ்வளவுக்குங் கார ணம் தோழியின் அறிவுரைதானே என்று எண்ணி அவள் அன்புக்கும் வல்லமைக்கும் மகிழ்ந்து நன்றியுடையவ னானான். தோழியின் வல்லமை எப்படி இருக்கிறது !

**குறிப்புரை :** கோழ் - கொழுமையான. கோள் மிகு - காய்த்தல் மிக்க. **ஊழ் உறு - வரிசை பொருந்திய. தீங் கனி - தீங்கனியாலும். உண்ணுநர்த் தடுத்த - தம்மை உண்ணுவோரைத்**

தமது இனிமையால் பிறவற்றை உண்ணுதபடி தடுத்த. சாரல் பலவின் - பக்கமலையில் உள்ள பலாமரத்தின். சுளையொடு - சுளையாலும். ஊழ்படு - கனிந்து ஒழுகிய; ஊழ்தல் - முதிர்தல்; இங்கே கனிந்து என்றபடி. விளைந்த தேறல் - முற்றிய தேனை. கடுவன் - ஆண் குரங்கு. அயலது - அயலில் உள்ளதாகிய. கறி வளர் சாந்தம் - மிளகு கொடி படர்ந்தேறிய சந்தன மரத்திலும். நறு வீ அடுக்கத்து - மணங்கமழும் மலர்ப்பாயலில். கண் படுக்கும் - கண்ணுறங்கும்; உறங்கும். குறியா - முன் கருதாத. நின் மலை - நினது மலையில். நாட - மலை நாடனே. குறித்த இன்பம் - கருதியபடியே சென்று, தவறுதலின்றி அடையும் இன்பம். திருமணம் செய்துகொண்ட கற்பொழுக்கத்திலாயின் இங்ஙனங் கருதியபடியே தலைவியினிடம் இன்பம் எய்தலாமாதலின், அது குறித்த இன்பம் எனப்பட்டது. எவன் அரிய - எங்ஙனம் அரியனவாகும்? வெறுத்த ஏர் - செறிந்த அழகினையும். வேய் புரை பணைத்தோள் - மூங்கிலை ஒத்த பருத்த தோளினையும் உடைய. 'உடைய இவளும் இனையளாயின்' என்று தொடரவேண்டும். நின்மாட்டு இனையளாயின் என்றபடி. இனையளாயின் - இத்தன்மையளாய் நெஞ்சங்கொண்டவளானால்; இனையளாயின் கங்குல் வருதலும் உரியை என்று கூறியபடி. தந்தை அரு கடிக் காவலர் - இவள் தந்தையின் அரிய காவலையுடைய காவலர். சோர் பதன் ஒற்றி - தமது காவலில் சோரும் நேரத்தை மறைந்திருந்து அறிந்து. கங்குலும் - இரவிலும். பை புதல் வேங்கையும் - பசிய புதர் சூழ்ந்த வேங்கை மரங்களும். ஒள் இணர் விரிந்தன - ஒள்ளிய பூங்கொத்துக்களை மலர்ந்தன. ஊர் கொண்டன்று - ஊர் கொண்டது; ஊர் நிரம்பப் பொழிகின்றது என்றபடி. ஆதலால், இரவில் வருதற்கும் மறுத்து வரைதற்கும் நினைப்பூட்டியபடியாம். (௬0)

## அறிவின்பம்

[அறிவிற்சிறந்த புலவர்களாலேயே நாட்டில் அறிவின்பம் பெருகுகின்றது; அதினும், நிலையான அறிவின்பம் வழிவழிப் பெருகுகின்றதென்றே கூறவேண்டும். ஆசிரியர் பொய்கையார் திறம் ஒன்று இச் செய்யுளில் வருகின்றது. பொய்கையாரே அந்த அறிவின்பத்தில் வியந்து திளைத்து மகிழ்கின்றார்.]

ஓஒ, உவமன் உறழ்வின்றி ஒத்ததே!
காவிரி நாடன் கழுமலங் கொண்டநாள்

மாஉதைப்ப மாற்றார் குடையெலாம் கீழ்மேலா
ஆவுதை காளாம்பி போன்ற புனல்நாடன்
மேவாரை அட்ட களத்து.

—களவழி நாற்பது, ௩௬.

இலக்கிய இன்பத்திற்கு உவமைகள் தனிச் சிறப்பாக உதவுகின்றன.

சோழன் செங்கணான் போர் செய்த போர்க்களத்தில் அவன் குதிரைகள் உதைத்தலால் பகைவர் குடைகளெல்லாம் தலைகீழாய் விழ்ந்து கிடந்தன அதற்கு இச் செய்யுளின் ஆசிரியரான பொய்கையார் ஓர் அழகான உவமையைத் தந்து தமது செய்யுளைச் சிறந்த இலக்கியமாக்குகின்றார். ஆனினங்கள் மேயச் செல்லும் ஈர நிலங்களில் அவற்றின் காலால் உதையுண்டு கீழ்மேலாகிய குடைக் காளான்களைப்போல அப் பகைவர் குடைகள் கீழ்மேலாயின என்கின்றார்.

புலவர்களைப்போல் அறிவின்பம் பெருக்குதற்கு வேறு யாவரால் இயலும்?

**குறிப்புரை**: ஓ, வியப்புக் குறி. உவமன் - உவமை. உறழ்வின்றி - மாறுபாடின்றி. காவிரி நாடன் என்றது, சோழன் செங்கணானை. (களவழி நாற்பது கஎ-ம் பாட்டின் விளக்கம் பார்க்க; இந்நூல் பக். ௩௪.) கழுமலம்-கழுமலம் என்னும் சேரநாட்டின் ஊரை. கொண்ட நாள் - சேரனோடு போரிட்டு உரிமையாக்கிக்கொண்ட நாளில்; அதாவது, அப்போர் செய்த நாளில். மா - குதிரைகள். மாற்றார் - பகைவர்களுடைய. கீழ் மேலா - கீழ் மேலாக. ஆ - பசுக்கள். காளாம்பி - குடைகாளான் என்னும் ஒருவகைப் பூடு. போன்ற - போன்றன. புனல் நாடன் - அக் காவிரி நாடன். மேவாரை - பகைவரை. அட்ட - கொன்ற. களத்து - போர்க்களத்தில். 'கழுமலங் கொண்ட நாள், களத்து, மாற்றார் குடையெல்லாம் கீழ்மேலாகக் காளாம்பி போன்றன; ஓ, இவ்வுவமை சிறிதும் மாறுபாடின்றி ஒத்ததே!' என்று இயைத்துக் கொள்ள வேண்டும். 'புனல் நாடன்' என்று மீண்டும் வந்தது முன்னே காவிரி நாடன் என்று சொன்னதைச் சுட்டிச் சொன்னபடி. ஆதலால், அப் புனல் நாடன் என்று அதனை உரைத்துக் கொள்க. (௫௧)

# 6. உணர்வு

## உணர்வு இயக்கம்

[உணர்வு, மெய்யன்பர்களிடம் விளங்கி இயங்குகின்றது. அவர்களிடம் விரைந்தும் பரவுகின்றது. அதனை அடக்குதலும் அதற்கு ஒளிதலும் இயலாது. அதனால், அதனோடு இயைந்து ஒளி விரிந்து விளங்குதல் நலம் பயக்கும்.]

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி நெய்தல் சிதைக்குந் துறைவன்
நல்லன் என்றி யாயின்,
பல்இதழ் உண்கண் பசத்தல்மற் றெவனோ ?

—ஐங்குறுநூறு, கஎ0.

உலகத்தில் மறைக்க முடியாத நிகழ்ச்சி யொன்று எங்கும் நிழலாடி விளங்கிக்கொண்டிருக்கின்றது. அதன் ஆற்றலுக்கு முன் தடையாய் நிற்பது யாதுமில்லை அது, எல்லாவற்றையும் ஊடுருவிக்கொண்டு விளங்கித் தன்னை எவ்வகையிலாயினும் வெளிப்படுத்திக்கொள்ளும் வீறு படைத்துள்ளது. உலகம் முழுமையும் அதற்கே வயமாகி அதனாலேயே இயங்கிக்கொண்டிருக்கின்றது. அதுதான் 'உணர்வு நிகழ்ச்சி' என்பது. மெய்யன்பு உடையவர்களிடம் அது விரைந்து பரவுகின்றது. தயிரில் திரண்டு தோன்றும் வெண்ணெயைப்போல் அது, அவர்களிடத்தில் நன்றாக விளங்கியுந் தெரிகின்றது.

கணவனும் மனைவியும் மெய்யன்பினால் நேயங்கொண்டு விளங்குகின்றவர்கள். அவர்கள் உணர்வில் ஒருவரை யறியாமல் ஒருவரிடம் ஓர் அணுத்துணையேனும் வேறுபாடு தோன்றுமானால் அது மற்றவர் உணர்வில் உடனே பரந்து சென்று அவர் உள்ளத்தையும் உடம்பையும் வேறுபடுத்தித் தன் உண்மையை விளங்கப் புலனாக்கிவிடுகின்றது. அன்புடையவர்கள் உள்ளம் இத்தகைய காலங்களில் ஒரு சிறந்த நிறைகோலாக இருந்து விளங்குகின்றது. தன் மனைவிக்குத் தெரியாமல் தலைவன் பிறர்

நலத்துக்கு ஊறுசெய்யும் பொல்லாங்குடையவனைப் ஒரு நேரத்தில் சிறிது வேறுபட்டான். உடனே அவன் மனைவியின் கண்களில் ஒளி வேறுபடுவதாயிற்று. தன் கணவன்பால் ஏதோ தீங்கிருக்கின்றது என்று கருதி அவள் ஆற்றாமை கொண்டாள். அவள் தோழி அதனை அறிந்து, 'தலைவர் மிகவும் நல்லவர்; அவர்மேல் களங்கம் ஏற்றுவது நன்றன்று' என்று ஆறுதல் சொல்ல வந்தனள். உடனே தலைவி, 'அவர் நல்லவர் என்று நீ சொல்லுவதானால், என் கண்கள் ஏனோ ஒளி வேறுபடுகின்றன?' என்று கூர்மையாகக் காரணங் காட்டி வினவுகின்றனள்.

உணர்வு நிகழ்ச்சிகளின் இயக்கம் உலகத்தில் எவ்வளவு ஆற்றலும் விரைவும் வாய்ந்ததாயிருக்கின்றது!

**குறிப்புரை:** கரையது - கரையில் இருப்பதாகிய. இருகழி நெய்தல் - கரிய கழிநீரையுடைய நெய்தல் நிலத்தை; அதாவது, அந் நிலத்திலுள்ள மீன் முதலியவற்றை. துறைவன் - அத்தகைய துறையையுடைய தலைவன்; இங்ஙனம் அவனைக் கூறினமையால், அவன் புறத்தொழுக்கம் தெரிந்தது. நல்லன் என்றியாயின் - தோழி, நீ அவனை நல்லவன் என்பாயானால். பல் இதழ் - பல இதழ்களையுடைய மலர். உண்கண் - அம் மலரை யொத்த என் உண்கண்; உண்கண் என்றது, கவருங் கண் என்னும் பொருட்டு. பசத்தல் - நிறம் வேறுபடுதல். எவனோ - ஏனோ? யாது காரணம் பற்றியோ? மற்று என்பதற்குப் பொருளில்லை; அசை. (௫௨)

### அறிவும் அன்பும்

[அறிவு, காரண காரியமும் பொருத்தமும் ஆராய்வது. அன்பு, அவற்றையெல்லாங் கருதாது உணர்வு நிலையாய்ப் பெருகிப் பரவுவது. அன்பு, காதலென்றுங் கற்பென்றும் இருவகைப்படும். கற்பு, அருள நிலைக்குச் செலுத்தும்.]

அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை;
குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே;
இதற்கிது மாண்ட தென்னாது, அதற்பட்டு
ஆண்டொழிந் தன்றே மாண்தகை நெஞ்சம்;

மயில்கண் அன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉங் கான லானே.

—குறுந்தொகை, கஅ௪.

காரிய காரண அறிவு மக்களுக்கு எப்போதும் நிகழ்வதில்லை. அன்பு ஊற்றெழுகின்றபோது அந்த அன்பில் அறிவு ஒளிந்துபோகின்றது. அன்பின்முன் அறிவின் நடமாட்டமே அற்றுப்போகின்றது. அந்நிலையில் அறிவு வெறும் அறிதலளவாய் நிகழுமேயல்லது, 'இதற்கு இது பொருந்தும்' என்னுங் காரண காரிய ஆராய்ச்சி உடையதாயிராது. இங்ஙனம் அறிவை விழுங்கிச் செல்லும் வியக்கத்தக்க ஆற்றல், உலகத்தில் அன்பு ஒன்றிற்கே உண்டு. அன்பு தலைப்பட்டவிடத்தில் எத்தகைய பேரறிவும் அதன்முன் நில்லாது. அன்பு மிகச் சிறந்ததாயிருந்தால் அறிவு அந்நொடியே தன் வலி மடங்கிப் போகும்

தொன்றுதொட்டுப் பிறவிதோறுந் தொடர்ந்து வருகின்ற காதலன்பு ஒன்றே உலகத்தில் மிகச் சிறந்த அன்பெனப்படும். வாழ்க்கையின் இயற்கை நிகழ்ச்சியாகிய இக் காதலன்பு மழை வீழ்தலை ஒத்தது. பின், இல்லறத்திற் செய்யும் அன்பு, விழுந்த அம் மழை நீர் பயிர்கட்கும் உயிர்கட்கும உதவியாய் ஆறுகப் பெருகியோடுதலை ஒத்தது. ஆதலாற், காதல் என்பது வாழ்க்கையில் இயலபாக வந்து வீழும் அன்பின் வீழ்ச்சி என்று தெளியபபடும்.

அது வீழ்வது இன்ன நேரத்தில் இன்ன இடத்தில் என்று எவராலும் அறிதல் இயலாது. அது தலைப்பட்டவிடத்து அதன் எதிர் நிற்பதும் யாதுமில்லை. எல்லாம் தத்தம் ஆற்றல் மடங்கி அதன் வயமாகவே நிகழ்ந்து செல்லும்.

இந்த உண்மைகள் இப் பாட்டில் அழகுபெற விளக்கப்பட்டிருக்கின்றன. தமிழ்ச்சுவையின் இரு நுட்பம் அறிந்து, உணர்வுக் கருவாகிய இவ் வொட்பங்களை ஆரிய

அரசன் 'யாழ்ப் பிரமதத்தன்' என்னும் ஆசிரியர் இனிது தெளிவித்திருப்பது மிக்க மகிழ்ச்சி யளிப்பதாகும்.

நெய்தல் நிலத்தில் வலைஞர் குலத்தில் ஒரு நங்கை வளர்ந்து வந்தாள். ஒரு நாள் கடற்கரைச் சோலையில் அவள் உலவி வந்தாள். அவள் உடம்பும் கண்களும் மின்னொளி மிக்குத் திகழ்ந்தன. அவள் பார்வை, கண்டாரைப் பிணிக்குந் தன்மை பெற்றுச் சுடர் விரிந்து மிளிர்ந்தது. பிணிக்குந் தொழிலால் அவள் கண்களை வலை என்றே சொல்லலாம. வலைஞர் குலத்துக்கும் அவள் கண் வலைக்கும் பொருத்தம் உள்ளதன்றோ!

நெய்தல் நிலமாகிய அக் கடற்கரை நிலத்திற்கும் மற்ற மருத நிலம் முதலிய நிலங்கட்கும் உரிய பெருநிலக் கிழவனான அரசிளைஞன், அந் நேரத்தில் அச் சோலைக்குப் பொழுதுபோக்காக வர நேர்ந்தது மயிற்பீலியின் கண்ணைப்போன்ற நிறமாட்சிமையுடைய கூந்தல் முடியோடு சித்திரப் பாவைபோற் காணப்பட்ட அப் பரதவர் மடமகளை அவன் அங்கே கண்டான். பருந்தின் வீழ்வுபோல முற்கூறிய அன்பின் வீழ்வு அவர்களிடையிற் கதுமென வீழ்ந்தது. அக் கானற்சோலை அந நங்கையின் கண்வலையிற் படுங் கானலாயிற்று.

பார்வையினின்றுங் கண்களை மீட்க முடியவில்லை. அப் பார்வைக்கு முன், அவன் கண்ணியம் முதலிய யாவும் நிலைநிற்கவில்லை. தான் மன்னன் என்பதும் அவள் தன் கீழ் வாழும் ஓர் நுளையர் சேரியள் என்பதுமான மலைக்கும் அணுவுக்குமுள்ள வேறுபாடும் தினைத்தனையுந தலைகாட்டவில்லை. 'இதற்கு இது ஏற்ற மாட்சிமையுடையது' என்று ஆராயும் ஆற்றல் அடியோடு முனைப்பவிந்து காரண காரிய அறிவு அவ் வன்பினல் விழுங்கப்பட்டுப் பெருமையான தன்மை வாய்ந்த நெஞ்சமும் அதன்கண் ஒன்றித் தான் வேறு என்னும் நிலை இல்லையாயிற்று.

நெஞ்சைப் பறிகொடுத்த இக் கோலத்துடன் வெற்றுடம்பினனாய் இளைஞன் தன் அரண்மனை திரும்பினான்.

நிலையறிந்து கொண்ட பாங்கன், காரணம் வினவி, 'இது தகுதியன்று' என இடித்துரைக்க, அரசிளைஞன்,

'நண்ப, அறிந்த உண்மையைப் பொய்த்துப் பேசுதல் ஆன்றோர்க்கு இயல்பன்று. அக் கானலிடத்துச் சிற்றூர்க்கு எவரும் போதலை நீக்குமின்; அங்கே எத்தகைய காரண காரிய அறிவும் தன்னுணர்வும் ஆற்றலவிந்து போகின்றன. இதில் யான் செய்யத்தக்கது யாதுமில்லை' என்று நிகழ்ந்த உண்மையை நிகழ்ந்தவாறே கூறினான். வேறு அவன் என்ன செய்ய இயலும்!

**குறிப்புரை:** அறி கரி - நெஞ்சறிந்த உண்மை. தான் பெருந்தன்மையுடையவனே என்றற்குத் தன்னையும் உளப்படுத்தி 'ஆன்றோர்க்கில்லை' என்றான். சிறு குடி - சிற்றூர். செலவு - அங்கே போதல் செலவு குறுகல் ஓம்புமின் - போதல் மேற்கொள்ளுதலை நீங்குமின்; போகவேண்டாம் என்பது கருத்து; இந் நிகழ்ச்சியைக் குற்றமாகக் கருதிக்கொண்டு அங்கே செல்லுதலிற் பயனில்லை என்றபடி. மாண்டது - ஏற்ற மாட்சிமையுடையது. என்னாது - என்று ஆராய முற்படாது; அதற்பட்டு - அதனிற்பட்டு; அக் கண் வலையில் என் நெஞ்சம் தன் வலி மடங்கி அகப்பட்டு; ஆண்டு - அக கானற் சோலையிலேயே. ஒழிந்தன்று - ஒழிந்தது; தங்கிவிட்டது. மாண் தகை - மாட்சிமைப்பட்ட தகுதியையுடைய. 'கானலான் நெஞ்சம் அதற்பட்டு ஒழிந்தன்று' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். நுண் வலைப் பரதவர் - நுண்ணிய நூலினால் ஆன வலைகளையுடைய வலைஞர். பரதவர் - செம்படவர். கானலான் - கானலிடத்து; அதாவது, கடற்கரைச் சோலையிடத்து. (௫௩)

## உணர்வு நிலைகளின் இயல்பு

[எல்லா நினைவு சொல் செயல்களுக்கும் உணர்வின் கிளைகளே அடிப்படையானவை. அவற்றிற் சில படிமுறைகள் உள்ளன. மக்கள் முறையே அவற்றில் முன்னேறிச் செல்கின்றனர். வளர்ச்சியடைந்த உணர்வுநிலைகட்கேற்பப் புற நிகழ்ச்சிகளை எவருங் கற்றுக்கொடாமல் தாமே அமைகின்றன. அடையவேண்டுவது உணர்வு முன்னேற்றமே.]

நிழலான் றவிந்த நீரில் ஆரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி

அறுசுளை மருங்கின் மறுகுபு வெந்த
வெவ்வெங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்குவல் லுநள்கொல் தானே ஏந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த
பாலும் பலஎன உண்ணாள் [ளே.
கோல்அமை குறுந்தொடித் தளிர்அன் னோ

—குறுந்தொகை, ௩௫௬.

மக்களுடைய உணர்வானது, புலன்களின் காட்சி, மன முதலியவற்றின் நினைவு, உயிரின் அறிவு, அன்பு, இரக்கம் எனப் பல கிளைகளாக நடைபெற்று வருகின்றது. மக்கள் முன்னேற்றம், இவற்றை முறையே படி முறைகளாகக் கொண்டு நிறைவேறி வருகின்றது. யார் யார் எந்தெந்த உணர்வுக் கிளையில் உயர்ந்து நிற்கின்றனரோ அந்தந்த நிலைக்கேற்ற குணங் குறி செயல்களை அவர்கள் உடையவர்களாயிருப்பர். அவர்களுக்கு அவற்றை யாருங் கற்றுக்கொடுக்க வேண்டுவதில்லை. உணர்வு நிலையின் முன்னேற்றமே பிற எல்லா முன்னேற்றங்களுககும் மூலம். இதனைத் தெளிவாக அறிந்திருந்தால் மக்கள் வாழ்க்கையிற் பல சிக்கல்கள் நீங்கிப் போகும். அடிப்படை வளர்ச்சியில் மக்கள், சச்சரவின்றிக் கருத்தூன்றுவார்கள்.

தலைவியின் வீடு மிக்க செல்வாக்கு நிரம்பியது கையில் ஏந்தும் ஏனங்கள் பலவும் செம்பொன்னாற் புனைந்த கலங்கள். நிறமாகப் பொரிக்கப்பட்ட அவல் பொரிகளும் பாலிற் கலந்து உண்பது வழக்கம். நிரம்ப இருந்தலால் பால் அவ்வப்போதும் உண்டு மிகுந்துவிடும் தலைவி அழகிய பொரி கலந்த பாலும் பல என உண்ணாது மிகுத்துவிடுவள்.

இத்தகைய வளமான இல்லத்தில் கொழுமையாக வளர்ந்துவந்த தலைவிக்குக் காதலன்பு என்னும் உணர்வு நிலை கிளர்ந்தெழுந்தது. செவிலித்தாய் முதலியோர் தக்கது செய்யாமையால் தலைவி தன் தலைவனுடன் மனங்

கலந்து போய்விடும்படி நேர்ந்தது. வழி கடுமையானது. இதுகாறும் தலைவி வளத்தில் விளங்கியவளாதலின், அவள் பாதங்கள் கடுமையான வழிகளில் நடந்து பழகினவை யல்ல. பசியும் நீர் வேட்கையுங் கண்டறியாள்; அச்சத் துக் கிடமானவற்றையும் அணுகியறியாள். 'தலைவன் அன்பு' என்னும் உணர்வு நிலை இப்போது எல்லா நிலைமை களையும் பொறுக்கவல்ல வல்லமையை அவளுக்கு எப் படியோ அளித்துவிட்டன.

தலைவனைப் பின்பற்றி இப்போது அன்பு பிழம் பாகச் செல்லும் தலைவி, பாலை நிலத்தில், நிழல் அடங்கி அவிந்த நீரில்லாக் கொடிய வழியில் இன்ப வடிவாய்த் திகழ்கின்றாள்; நீர் அற்றுப்போன சுனையின் ஓர் ஓரத்தில், கண்டி வெதும்பிய மிகு வெப்பமான கலங்கல் நீரைத் 'தவ்' என்று ஒலியுண்டாகும்படி உறிஞ்சிக் குடித்துப் பசியையும் நீர் வேட்கையையும் பொருள் செய்யாமற் பாய்ந்து செல்கின்றாள்.

இந்தத் திறமைகள் அவளுக்கு எப்படி உண்டாயி னவோ என்று செவிலி எண்ணி வருந்துவதனால் என்ன பயன்? உள்ளத்தில் அன்பில்லாமற்போனால் தலைவி இவ் வழி நடைக் கடுமைகளை ஒரு நொடியேனுந் தாங்குதல் கூடுமோ?

உணர்வு மேன்மேல் வளர்ச்சிகளை அடையும்போது அதற்கேற்ற புற வல்லமைகளும் மக்கட்கு இயல்பாகவே உண்டாகின்றன. பெற வேண்டுவது அடிப்படையாக உணர்வு முன்னேற்றமே யல்லது வேறில்லை. வெளித் திருத்தங்களும் கற்பனைகளும் எவ்வளவுக்குச் செல்லும்?

**குறிப்புரை:** ஆன்று - அடங்கி. அவிந்த - இல்லாமற் போன. பாலை வெளியில் மரங்கள் பெரும்பாலும் இல்லாமை யாலும், இருக்கும் ஒன்றிரண்டு மரங்களும் வளமாக வளராமற் குறுகி நிழலுஞ் சிறுகியிருத்தலாலும், சூழ உள்ள கடு வெயிலின் மிகு உறைப்பால் அந் நிழலும் ஆற்றலடங்கி அவிந்து நிற்றலாலும் 'நிழல் ஆன்று அவிந்த' எனப்பட்டது. ஆர் இடை - அரிய வழி

யிடையே. கழலோன் - வீரக்கழல் அணிந்த தன் தலைவன். காப்ப - பாதுகாத்து வர. கடுகுபு - விரைந்து. அறு சுனை - நீரற்ற சுனையின். மருங்கில் - ஓர் ஓரத்தில். மறுகுபு - சுண்டி வெந்த - வெதும்பிய. வெவவெம - மிக வெப்பமான கலுழி - கலங்கல் நீரினை. தவ என - தவ வென்னும் ஒலியுண்டாக. குடிக்கிய - குடிக்க. தான் யாங்கு வல்லுநள்கொல் - தான் எவ்வாறு வல்லவளாயினளோ? பொன் - பொனனொலியன்ற புனை கலத்து - சித்திரிக்கப்பட்ட எனத்து. அம் - சிறத்தால் அழகிய. பொரிக் கலந்த - பொரியுடன் கலந்த. பல என - மிக்கன என. உண்ணாள் - உண்ணாது மிகுப்பவளாகிய. 'உண்ணாளாகிய தளிரன்னோள் தான் கலுழி குடிக்கிய யாங்கு வல்லுநள்கொல்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். கோல் - திரட்சி. அமை - பொருந்திய. தொடி - வளையலணிந்த. தளிர் அன்னோள் - தளிரை ஒத்த மென்றன்மை வாய்ந்தவளான என் மகள். (நிச)

## கலந்த கேண்மை

[நட்புணர்வு, மிக்க ஆற்றல் வாய்ந்தது. நட்பு அமைந்த இடம தன்னலமற்ற இடம. உயிரையும் உதவும் இடம். இங்ஙனம் பரந்த உணர்விலே திளைத்துக் கிடக்கும நட்பினரின் சொற செயல்கள மிக்க உருக்கமும வியப்பும விளைப்பன. வேள் பாரியின் நட்பில வயமாகித் தம் இனிய உயிரையும் விடுத்த கபிலரின் உருக்க மொழிகள் இச் செய்யுளில் வருகின்றன.]

கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்
சிலைகெழு குறவர்க்கு அல்குமிசை வாகும்
மலைகெழு நாட! மாவண் பாரி!
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீஎற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே;
பெருந்தகு சிறப்பின் நட்பிற் கொல்லாது
ஒருங்குவரல் விடாஅது ஒழிகெனக் கூறி
இனையை யாதலின் நினக்கு மற்றியான்
மேயினேன் அன்மை யானே; ஆயினும்,
இம்மை போலக் காட்டி உம்மை

இடையில் காட்சி நின்னோடு
உடனுறை வாக்குக உயர்ந்த பாலே.

—புறநானூறு, உ௱௨௰௬.

கபிலரும வேள் பாரியும் சிறந்த நட்பினர்; ஒருவருக்காக ஒருவர் உயிர்விடும் நட்பினர். நட்பு இங்ஙனம் உயிரையும் வெளவுமாயின் அதன் உணர்வு எவ்வளவு ஆற்றல் வாய்ந்ததாயிருக்கின்றது! அத்தகைய பேராற்றல் வாய்ந்த நட்புணர்வின் வயமாகியோர், நினைப்பன, சொல்வன, செய்வன எல்லாம் அவ்வுணர்வில் கதுவப் பெறாத மற்றவர்களுக்கு ஒரு பெரும் வியப்பாகத்தான் இருக்கும். அதற்கு, இச் செய்யுளில் வருங் கபிலர் பெருமானின் உணர்ச்சி மொழிகளே சான்றாகும்.

பாரி இறந்துவிட்டான்; கபிலர் உள்ளம் அனலிற் புழுவெனத் துடித்தது, ஆனால், பாரியின் மகளிர்க்கு ஆதரவாயிருக்கவேண்டுங் கட்டாயம் அவருக்கு உண்டாயிற்று. சிலகாலம உயிர் தாங்கியிருந்து அம் மகளிரைப் பிறர்க்கு வாழ்க்கைப்படுத்திவிட்டுப் பின்பு, பாரியின் பிரிவாற்றாது தாமும் வடக்கிருந்து தமது அரிய புலமை யுயிரை அவர் விட்டுவிட்டார். அப்போது அவர், தமக்கு முன் பிரிந்து போன பாரியை நோக்கிக் கனிந்து கூறிய உணர்ச்சி மொழிகள் இவை:

"பாரி! நீ பிரிந்தபோதே என்னையும் உடனழைத்துச் செல்லவில்லை. இதனால், நின்னால யான் காப்பாற்றப்பட்டிருந்த காலங்களில், கலந்த கேண்மைக்கு ஒவ்வாமல் நீ என்னை ஓரளவு வெறுத்துவந்தா யாதல்வேண்டும்; அல்லது, பெருந்தன்மை வாய்ந்த தலைமையான நட்புக்கு ஏற்ப யான் பொருந்தினேன் அல்லனாதல் வேண்டும் என்று தெரிகின்றது; ஆயினும் இவை நடந்துபோன செய்திகள். எனது உயர்ந்த விதியானது, இம்மைபோல மறுமையினும் நின்னோடு உடன் இருத்தலை உண்டாக்குவதாக."

கலந்த கேண்மையாளரின் நினைவுகள் சொற்கள் செயல்கள் எவ்வெவ்வாறு செல்லும் என்பதற்கு இச்

செய்யுட்கள் போல்வன சிறந்த எடுத்துக்காட்டுகளாகு மல்லவா ?

**குறிப்புரை :** கலை - முசுக்கலை என்னுங் குரங்குவகை ; உண - கிழித்து உண்ணுதலால். கிழிந்த - பீறுண்ட. முழவு மருள் - மத்தளத்தைப் போன்ற. பெரும் பழம் - பெரிய பலாப் பழமானது. அல்கு மிசைவு ஆகும் - இட்டு வைத்து உண்ணும் உணவாகின்ற; பெரிய பழமாதலால் குறவர்க்குச் சிலகாலம் இட்டு வைத்து உண்ணும் உணவாய்ப் பயன்படுகின்ற இயல்பமைந்த மலை என்று தொடர்ந்துகொள்ள வேண்டும். ஒவவாய் - ஒவ்வாத ஒழுக்கமுடையையாய். என் புலந்தனை யாகுவை - என்னை வெறுத்துவந்தனை யாகுவை. சிறப்பின் - தலைமையினையுடைய. ஒல்லாது - இயையாமல். ஒருங்கு வரல் விடாஅது ஒழிக எனக் கூறி இனையை யாதலின் - நீ பிரிந்தபோது யானும் நின்னோடு ஒன்ருய் வருதற்கு இடம் விடாமல் என்னை இவ்விடமே இருக்க எனக் கூறி இங்ஙனம் நீ வேறுபட்ட தன்மையுடையை யாதலால். நினக்கு யான் மேயினேனன்மையான் - நின்னோடு யான் பொருந் தினேனல்லனுதல் வேண்டும். மற்று என்பதற்குப் பொருளில்லை; அசை. உம்மை - மறுமையிலும். இடை இல் காட்சி நின்னோடு- இடைவிடாத அறிவு ஒருமையுடைய நின்னோடு. உடன் உறைவு ஆக்குக - உடன் இருந்து வாழ்தலை உண்டாக்குக ! பால் - விதி.

## உணர்வு வெளி

[நண்பர்கள் உள்ளம் அன்புருவமானது ; அதனுல் அது நுட்பமும் விளக்கமும் உடையதாய் ஒளி பெறுகின்றது. உணர்வு வெளி யோடு தொடர்புகொள்கின்றது. இயக்கமுண்டாகின்றது. தொலைவிலுணர்தலும் அருஞ் செயல் புரிதலுமான ஆற்றல் களை அது, எய்துகின்றது. கோப்பெருஞ் சோழன் பிசி ராந்தையார் என்னும் நண்பர்களின் நிகழ்ச்சிகளிலிருந்து இவற்றை அறிந்துகொள்ளலாம்.]

கவைக்கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்
தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ
ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை
அவரை கொய்யுநர் ஆர மாந்தும்

தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
பிசிரோன் என்பஎன் உயிரோம் புநனே;
செல்வக் காலை நிற்பினும்,
அல்லற் காலை நில்லலன் மன்னே.

—புறநானூறு, உகரு.

சிறந்த நட்புணர்வினால் உள்ளம், அன்பு பிழம்பாய் உருவாகின்றது. அதனால் மேலுமேலும் உள்ளம், நுண்மையும் விளக்கமும் பெறுகின்றது; நண்பர்கள் ஒருவர் உள்ளத்தில் ஒருவர் ஒளியுடன் நிழலாடுகின்றனர்; அவர் கருத்துக்களும் நிழலாடுகின்றன. நண்பர்கள் ஒருவருக்கொருவர் தொலைவில் இருந்தாலும் நேரில் இருப்பது போலவே அவர்கள் கருத்துக்கள் உணரப்படுகின்றன. கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையாருக்கும் இடையில் மலர்ந்து விளங்கிய மிக உயர்ந்த நட்பின் நிகழ்ச்சிகள் இவ்வுண்மைகளை மெய்ப்பிக்கின்றன.

கோப்பெருஞ் சோழன், சோழநாட்டின் மன்னன்; பிசிராந்தையார் என்பவர் பாண்டி நாட்டிற் பிசிர் என்னும் ஊரிலிருந்த புலவர். இருவரும் ஒருவரை யொருவர் நேரிற் பாராமலே கேள்வி யளவாய் உயிர்நேயங் கொண்டு நண்பர்களாய் விளங்கினர். ஒருவர் எண்ணம் மற்றொருவர் உள்ளத்தில் தானே நிழலாடுவதாயிற்று.

சோழனுக்குத் தன் மக்களால் இடுக்கண் வந்தது. மானந் தாங்காது அவன் வடக்கிருந்து உயிர் துறக்க எண்ணினான். அவன் உள்ளம், உற்ற நண்பராகிய பிசிராந்தையாரை நினைந்தது. பிசிராந்தையார் உள்ளத்திலும் இவ் விடுக்கண் நிலைகள் நிழலாடின. பிசிராந்தையார் உடனே புறப்பட்டார். அவர் வருகின்ற தோற்றம் சோழன் உள்ளத்திலும் நிழலாடியது. என்ன வியப்பு!

அருகிலுள்ளவர்கள் ஐயுற்றபோது, கோப்பெருஞ் சோழன் பின்வருமாறு கூறினான்: 'என் உயிர் நண்ப

ஞகிய பிசிரோன் யான் செல்வமுடைய காலத்தில் நிற்பி னும், அல்லலுறுகின்ற இக் காலத்தில் ஒருகாலும் நிற்க மாட்டான் ; கட்டாயம் வருவான்' என்பது.

அன்பு பிழம்பாகிய உள்ளத்தில் நிழலாடியதே கடைசி யில் மெய்யாயிற்று !

குறிப்புரை : இச் செய்யுளின் முதல் ஆறு வரிகளிற் பாண்டி நாட்டின் சிறப்புக் கூறப்படுகின்றது. கவைக் கதிர் - பிளவு பட்ட கதிர்களையுடைய. அவைப்பு உறு - உரலிற் குற்றுதலுற்ற. வாக்கல் - வடித்த சோற்றையும் தாது எரு மறுகில் - துகளாக உதிர்ந்த எருவையுடைய தெருக்களில். போதொடு பொதுளிய - மலர்களோடு தழைத்த. வேளை - வேளைச் செடியினது. வெண் பூ - வெண்ணிறமான பூவை. வெண் தயிர்க் கொளீஇ - வெண் ணிறமான தயிரில் பெய்து. அட்ட - சமைத்த. அம் புளி மிதவை - அழகிய புளிஞ்சுவையுள்ள கூழையும். அவரை கொய்யு நர் - கொல்லைகளில் அவரைக காய்களை அறுப்போர். ஆர மாந்தும் - நிறைய உண்ணுகின்ற ; 'வரகஞ் சோற்றையும் தயிரில் வேளைக் கீரையை இட்டு இடையர் மகள் சமைத்த புளிங்கூழை யும் வயற்காடுகளில் அவரை கொய்வோர் நிறைய உண்ணும் இயல்பினையுடைய பாண்டி நாடு' என்று தொடர்ந்துகொள்ள வேண்டும். தென்னம் பொருப்பன் - தெற்குப் பக்கத்திலுள்ள பொதியில் மலைக்கு உரியோனுன பாண்டியனது. நல் நாட்டுள் ளும் பிசிரோன் - நல்ல பாண்டிநாட்டினுள்ளும் தொலைவிலுள்ள பிசிர் என்னும் ஊரோன் ; என்றது, பிசிராந்தையாரை ; ஆந்தை யார் என்பது அவரது இயற்பெயர். என் உயிர் ஓம்புநன் - என் உயிரைக் காப்போன் ; உயிர் நண்பர் என்பதற்கு இங்ஙனங் கூறினன். நில்லலன் - நில்லான். மன் - அசை. 'என் உயிர் நண்பனைப் பிசிரோன் என்பர் ; அவன் செல்வக் காலை நிற்பினும் அல்லற்காலை நில்லலன்' என்று உரைத்துக்கொள்ளப்படும். (நிகூ)

## வீரத் திரு

[வீரம் எப்போதும் வெளிப்படையாய் இருப்பதன்று ; இடையூறு நேரும்போது அது வெளிப்படும். வெளிப்பட்டால், பின்பு அதனைத் தாங்குதல் அரிது. வெளிப்படாத பொழுநிலையில் அவ் வீரமுடையோர், இனியராய்த் தக்க ஆக்கத்தொண்டுகள் செய்துகொண்டு விளங்குவர். அவர் மிகுதியினுற் பிறர் அந் நிலையினைக் குலைத்தல் ஆகாது.]

நீர்மிகிற் சிறையு மில்லை; தீமிகின்
மன்னுயிர் நிழற்றும் நிழலு மில்லை;
வளிமிகின் வலியு மில்லை; ஒளிமிக்கு
அவற்றோ ரன்ன சினப்போர் வழுதி [எதிர்ந்து
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போர்
கொண்டி வேண்டுவ னாயின் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே;
அளியரோ அளியர்அவன் அளியிழந் தோரே
நுண்பல சிதலை அரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக்கு உலமரு வோரே.

—புறநானூறு, ருக.

உலகியல் ஆற்றலைப் பொதுவாக இடம் பொருள் ஏவல் என்று சொல்லுவர். வேந்தன் சீறின் ஆம் துணை இல்லை. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி தன் காலத்தில் தமிழ் நாட்டில் மிக்க ஆற்றலுடையவனாய் இருந்தான் தனது நாடாகிய தமிழ் நாடு பலர்க்கும பொது என்னுங் கருததால் எவரேனும படையெடுத்து வந்தால் அதனை அவன் பொறுக்கமாட்டான். உடனே அப் போரினை ஏற்றுப் பொருது தோற்கடித்து அவர் நாட்டில் திறை பெற விரும்புவான். உடனே, கொள்க எனக் கொடுத்த மன்னர் நடுக்கந் தீர்வர். அல்லாதார், அவன் அருளை இழந்து ஒரு நாள் வாழ்க்கைக்குப் புற்றீசலைப்போல் போர்க்களததில் உழலுவோராய் மிக இரங்கத்தக்கவராவர்.

மாறன் வழுதி மிக்க இடம் பொருள் ஏவலால் வலிமை படைத்தவன்; அவன் வீரத்தைக் கிளறினால், பின்பு அதனைத் தாங்குதல் மிகவும் அருமை. வெள்ளம் மிகுந்து விட்டால் அதனைத் தாங்கும் அணையும் உண்டோ; தீ பெருகி விட்டால் உயிர்களுக்கு நிழல் கொடுக்கும் நிழலும்

இல்லை. காற்று மிகுமாயின் அதனைப் பொறுக்கும் வலியு மில்லை. வழுதியின் போர்ச்சினம் அவற்றை யொத்து ஒளி மிக்கதாயிருந்தது.

இங்ஙனம் ஐயூர் முடவனார் என்பவர் மாறன் வழுதி யைப் பெருமைப்படுத்திப் பேசியிருக்கிறார். இடையூறு வந்தால், வீரம் மேல் எழும். அதுவரையில் அது, இருக்கு மிடந் தெரியாமல் அடங்கியிருக்கும். நீரும் தீயும் வளியும் மிகாத நிலையில் அவை மிக இனிமையாய் உலகுக்குப் பயன்படுவது போல, வீரம் மிக்க அரசர், பொதுநிலையில் மிக இனியராய் உலகுக்குப் பற்பல ஆக்கப் பணிகளைச் செய்துகொண்டு விளங்குவர். அதனை ஏன் கெடுத்துக் கொள்ள வேண்டும் வீண் அவா இன்றிப் பலரும் இங்ங னம் ஆக்க முறைகளில் ஒழுகினால் உலகம் எவ்வளவு இனி மையாயிருக்கும்.

உலகில் அவா மிகுதியினால் அறம வழுவுகின்றபோ தன்றோ, இயற்கையும் வீரத்தோடு சீறுகின்றது. இன் றேல், உலகததில் ஒரோவொருகால் நீர் மிகுதலும், தீ மிகு தலும், வளி மிகுதலுங்கூட நிகழ இடமில்லையே

**குறிப்புரை :** சிறையும் - அணையும். மன் உயிர் - உலகில் நிலைபெற்றுள்ள உயிர்களை. நிழற்றும் - நிழல் செய்யும். வளி - காற்று. நீர், தீ, காற்று என்று இங்கே கூறப்பட்டவை ஊழி நீர், ஊழித் தீ, ஊழிக் காற்று என்று கொள்ளப்படும். 'மன் உயிர் நிழற்றும் நிழலுமில்லை' என்னுங் குறிப்பினால் இப் பொருள் பெறப்படுகின்றது. ஒளி மிக்கு - விளக்கம் மிகுந்து ; விளக்கம் என்றது, வழுதி இங்ஙனம் எங்கும் பேரெடுத்திருக்குந் தன்மை. சினப் போர் வழுதி - சினம் பொருந்திய போரையுடைய பாண்டி யன். தண் தமிழ் - தனது குளிர்ந்த தமிழ் நாடு. எதிர்ந்து - ஏற்று. கொண்டி - திறை. நடுக்கு - நடுக்கம். அளியரோ அளியர் - மிக அளியர் ; அதாவது, மிகவும் இரங்கத்தக்கவராவர். 'அளியரோ அளியர்' என இருமுறை அளியர் என்னுஞ் சொல் இங்கே அடுக்கி வந்தது ; இரங்குதலாகிய குறிப்பினாலும் இங்ங னம் அடுக்கு வரும். அளி - அருளை. சிதலை - கறையான். எடுத்த - உண்டாக்கிய. செம் புற்று - செந்நிறமான மண்புற்று. ஈயல் - அந்தப் புற்றிலிருந்து வரும் ஈசல். உலமருவோர் -

உழலுவோர்; ஈசல் உவமை, போரில் ஒரு நாள் உழலுதற்கு வந்தது ஒரு நாள் வாழ்க்கையும் வெற்றியுடன் நடத்திக்கொள்ள மாட்டாத அத்துணை எளியர் என்பதற்கு, 'ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோர்' என வந்தது. 'அவன் அளியிழந்த பகை மன்னர் பின்பு ஈசல் போல, களத்தில் ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோராவர்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (௬௭)

### அன்புக் கண்

[அறிவு நிலையே வாழுக்கையை நிறைவாக்காது. அன்புணர்வு முதலியன இன்றியமையாதன. மக்கள் ஒன்றின் ஒன்று உயர்ந்த உணர்வுநிலைகளாலேயே மேன்மேற் பெரியோராய் விளங்குகின்றனர். உலகுக்கும் பெரிது பயன்படுகின்றனர். அத்தகையோரது ஆதரவைப் பெறுதல், மக்கட்கு மிக்க நலந் தரும.]

நல்லுரை இகந்து புல்லுரை தாஅய்ப்
பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளந் தாங்கா வெள்ளம் நீந்தி
அரிதவா வுற்றனை நெஞ்சே! நன்றும்
பெரிதால் அம்மநின் பூசல்; உயர்கோட்டு
மகவுடை மந்தி போல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே.

—குறுந்தொகை, உ௯.

மக்கள், கருத்துக்களை உணரும் முறைகள் பற்பலவாயிருக்கின்றன. பயனும் அவ்வவற்றிற்கேற்ற அளவில் நிகழும்.

கருத்துக்களை அறிவினால் அறிதலும் உண்டு; அன்பினால் உணர்தலும் உண்டு. அறிவினால் அறிதலைவிட அன்பினால் உணர்தல் மிகுதியாகவும் மிகுந்த பயனுடையதாகவும் இருக்கும். மேலும், அறிவினால் அறிந்துகொள்ள முடியாத உணர்வு நிலைகள் உலகத்தில் அளவிறந்தன உள்ளன. அவற்றிற் பல அன்புக் கண் ஒன்றினாலேயே உணர்ந்து கொள்ள முடியும். அருட்கண்ணால் இன்னும் பலப்பல

உணரலாம் ஆதலால், அறிவு நிலை ஒன்று கொண்டே மக்கள் வாழ்க்கை நடத்திவிடுதல் இயலாது.

பச்சை மட்கலம் மழை நீரை ஏற்றால், கலத்தின் வெளியே நீர் கசியும். அதுபோல, மக்கள் வாழ்க்கையில் பற்பல வகையான உணர்வு நிலைகளாகிய வெள்ளம் உள்ளத்தில் துளும்பி அது தாங்காமல் உடம்பின் புறத்திலும் கனிந்து ததும்பும். அவை யெல்லாவற்றையும் அறிவு நிலையால் அறிதல் இயலாது. மரக் கிளைகளில் குட்டிகளைத் தழுவித் தாவுதலுடைய மந்திகளைப்போல அன்புள்ளந் தழுவி ஆதரவோடு உணர்வோரால் மட்டுமே உணர்ந்து கொள்ளுதல் கூடும்.

விரைவில் வரைந்துகொள்ள ஏற்பாடு செய்யவேண்டுமென்று தலைவனை சற்று அகற்றிப் போகின்றாள் தோழி. அப்போது தலைவன் தன் நெஞ்சை நோக்கி, 'நெஞ்சே, பெறுதற்கரியதை அவாவுற்றனை ; அன்புள்ளந் தழுவி நின் குறையைக் கேட்போர் இங்கே இல்லை. அங்ஙனங் கேட்போரைப் பெற்றால் நின் போராட்டம் மிகவும் மேம்பாடுடையதுதான்' என்று இரங்கிக் கூறுவதாக இச்செய்யுள் வருகின்றது.

இதன்கண் வரும் உவமைகள், மிகவும் ஆழ்ந்த கருத்துக்கள் உடையன.

**குறிப்புரை :** நல் உரை இகந்து - நினக்கு ஆக்கமான உரைகளை நீங்கி. புல் உரை தாஅய் - பயனில் மெல்லிய சொற்களைப் பொருந்தி; பயனில் மெல்லிய என்றது, பயன்படாத என்பதற்கு. 'நல்லுரை இகந்து புல்லுரை தாஅய் அரிது அவாவுற்றனை நெஞ்சே ; நின் பூசல் அகன் உறத் தழீஇக் கேட்குநர்ப் பெறின் நன்றும் பெரிது' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். பெயல் நீர்க்கு - மழை நீரை. பசுங் கலம் - பசுமட் கலம். நன்றும் பெரிது - மிகவும் பெருமையுடையது. ஆல், அம்ம, அசைச் சொற்கள். பூசல் - போராட்டம். உயர் கோட்டு - மரங்களின் உயர்ந்த கிளைகளில். மக உடை - மகவைத் தழுவுதலுடைய. மந்தி - பெண் குரங்கு. அகன் உற - அன்பு பொருந்த. தழீஇ - ஆதரவோடு கவிந்து. கேட்குநர்ப் பெறின் - கேட்டுக் குறை நீக்குவோரைப் பெற்றால். (௩௮)

## ஊண் கொடை

[தமிழ் நாடு உணவுக்கும் உணவு கொடுத்தற்கும் மிகவும் பேர் போனது. தமிழ் நாட்டின் மறக் குடி மக்களும் கொடைக் குணத்தில் தாராள உள்ளம் வாய்ந்தவர்கள். கொடிய வறுமை நிலையிலும், சிறிது வளமுள்ள பொது நிலையிலும், மிக்க செழுமை நிலையிலும் பிறர்க்கு இல்லை என்னார். தமிழ் நாட்டின் மேம்பாடு இவ் வகைகளாலுஞ் சிறந்துள்ளது.]

கல்லறுத் தியற்றிய வல்உவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தனை னாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்
கல்லா இடையன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்லன்; உள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்; உரிதினில்
காவல் மன்னர் கடைமுகத்து உகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
தூவவும் வல்லன்அவன் தூவுங் காலே.

—புறநானூறு, ௩௩௧.

தமிழ் நாட்டு மறக்குடியினரும் பண்டைக் காலத்தில் கொடைக் குணத்தில் சிறந்து விளங்கினர் முதிய குடியினரான இம் மறக்குடியின் சிறப்பியல்புகளை எடுத்துச் சொல்லுதல், 'மூதின் முல்லை' எனப்படும். இச் செய்யுள் அக் குடியினரின் கொடைச் சிறப்பை நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. இன்றிருந்து நாளை மாயும் நிலையாமை யியல்பு வீரக் குடியினரிடம் சிறந்து தோன்றுதலால், கொடைக்குணமாகிய தாராளத்தன்மை அவர்களிடம்

நன்கு மேம்படுவதற்கு இயைபு உண்டு. ஒரு வீரனின் இயல்பு இச் செய்யுளில் பின்வருமாறு வருகின்றது :

'வீரன் மிகவும் வறுமைப்பட்டவனாயினும், மாலைக் காலங்களில் இடையன் தீக்கடைந்து முன்பு இல்லாத தீயை உண்டாக்குவதுபோல, தன்னிடம் இல்லாத உண வுப்பொருளை எப்படியாவது தேடிப் பிறர்க்கு அவன் படைக்கவும் வல்லன்.

'அல்லது, இல்லறத்தில் விளங்கும் வாழ்க்கைத் துணை ஒருத்தி தன்னிடம் உள்ளது சிறிதேயாயினும் மிகப் பல ராக ஒரு நேரத்தில் விருந்தினர் வந்தாலும் எப்படியோ வகைசெய்து இல்லையென்னாமல் ஓர் அளவு முறையில் விருந்தூட்டுதல் போல, ஏற்ற முறையில் அவன் உதவவும் வல்லன்.

'அவன் வளமாக உணவுப்பொருளைச் சொரியும் நேர மானால், அரசர்கள் தம் தலைவாயிலில் சோற்றுக்கொடை செய்வது போலத் தாராளமாக வெண்சோறு பொழிய வும் வல்லன்.'

இவ்வாறு இச் செய்யுள், ஒரு வீரன் தன் பல வேறு நிலைகளிலும் கொடைக்குணம் உடையவனாய்ச் சிறந்து தோன்றும் முறைமையை விளங்க எடுத்துக் காட்டு கின்றது.

தமிழ் நாட்டின் மேம்பாட்டுக்கு அதன் இத்தகைய பழைய பழக்க வழக்கங்கள் தக்க காரணங்களாய் விளங்கு கின்றன. உணவுக்கும், விருந்துக்கும், இல்லறத்துக்கும் அருளுக்கும் மெய்யுணர்வுக்கும் மிகவும் பேர்போன இட மன்றோ இத் தமிழ் நாடு!

**குறிப்புரை :** கல் அறுத்து - கற்பாறைகளை வெட்டி. இயற் றிய - உண்டாக்கிய. வல் உவர்க் கூவல் - உறுதியான இனிய கிணறுகளையும், உவர் - இங்கே இனிமைப்பொருள் உணர்த் திற்று. வில் ஏர் வாழ்க்கை - ஏர்த்தொழிலைப்போல வில் தொழில் செய்து வாழும் வாழ்க்கையையும் உடைய. சீறூர் - சிறிய குடியிருப்புக்களாகிய சிற்றூரின். மத வலி - மிக்க வலி

யிணையுடைய வீரனானவன். பனி மிக - பனி மிகுதலால். புல் என் மாலை - இனிமை குறைந்து தோன்றும் மாலைக் காலத்தில். ஞெலியும் - கடையும்; கடைந்து முன் இல்லாத தீயை உண்டாக்குகின்ற. கல்லா - தன் தொழிலையன்றி வேறு கல்லாத. குறிப்பின் - பசித்து வருகின்றவரின் குறிப்பறிந்து. தவச் சிறிதாயினும் - மிகச சிறிதானாலும். மிகப் பலர் என்னாள் - விருந்தாக வந்தவர் மிகப் பலர் என்று கருதித் தளர்வு கொள்ளாதவளாய். ஊண் முறை - ஒவ்வொருவருக்கும் இவ்வளவு என்னும் உணவு முறையில். இல் பொலி மகடூஉ - இல்லத்தில் விளங்கும் மனைவி. உரிதினில் - உரிய முறையில். காவல் மன்னர் - ஆட்சி புரியும் அரசர். கடை முகத்து - தம் அரண்மனையின் வாயிலிடத்து. உகுக்கும் - சொரியும். போகு பலி வெண்சோறு போல - சிறப்போங்கிய அறசசோறாகிய வெண் சோறு போல. பலி - அறச சோறு. அவன் தூவுங் கால் - அவன் செழிப்பாகச் சொரியுங் காலம் நேர்ந்தால் அக் காலங்களில். தூவுங்கால் தூவவும் வல்லன் என்பது (ருக)

## பெயரும் புகழும்

[மக்கள் பல வகையாகப் பெயரும் புகழும் அடைகின்றனர். பண்டு விளங்கிய உதியஞ்சேரலாதனுக்கும் 'பெருஞ் சோறு' என்று ஒரு பெயா கிடைத்தது. பசி மாற்றுவார் ஆற்றலே தவ ஆற்றலை விட மேலானது ஆதலின், அம் மன்னனுக்கு இப் பட்டம் பெரும் புகழையே அளிக்கின்றது. உதியஞ் சேரலாதலின் புகழை அணி செய்யும் பிற காரணங்களும் இச் செய்யுளில் வருகின்றன.]

மண் திணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்,
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகல
வலியும் தெறலும் அளியும் உடையோய்! [மும்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்நின்

வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந!
வான வரம்பனை நீயோ பெரும!
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத் [தோய்!
பாஅல்புளிப்பினும் பகலிருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுகின்றி நிலியரோ அத்தை; அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும் [றே.
பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்

—புறநானூறு, உ.

உலகத்தில் எத்தனையோ பேருக்கு எத்தனையோ வகையான பட்டங்களும் பெயர்களும் கிடைக்கின்றன. 'பெருஞ் சோறு' என்று நமது தமிழ் நாட்டின் மிகப் பழைய அரசனொருவன் பெயர் வாங்கியிருக்கின்றான் என்றால், அது நமக்கு எவ்வளவு வியப்பினைத் தருகின்றது! அதனால், அம் மன்னன் மிகுதியாக உண்பவன் என்பது பொருளன்று; பிறர்க்குப் பெருஞ்சோறு வழங்கியவன் என்பதே பொருள்.

உதியஞ்சேரலாதன் எனச் சேரமன்னன் ஒருவன் முன்பு இத் தமிழ் நாட்டில் விளங்கியிருந்தான். அவன் பாரதப் போரில் அப் போர் முடியும் வரையில் இரு திறப்

படைகளுக்கும் வரையாது பெருஞ்சோறு வழங்கினன். அந்த அருளை நினைந்தே அதன் நன்றியறிதலாகப் 'பெருஞ் சோற்று உதியஞ்சேரலாதன்' என்று அம் மன்னனை முன் னோர் வழங்கி மகிழ்ந்தனர். நாமும் இப்போது அவ் வாறே வழங்கி மகிழ்கின்றோம்.

'அடியார்களுக்கும் அறவோர் துறவோர்க்கும் உணவு இட்டு அதனால் இப் பட்டம் பெற்றிருந்தால் அம் மன்ன னுக்குப் பெருஞ் சிறப்புண்டு ; மற்று, எத்தனையோ உயிர் களைக் கொன்று போரிடுவோரான போர்ப் படைகளுக் குப் பெருஞ்சோறு வழங்கினனே' எனின், ஒக்கும்; பசித்து நிற்போர் எவராயினும் அவரைப் பசியாற்றி மகிழ் வித்தல் கடமை ; இப் பொதுக்கொள்கைபற்றி அவ்வாறு அவன் செய்திருக்கும்போது, அப் படைகளைச் சார்ந்து விளங்கியிருநத அடியார் அறவோர் துறவோர்க்கும் அவன் தொண்டு சாராமலிராதன்றே! மேலும், 'தவ ஆற்றல், பிறர் பசியை மாற்றுவாரது ஆற்றலினும் சிறந்த தாகாது' என்னும் முன்னோர் கொள்கைப்படியும் இம் மன்னனது ஆற்றல் சிறந்தவொன்றாகவே கருதப்படுவ தாயிற்று. இதனால் இம் மன்னன் பெருஞ் சிறப்பெய்தி னன். வட நாட்டில் நடநத பாரதப்போருக்குத் தென் னாட்டுச் சேரமன்னன் பெருஞ்சோறு வழங்கியது, அவன் காலத்தில் அவனுக்கிருநத தலைமையையும் விளக்கு கின்றது.

உதியஞ்சேரலாதன், அக் காலத்தில் இந நாவலந் தீவின் மன்னர்மன்னன். காலையில் கதிரவன் தோன்று வதும் அவன் நாடே; மாலையில் கதிரவன் மறைவதும் அவன் நாடே. பொறுமையிலும், ஆராய்ச்சியின் விரி விலும், வலியிலும், அடக்கியாள்வதிலும், அருளிலும் முறையே நிலத்தையும், வானையும், காற்றையும், தீயையும், நீரையும் ஒப்பவன். பகைவர் திறத்திலும் இப்படி; குடி மக்கள் திறத்திலும் இப்படி. மேலும், பால் புளித் தாலும், ஞாயிறு இருண்டாலும், மறைநெறி திரிந்தாலும் நெறி பிறழாத அமைச்சர் முதலியோரை உடையவன்.

இத்தகைய பெருமன்னனை வாழ்த்துவதற்கு எவ்வளவு தாராளமாக உள்ளம் செல்லும். முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் அவன் காலத்துப் பெரும்புலவர் வடமலையும் தென்மலையும் போல என்றும புகழோங்கி, நெடுங்காலம் துளக்கமின்றி நிலைத்து வாழ்க என்று வாழ்த்துகின்றார்.

இக் கருத்துக்கள இச் செய்யுளில் வருகின்றன. பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனைபபோல் இங்ஙனம் பெயரெடுப்போர் உலகில் எத்தனைபேர் இருபபர்?

**குறிப்புரை:** திணிந்த - செறிந்த. ஏந்திய - தாங்கிய. தைவரும் - தடவிவரும். வளித் தலைஇய - அக் காற்றின்கண் தலைப்பட்ட; முரணிய - மாறுபட்ட. என்றாங்கு என்பதில் 'ஆங்கு' அசை. இயற்கைபோல - தன்மைபோல. போற்றார் - பகைவரை. சூழ்ச்சியது அகலமும் - ஆராய்வின் விரிவும். தெறலும் - செருக்கு அழித்தலும். அளியும் - அருளும். பிறந்த - தோன்றிய பெயர்த்தும் - மீண்டும். வெண் தலைப் புணரி - வெண்ணிறமான தலை பொருந்திய அலையையுடைய. யாணர வைப்பின் - புது வருவாய் பொருந்திய ஊர்களையுடைய. பொருநவேந்தனே! வான வரம்பனை நீ - நீ வான வரம்பன். ஓ, அசை. அலங்கு உளைப் புரவி - அசையுந் தலையாட்டத்தையுடைய குதிரைகளையுடைய. ஐவர் - தருமன் முதலியோர். சினைஇ - சினந்து. நிலம் தலைக் கொண்ட - நிலத்தைத் தம்மிடத்தே கொண்ட. பொலம் பூந் தும்பை - பொன்னாற் செய்யப்பட்ட பூவாகிய தும்பைப் பூவை யணிந்த. தும்பைப் பூ போர் செய்தலின் அடையாளமாதலின், பொருத என்னும் பொருளில் வந்தது. ஈரைம் பதின்மர் - நூற்றுவர்; துரியோதனன் முதலியோர். ஒழிய - ஒழியும் வரையிலும். பெருஞ் சோற்று மிகு பதம் - பெருஞ் சோறாகிய மிக்க உணவை. பகல் - கதிரவன். சுற்றம் - மந்திரச சுற்றம். முழுது - இடையறாமல். சேண் - நெடுங்காலம். நடுக்கின்றி - அசைவின்றி. நிலியர் - நிற்பாயாக. அத்தை, அசை. அடுக்கத்து - மலைசசாரிவில். நவவி - மான் கன்றோடு கூடிய. மாப் பிணை - பெண் மான். அந்தி - அந்தி மாலையில். முத்தீ - மூன்று வகை வேள்வித் தீயின் ஒளியில். துஞ்சும்-உறஙகும். பொன் கோட்டு - பொன்னிறமான உசசியை

யுடைய. 'இமயமும் பொதியமும் போன்று நிலியர்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (சூ0)

## தமிழன்பு

[சங்க காலத்தில் தமிழன்பு நாட்டில் ஓங்கியிருந்தது; வேந்தர்கள் தமிழையும் தமிழாசிரியர்களேயும் நன்கு மதித்து நடந்தனர். அவர்கள் கொண்டிருந்த அன்புக்கு ஓர் அளவே இல்லை. தமிழ் என்றால், பிற அனைத்தையும் மறந்து அதன்கண் ஈடு பட்டனர். அதனால், அக் காலத்தில் தமிழ மொழி நன்றாக வளர்ச்சியடைந்து சிறப்பாக விளங்கியது.]

மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்[டிக்]
குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை, எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய என்னைத், தெறுவர
இருபாற் படுக்கும்நின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉஞ் சாலும்நல் தமிழ்முழுது அறிதல்;
அதனொடும் அமையாது அணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே; வியலிடம் கமழ
இவண்இசை யுடையோர்க்கு அல்லது அவண[து]
உயர்நிலை யுலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசில்! நீ ஈங்கிது செயலே.

—புறநானூறு, ருo.

சங்க காலத்தில் தமிழ்க்கும் தமிழாசிரியர்களுக்கும் வேந்தர்களிடத்தில் தக்க செல்வாக்கும் மதிப்பும் இருந்தன. தமிழ்நாட்டு வேந்தர்கள் தமிழை அவ்வளவு பாராட்டி வந்தமையினுலேதான் அவர்கள் காலத்தில் தமிழ் மொழி தக்கபடி வளர்ச்சியடைந்தது; அதனுல் தமிழ் நாட்டுக்கும் பெருமை அமைந்தது; தமிழ் வேந்தர்களுக்கும் நிலையான புகழ் உண்டாயிற்று. தமிழ் மொழியினிடம் அக்காலத்து வேந்தர்கள் வைத்திருந்த நன் மதிப்பிற்கு இச் செய்யுள் ஒரு தக்க எடுத்துக்காட்டாக வருகின்றது.

சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்று முன்பு சேரமன்னன் ஒருவன் இருந்தான். பகைவர் அவனுக்குச் சினமூட்டினர். அவன் பகைவரின் மேல் படையெடுக்கத் தீர்மானித்தான். முரசு முதலியவற்றை நல்ல நாளில் வழிபாடு செய்து பகைப் புலத்துக்கு எடுத்தனுப்புவது அக்காலத்தில் வழக்கம். முரசே தெய்வம் உறையும் உருவமாக எண்ணி வழிபடப்படும். ஒரு கட்டிலில் மெத்தென்ற இருக்கையில் தனி அறையில் அது வைக்கப்பட்டிருக்கும். அந்தக் கட்டிலை 'முரசு கட்டில்' என்று கூறுவர் புறப்படும் நாளன்று படை வீரர்கள் அந்தப் போர்முரசைக் கட்டிலிலிருந்து எடுத்து நீராட்டும் இடத்திற்குக் கொண்டுபோனாகள்.

மோசிகீரனுர் என்று தமிழாசிரியர் ஒருவர் அக்காலத்தில் புகழோடு விளங்கியிருந்தார். அவருக்குக் குறுநில மன்னர்களும் மன்னர்களும் பலர் தெரியும். தகடூரெறிந்த இப் பெருஞ்சேரலிரும்பொறையையும் தெரியும். இச் சேரமன்னனைப் பார்க்கும்பொருட்டு அன்று அவர் நெடுந் தொலைவு வழிகடந்து அங்கே வந்தார். அவருக்கு இளைப்பு மிகுதியாயிருந்தது. சிறிது படுத்து உறங்கிக் களைதீர்ந்த பின் அரசனைப் பார்க்கலாம எனக் கருதிப் படுக்க இடம் நாடினர். கட்டில் அவருக்கு எதிரே தெரிந்தது. அதனை முரசு கட்டில் என்று அறியாது அதன்

மேல் ஏறிப் படுத்து நன்றாய் உறங்கிவிட்டார். இளைப்பு, பொறுமையோடு இடம் பார்க்க அவரை விடவில்லை.

அரசன் ஏதோ வேலையாய் அந்தப் பக்கம் வந்தான். முரசு கட்டிலில் அவன் பார்வை விழுந்தது. அவனுக்குச் சினம் தாங்க முடியவில்லை பகைவர்களின்மேல் படையெடுத்துச் செல்லும் நல்ல நேரத்தில, வழிபாட்டுக்குரிய முரசு கட்டிலில் யாரோ ஒரு மனிதன், முதல் தடை போலப் படுத்து உறங்கிக்கொண்டிருப்ப தென்றால், அது, எவ்வளவு தீக்குறியாயிருக்கின்றது! அரசனுக்கு வந்த சினத்துக்கும் அப்போது ஓர் அளவு கூற முடியுமோ? உடனே அம் மனிதனை இரு துண்டாக்குவதற்கு அவன் உள்ளம் விரைந்தது. வாளை உருவினான். கட்டிலின் அருகிற் பாய்ந்தான்.

என்ன வியபபு! அந் நிலையில், மோசிகீரனார் முகம அரசன் பார்வையிற் பட்டது. அவ்வளவுதான்; அரசனுக்கு உடல் நடுங்கிற்று. கையிலிருந்த வாள் கீழே விழுநதது. 'மோசிகீரனாரா படுத்திருப்பவர்! என்ன செய்ய நினைத்தேன்! நல்ல காலம்; பிழைத்தேன்; பிழைத்தேன்; தெய்வம் உறையுங் கட்டிலில் தெய்வமே படுத்திருக்கின்றது' என்று அரசன் உள்ளம் எண்ணியது. சினம் பறந்தது; வாள எடுத்த கை அருகிலிருந்த சாமரையை எடுத்து மென்காற்றுண்டாகப் புலவர்க்கு வீசியது. செய்த பிழைக்கு உய்வு எப்படி என்று அவன் உள்ளம் எணணிக்கொண்டிருந்தது.

புலவர் உறக்கத்திற்குச் சொல்லவேண்டுமா? தமக்கு முன் நிகழ்ந்த கொடிய நிகழ்ச்சி யொன்றையும் அவர் அறியாமல் அமைதியாக உறங்கிச் சற்றுநேரங் கழித்துத் தாமாகவே விழித்தெழுந்தார். அரசன் சாமரை வீசிக் கொண்டிருந்ததைக் கண்டு திடுக்கிட்டார். பின்பு, நிகழ்ந்தவை முழுதும் நொடிப்பொழுதில் உணர்ந்து கொண்டார். அநத நேரத்தில் அவர் உள்ளத்திற் பொங்கி எழுந்த அன்பை எந்தச் சொற்களாற் சொல்லி விளக்க முடியும்?

'அரசே, இத் தெய்வக் கட்டிலில் அறியாது ஏறிய என்னை இரு துண்டாக்குவதை விட்டதே போதும், நின் தமிழன்பை அறிவதற்கு. இருந்தும், அதனோடு அமை யாது அணுக வந்து நின் பெருந்தோள் எடுத்துச் சாமரை வீசிய பரிசினை என்னென்பேன்! நின் தமிழன்பின் நிலை இத்தகையதேயோ!' என்று புலவர் மோசிகீரனார் உள் ளத்திலிருந்து சில உருகிய சொற்கள் பொங்கி உதிர்ந்தன.

தமிழ் நாட்டு வேந்தர்கள் தமிழினிடம் வைத்திருந்த அன்புக்கு அக் காலத்தில் ஓர் அளவே இல்லை.

குறிப்புரை: இச் செய்யுளின் முதல் ஐந்து வரிகள் முரசத் தின் சிறப்புக் கூறுகின்றன. விசித்த - இழுத்துக் கட்டிய. வார்பு உறு வள்பு - வாருதல் பொருந்திய வார்; வள்பின் - வாரை யுடைய. மை படு - கரு நிறம் பொருந்திய. மருங்குல் - பக்க மானது. பொலிய - விளங்கும்படி. கரு மரத்தால் செய்யப் பட்டமையால் 'மை படு மருங்குல்' எனப்பட்டது. மஞ்ஞை - மயிலின். ஒலி - தழைத்த. ஒண் பொறி - பீலியில் காணப் படும் ஒள்ளிய நீலப் புள்ளிகள். மணித்தார் - நீலமணி போலும் நிறத்தையுடைய மாலை; அதாவது, பீலியால் தொடுக்கப்பட்ட மாலை என்பது. பொலம் குழை உழிஞையொடு - பொன்னிற மான தளிரோடு கூடிய உழிஞைப் பூவின் மாலையோடு. பொலி யச் சூட்டி - அழகு பெறச் சூட்டப்பட்டு. உரு கெழு - அச்சம் பொருந்திய. மண்ணி வாரா அளவை - கழுவி வரச் சென்ற நேரத்தில். சேக்கை - மெத்தென்ற கட்டிலில். தெறுவர - கோபந் தோன்ற. வாய் - குறி தவறாது விழுதல். சாலும் - போதும். தமிழ் - தமிழன்பு. அறிதல் - அறிதலுக்கு. மதன் - வலி. வீசியோய் - சாமரை வீசினவனே! வியல் இடம் - அகன்ற உலகு முழுதும் கமழ - பரக்கும்படி. இவண் - இவ் வுலகில். இசை - புகழ். அவணது - மேலுலகத்ததாகிய. உறை யுள் இன்மை - தங்குதல் இல்லாமையை. கேட்ட - நீ கேள்விப் பட்ட. மாறுகொல் - வகையோ. வலம்படு - வெற்றி பொருந் திய. குருசில் - தலைவா! 'இவ்வுலகத்திற் புலவராற் புகழுடை யோர்க்கல்லது மறுமை நலம் பொருந்துதல் இல்லை என்று நீ கேள்விப்பட்ட வகையோ, இங்கே நீ, இவ் வருஞ்செயலைச் செய் தற்குக் காரணம்' என்பது இறுதி நான்கு வரிகளின் கருத்து. ()

## பாரி வேள்

[பாரிவேளுடன் நன்கு பழகிய கபிலர் வாய் மொழிகளாலேயே அவன் உயர்ந்த இயல்புகள் விளங்குகின்றன. உலகு புரத்தலே, பலர்க்கும் உதவியா யிருத்தலே அவன் இயல்பு, மகிழ்ச்சி, வாழ்க்கை எல்லாம். நீரினும் குளிர்ந்த ஈர நெஞ்சம் அவனுடையது. அதனால், அவன் மலையில், அருவி சுரந்த படியே இருக்கும்.]

சேய்இழை பெறுகுவை வாள்நுதல் விறலி!
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினும், அருவி
கொள்உழு வியன்புலத்து உழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்
நீரினும் இனிய சாயல்
பாரி வேள்பாற் பாடினை செலினே.

—புறநானூறு, ௧0௫.

ஒருவருடைய குணத்தை எடுத்துச் சொல்லுவதற்கு அவரோடு நன்றாகப் பழகியிருக்க வேண்டும். வேள் பாரியோடு பலகாலம் உடனிருந்து பழகியவர்களுள் கபிலர் தலை சிறந்தவர்; அவர் அவனுக்கு உயிர் நண்பருமாவர். பாரி இறந்தபின், கபிலர், செய்ந்நன்றி மறவாது நடந்து தன் கடமையைச் செய்து பின்பு பாரியின் பிரிவாற்றாது தாமும் வடக்கிருந்து உயிர் நீத்தவர். ஆதலால், அவ்வளவு உயிர்க்குயிராய் உடன் ஒன்றிப் பழகி வாழ்ந்த கபிலர் பெருமானே பாரியின் பண்பு இப்படிப்பட்டது என்று எடுத்துச் சொன்னால், அதுதானே உண்மையும் உயர்வும் ஆற்றலும் வாய்ந்ததாயிருக்கும்.

கபிலர் பாரியைப்பற்றிச் சொல்வது, 'பாரி, நீரினும் இனிய மென்மை யுடையவன்; அத்தகைய அருள் நெஞ்சினனாய் அவன் திகழ்தலால் அவன் இருக்கும் பறம்பு மலையில் மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும் பயிர்

களைக் காக்கும்பொருட்டு எப்போதும் உச்சியிலிருந்து அருவி சுரந்து பெருகியபடியே யிருக்கும்' என்பது. இது, எவ்வளவு உருக்கமாக இருக்கின்றது!

'வறண்ட காலங்களிலும் பயிரைக் காக்கும் நோக்கத்தோடு பலவாக ஊறி ஒழுகும் தூய இனிய அருவி நீரினும் இனியவன் பாரி' என்றால், பாரியின் உலகு புரக்கும் ஈர நெஞ்சம் எவ்வளவு நன்றாக விளங்குகின்றது! புலனழுக்கு அற்ற அந்தணாளரும், தமிழ் நாடு முழுதுந் தலை சிறந்த செல்வாக்கு வாய்ந்தவருமான கபிலர் பெருமானால் இங்ஙனம் உள்ளமுருகிக் கனிந்து பாராட்டப் பெறுவதற்குப் பாரி எவ்வளவு சிறந்தவனாக இருந்திருக்கவேண்டும்.

கருத்துக்கள் இச் செய்யுளில் பின் வருமாறு வருகின்றன; கபிலர், ஒரு விறலியை நோக்கிக் கூறுகின்றார்:

"ஒளி பொருந்திய நெற்றியையுடைய விறலி! பறம்பு மலையின் சுனையில் தழைத்திருக்குங் குவளையின் மலர்களில் மழைத்துளிகள் கலந்து தோன்றும்படி மழையானது பெய்தாலும் பெய்யாவிட்டாலும், அம் மலையின் சரிவில் கொள்ளுப் பயிர் விளைப்பதற்காக உழுது கிடக்கும் பரந்த நிலத்தில் பல நீர்க்கால்களாக ஓடிப் பயன்படும்படி மலையின் உச்சிகள்தோறும் இழியும் அருவி நீரினும் இனிய மென்மைப் பண்பு உடையவனை வள்ளல் பாரிவேளிடம் நீ பாடிச் சென்றால், நீ அணிந்துகொள்வதற்கு நல்ல அணிகலன்களைப் பெறுவாய்"

பாரி உயிரோடு இருந்தபோது கபிலர் அவன் இனிமைப் பண்புகளில் தோய்ந்து தோய்ந்து இன்புற்ற காலத்தில் இச் செய்யுட்சொல் அவர் திருவுள்ளத்திினின்றும் எழுந்தது. செய்யுளின் இனிமைக்கு இன்னும் வேறென்ன வேண்டும். மலைகளிற் பெரும்பாலும் மழையும் பெய்யும். அதனால், சுனையிடங்களில் உள்ள மலர்களின் இதழ்களில் மழைநீர் முத்து முத்தாகத் தங்கிச் சிறந்த காட்சியளிக்கும். இந்த இயற்கை யழகினைப் பலகாலும் நன்கு கண்டு இன்புற்றவராதலின் கபிலர் இச் செய்யுளில் அதனை அழ

குற இசைத்திருக்கின்றார். புலவர்களின் இலக்கிய உள்ளம் எந் நிலையிலும் வெளிப்பட்டே தீருமன்றோ!

**குறிப்புரை:** மேசு இழை - சிவந்த அணிகலன். உயர்ந்த செம்பொன் அணிகலன் என்றபடி. தடவு வாய் - அகன்ற இடத்தையுடைய சுனைகளில். கலித்த - தழைத்த. மா - கரிய. குவளை - குவளைச் செடியின். படு - படிகின்ற. 'குவளை மாயிதழ்ப் புதுமலர்' என்று கொள்ள வேண்டும். தண் சிதர் - குளிர்ந்த துளி; மழைத் துளி கலாவ - கலக்க; கலந்து தோன்ற. 'அருவி நீர்க்காலாகும்படி இழிதரும் நீரினும' என்று தொடர்ந்துகொள்ள வேண்டும். கொள் - கொள்ளுப் பயிருக்காக. வியன் - பரந்த. புலத்துழை - நிலத்திடையே. காலாக - நீர்க்காலாகும்படி; நீர்க்காலாக ஓடிப் பயன்படும்படி. மால்பு உடை - அங்கங்கும் கண்ணேணிகளையுடைய. வரை என்றது, பாரியின் பறம்பு மலையை. வரை - மலையில். கோடுதோறும் - கொடுமுடிகள்தோறும்; உச்சிதோறும். நீரினும் - நீரைவிட. சாயல் - மென்மைக குணமுடைய. பாடினை - பாடினையாய்; அதாவது, பாடிக்கொண்டு. செலின் - சென்றால். 'பாடினை செலின், விறலி, இழை பெறுகுவை' என்று சேர்த்து உரைத்துக் கொள்ள வேண்டும். (௯௨)

## கற்புடைப் பெண்டிர்

[பெண்களுக்குக் கற்பொழுக்கத்தினால் ஆற்றல் மிகுதியாகின்றது; அப்போது அவர்கள் முனிவர்களாய் விளங்குகின்றார்கள். அவர்கள் ஆற்றலுக்கு எல்லாரும அஞ்சி யொழுகுகின்றனர். அவர்கள் பரிதலுக்கு உலகம காத்துக் கிடக்கின்றது.]

மலையிடை யிட்ட நாட்டரும் அல்லர்;
மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்;
கண்ணிற் காணா நண்ணுவழி இருந்தும்,
கடவுள் நண்ணிய பாலோர் போல
ஒரீஇ ஒழுகும் என்னைக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே.

—குறுந்தொகை, ௨0௩.

பெண்களில் கற்புடையவர்கள் முனிவர்களை ஒப்பர். பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும் திண்மை உண்டாகப் பெறின்? அத்தகைய மாதர்களின் ஆற்றல் உலகை நடுங்கச் செய்யும். நல்லொழுக்கமற்ற கணவரும் அவர் திறத்துக்கு அஞ்சுவர். பிறரை அஞ்ச வைக்குங் கூரிய படை நல்லொழுக்கமல்லது வேறில்லை.

கணவன் மனைவியர் இருவரில் கணவன் தக்க நடக்கை யில்லாதவனாயிருந்தால், அவன் அம் மனைவியோடு உட னிருந்து வாழ்ந்து வந்தாலும், ஒரு முனிவரது தவ நிலை யத்தில் இருந்து அச்சத்தோடு பழகி வரும் மாணவனைப் போலவே, அம் மாதினிடம் உள்ளம் அகன்று அஞ்சி ஒழுகி வருவான்.

பெருந்தன்மையிற் சிறிது குறைந்த தலைவன், தன் தலைவியினிடம் நேரே செல்ல அஞ்சித் தோழியை அனுப்பி னான். தலைவி பின் வருமாறு சொன்னாள்: "தலைவர், மலைகள் இடையிட்ட தொலைவான நாட்டாருமல்லர்; ஊரிலுள்ள மரங்களின் தலைகூடத் தெரியாத இடைப் பட்ட ஊராருமல்லர். நேரே கண்ணிற் காணும்படி விரைந்து அணுகுதற்குரிய அருகாமையிலே அவர் உட னிருந்தும், முனிவரை அணுகி ஒழுகும் பகுதியோரைப் போல நெஞ்சகன்று ஒழுகும் என் தலைவர்க்கு, முன்னொரு கால் யான் அன்புறுதல் உடையேனாய் இருந்தேன்; இப் போது அந் நிலை கழிந்ததே."

அன்பை ஒருவர் வற்புறுத்தி வருவிக்க முடியா தன்றோ! பெருந்தன்மையுள்ள விடத்தில் அது தானாகவே ஊற்றெடுத்துப் பொங்கிப் பொங்கிப் பெருகும் இயல் புடையது; மக்கள் அதற்கேற்றபடி நன்னடக்கையில் நடந்துகொள்ள வேண்டும். இயற்கை அவ்வாறு இருந் தால் அதற்கு யார்தாம் என்ன செய்யலாம்?

**குறிப்புரை:** இடையிட்ட - இடையே இருந்து மறைத்துக் கொண்ட. கண்ணுக்குத் தெரியாத ஊராருமல்லர்; அதற்குந் தொலைவான நாட்டாருமல்லர் என்பது முதலிரண்டடிகளின்

கருத்து. நண்ணு வழி - விரைந்து அணுகுதற்குரிய நெருங்கிய இடத்தில். வழி - இடத்தில். கடவுள் - முனிவரை. நண்ணிய - அணுகிய. பாலோர் போல - பகுதியோரைப் போல. ஓரீஇ - நீங்கி; நெஞ்சம் அகன்று. என் ஐக்கு - என் தலைவர்க்கு. பரிய லென் - பரிதலையுடையேன்; பண்டொருகால் பரிதலையுடை யேன் என்பது. மன் - அந் நிலை கழிந்தது; இப்போது பரித லில்லை என்றபடி. மன், இங்கே 'கழிந்தது' என்னும் கழிவுப் பொருளில் வந்தது. (௬௩)

## மெல்லிய கூர் உணர்வு

[உள்ளத்தின் உணர்விற்கேற்ப உடம்பில் அதிர்ச்சி முதலியன உண்டாகின்றன. மென்றன்மையான உணர்வினால், இயக் கம் மிருதியாகும். மாதருணர்வு அங்ஙனம் மிக்க இயக்க முடையது. அவரைப்போன்றவ ருணர்வு செவ்விய நிலையி லிருந்தால், நாட்டில் நல்ல இயக்கம் பெருகும்; நலங்கள் உண்டாகும்; கூரிய உணர்வுநிலை யுடையோரை நாடு காத்துக் கொள்ளுதல் வேண்டும்.]

அரிதே தோழிநாண் நிறுப்பாம்என் றுணர்தல்;
பெரிதே காமம்என் உயிர்தவச் சிறிதே;
பலவே யாமம் பையுளு முடைய;
சிலவே நம்மோடு உசாவும் அன்றில்;
அழலவிர் வயங்கிழை ஒலிப்ப உலமந்து
எழில்எஞ்சும் மயிலின் நடுங்கிச் சேக்கையின்
அழலா கின்றவர் நக்கதன் பயனே.

—கலித்தொகை, ௧௩௭ : ௧ - ௭.

அச்சத்தினால் உடம்பு சில வேளைகளில் உதறலெடுத் தலைக் காண்கின்றோம்; வருத்தத்தின் மிகுதியினால் உள் ளம் மயங்கி உடம்பு அதிர்ந்து, அந்த அதிர்ச்சியினால், உடம்பில் அணிந்துள்ள சிலம்பு முதலிய அணிகலன்களும் ஒலிக்கத் தொடங்கிவிடுகின்றன என்று இச் செய்யுட் பகுதியில் வருகின்றது. உணர்வுக்கும் உடம்புக்கும் நெருங் கிய தொடர்பிருக்கின்றது.

பிரிவுகாலத்தில், தலைவி, தனது நிலையைச் சொல்லு கின்றபோது பின் வருமாறு சொல்லுகின்றாள் :

"தோழி! நாணத்தை நிலைநிறுத்துவோம் என்று உணர்ந்து அதன்படியே நிற்றல் அரிதாயிருக்கின்றது. நம் வேட்கையோ பெரிதாயிருக்கின்றது. அதனைத் தாங் கும் எனது உயிருணர்வோ மிகச் சிறிதாயிருக்கின்றது. என்னை வருத்துதலுடைய யாமங்கள் பல. ஆனால், நம் மைப் போலத் துணைபிரிந்து நம்மோடு உசாத்துணையா யிருக்கும அன்றில்களோ சிலவே. இந் நிலையில், என் இழை ஒலிக்கும்படி உடம்பு மயங்கிச சுழன்று, பீலி உதிர்ந்து அழகு குறைநத மயிலைப் போலப் பொலிவு குன்றி நடுங்கி, படுக்கையிலே கிடந்து வெதும்புகின்றது; அவர் நம்மோடு கூடி மகிழ்ந்ததன் பயன் இதுவே."

தலைவியின் உணர்வு நிலை அவ்வாறுள்ளது, அதற் கேற்றபடி அவள் உடம்பு நிலையும் அவ்வாறு அதிர்ந்து வாடுகின்றது. மாதரின் இவ்வுணர்வு நிலைகள் எவ்வளவு மெல்லியன! பருமையில் இவ்வளவு இயக்க ஆற்றலுடைய அவருணர்வு நிலைகளை நாட்டில் செவ்வையுற நிறுத்தினால், செவ்விய நிலையிலும், அவ் வியக்கம் இஙஙனம நன்கு இயங்கி நாட்டுக்கு நலம் பல விளைக்குமன்றோ! கூரிய உணர்வுநிலைகளை ஆராய்ந்து ஆவன செய்தலினும், நாட்டுப் பணி வேறு யாதிருக்கின்றது?

**குறிப்புரை :** உணர்தல் - உணர்ந்து அதன்படி நிற்றல். தவ - மிக. பையுளும் - வருத்துதலும். உசாவும் - அளவளாவும். அன்றில் - அன்றிற பறவைகள். அழல் அவிர் வயஙகு இழை - அழலைப்போல் நிறம் மின்னுகின்ற விளஙகிய அணிகலன்கள். உலமந்து - சுழன்று அதிர்ந்து. அழலாகின்று - வெப்பமுடைய தாகின்றது. நக்கதன் - மகிழ்ந்ததன்; கூடி மகிழ்ந்ததன். (கூச)

## உயிர் நேய மாட்சி

[முற்காலத்தில் மக்கள் ஒருவருக்காக ஒருவர் உயிர் துறக்கும் அன்பும், உயிர் பிரிந்தாறபோல வருந்தும் ஒற்றுமையும் வாய்ந் திருந்தனர். இத்தகைய உள்ளந தோய்ந்த இயைபு அவர்

களுக்கு உணர்வுப் பெருக்கை மிகுத்துப் பிறவியின் பெரும் பயனை வழங்கி வந்தது.]

காய்ந்துசெலற் கனலி கல்பகத் தெறுதலின்
நீந்து குருகுருகும் என்றூழ் நீளிடை
உளிமுக வெம்பரல் அடிவருத் துறலின்
விளிமுறை யறியா வேய்கரி கானம்
வயக்களிற் றன்ன காளையொடு என்மகள்
கழிந்ததற் கழிந்தன்றோ இலனே; ஒழிந்துயா
ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தசைஇ [ன்
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு
கண்படை பெறேஎன் கனவ ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண் நாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெறல் உலகத் தவனொடு செலீஇயர்
பெரும்பிறி தாகி யாங்குப் பிறிந்திவண்
காதல் வேண்டிஎன் துறந்து
போதல் செல்லாஎன் உயிரொடு புலந்தே.

—அகநானூறு, ருரு.

பண்டைக் காலத்து மக்களின் உயிர்நேய மாட்சி எண்ணுந்தொறும் மிக்க வியப்பினைப் பயக்கின்றது. ஆடவரும் மகளிரும் அந்தக் காலத்தில் ஒருவருக்காக ஒருவர் உயிர் விடும நேயம் வாய்ந்திருந்தனர்.

உயிர் நேயமே முதன்மையென்று கருதிப் புதல்வி தன் காதற்கணவனுடன் கான்வழியாக உடன்போயினாள் அவள் தாய் பெரிதும் வருந்துகின்றனள். அயலார் சிலர் வந்து அவளுக்கு ஆறுதல் கூற அவள், பின் வருமாறு கூறுகின்றாள்:

'என் மகள் என்னைப் பிரிந்து தன் காதலனோடு சென்றதற்காக யான் வருந்தவில்லை: அவள் தன் கடமையைச் செய்தாள். இந்த உலக வாழ்க்கையில் விருப்பம் வைத்துக்கொண்டு இன்னும் பிரிந்து செல்லாதிருக்கின்ற எனது உயிரையே யான் வெறுத்துக்கொண்டு வாய் புலம்புகின்றேன்' என்பது.

இதனை அவள் சொல்லும்போது ஓர் அழகான எடுத்துக்காட்டும் காட்டுகின்றாள்.

"வெண்ணி என்பது ஓர் ஊர், அந்த ஊர்க்கு வெளிப்புறத்தில் கரிகால் வளவனுக்கும் பெருஞ்சேரலாதனுக்கும் போர் நிகழ்ந்தது. சேரன் தோற்றான். மானந் தாளாது அவன் தன் வாளோடு உண்ணா நோன்பிருந்து உயிர் துறந்தான். இந்தச் செயல், கேட்போர்க்கு இனிமையும் இன்னாமையும் உடையது. மானந் தாளாத பெருங்குணம் இனிமையான செய்தி; அவன் பிரிவு இன்னாமையான செய்தி. சேரலாதனுக்கு அன்பராயினோர் அவன் பிரிவாற்றாது தாமும் உயிர் துறந்தனர். என் மகளின் பிரிவும், அவள் தன் கடமையைச் செய்தனள் என்னும் இனிமையும் இல்லத்தைப் பிரிந்தனள் என்னும் இன்னாமையும் உடையது. ஆனால், சேரலாதனின் அன்பரைப்போல் நான் உயிர் துறவாது இன்னும் உளேன்" என்பது.

இத்தனை உயிர்நேய மாட்சி அந்தக் காலத்தில் இருபாலாரிடத்திலும் திகழ்ந்திருந்தது. சேரலாதன் உயிர் துறந்தனனாதலால் அவனுக்கு அன்பராயினோரும் தம் உயிர் துறந்தனர். இங்கே புதல்வி இல்லத்தை மட்டுமே பிரிந்து சென்றாள்; உயிருடன் இருக்கின்றாள். ஆதலால், அவள் தாயின் உயிரும் நிலைத்துள்ளது. இந்த இயைபும், இயற்கை நுட்பமும் அறிந்துகொள்ளுதற்குரியது. ஆகவே, உயிர் பிரிந்ததைப்போன்ற வருத்தத்தைத் தாய் அடைகின்றனள் என்பது கருத்து. அவ்வளவு உயிர்நேயம் புதல்வியினிடம் அவளுக்கு இருந்தது.

**குறிப்புரை :** முதல் நான்கு வரிகள், புதல்வி சென்ற கானத்தின் இயல்பு கூறுகின்றன. செலவல் - செல்லுதலையுடைய.

கனலி - ஞாயிறு. கல் பக - மலை பிளக்கும்படி. தெறுதலின் - காய்தலால். நீந்து குருகு - வழியை இடர்ப்பட்டுக் கடக்கும் பறவைகள். என்றூழ் - வெப்பத்தையுடைய. இடை - வழியில். உளி முக - உளி போன்ற நுனியையுடைய. வருத்துறலின் - வருத்துதலால். விளி முறை - அதனால் வருத்தந் தாளாமல் இறந்து போகும் நேரம். வேய் - மூங்கில். கானம் - கானத்தில். வய - வலிய. அழிந்தன்றோ இலன் - வருந்தினேன் அல்லேன். அசைஇ - வருந்தி. கனவ - வாய் வெருவிக் கூற. கண் படை - கண் மூடுதல்; தூங்குதல். வெண்ணிப் பறந்தலை - வெண்ணிப் போர்க்களத்தில். களமருங்கின் - போர்க்களத்தின் பக்கத்தில். வாள் - வாளோடு. வடக்கிருந்தென - வாடி உயிர் துறந்தனனாக. இன்னா இன் உரை - இன்னாததான இந்த இனிய நிகழ்ச்சி பற்றிய உரையை. செலீஇயர் - செல்லும் பொருட்டு. பெரும் பிறிது ஆகியாங்கு - இறந்தலை யடைந்தாற்போல. இவண் காதல் - இவ்வுலகத்து வாழ்க்கை அவாவை. 'என் துறந்து பிறிந்து போதல் செல்லா' என்று தொடர்ந்து கொள்க; 'நெஞ்சமொடு கனவ என் உயிரொடு புலந்து கண்படை பெறேன்' என்பது. கண் படை பெறேன் என்றது - துயிலாது வருந்துகின்றேன் என்னும் பொருட்டு. (௬௫)

அன்பு வாழ்வு

[அன்புருவம் பெற்றபின், மக்கள் அருளுருவம் பெறுதற்கு உரியர். பொருட் பிணிப்பால அவர் உள்ளந் தளரார். இவ் வாழ்க்கை யுயர்வை அடைவிக்கும் முதலியலபே இயற்கைக் காதல். இச் செவ்வி இச் செய்யுளில் நன்கெடுத்துக் காட்டப் படுகின்றது.]

விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு
வளங்கெழு மாமலைப் பயங்கெடத் தெறுதலின்
அருவி யான்ற பெருவரை மருங்கின்
சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயங் காணது
பாசி தின்ற பைங்கண் யானை
ஓய்பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க
வேய்கண் உடைந்த வெயிலவிர் நனந்தலை[னும்
அரும்பொருள் வேட்கையின் அகன்றன ராயி

பெரும்பே ரன்பினர் தோழி; இருங்கேழ்
இரலை சேக்கும் பரலுயர் பதுக்கைக்
கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கால் ஆசினி யொடுங்காட்டு உம்பர்
விசிபிணி முழவின் குட்டுவன் காப்பப்
பசியென அறியாப் பணைபயில் இருக்கைத்
தடமருப் பெருமை தாமரை முனையின்
முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியும்
குடநாடு பெறினும் தவிரலர்
மடமான் நோக்கினின் மாண்நலம் மறந்தே.

—அகநானூறு, ௯௧.

பொருள் வாழ்வைவிட அன்பு வாழ்வு உயர்ந்தது. ஆதலால், அன்பு வாழ்வில் நிலைத்த ஊன்றுதலைப் பெற்றோர், பொருளால் நிலைகுலைதல் இல்லை. பொருளை இழப்பதனாலும் நிலைகுலையமாட்டார்; மிகுதியாகப் பெறுவதனாலும் நிலைகுலையமாட்டார். அன்பின் சுவையை நன்குணர்ந்து அன்புருவமாயினார் செயல் இது.

தலைவன் பொருள் முயற்சியின்பொருட்டுப் பிரிந்து சென்றான்; தலைவி பிரிவாற்றாது வருந்துகின்றாள்; தோழி அவளைச் சில சொற்கள் சொல்லி ஆறுதல் செய்கின்றாள்:

"அம்மே! நம் காதலர் பொருள் முயற்சி காரணமாகப் பிரிந்தனராயினும் அவர் பெரும்பே ரன்பினர்! அதனை நீ அறிதல் வேண்டும். சேரமன்னனது குடநாட்டையே அவர் உரிமையாகப் பெற்றாலும் அதனை யொரு முதன்மையாகக் கருதி நின் அன்பினை மறந்து அங்கே தங்கமாட்டார்; வருந்தாதே" என்பது.

அந்தக் காலத்தில் வாழ்க்கையில், அன்பொழுக்கத்தில், எவ்வளவுதான் நம்பிக்கை இருந்திருக்கின்றது!

குறிப்புரை: முதல் எழு வரிகள், தலைவன் பிரிந்து சென்ற பாலை நிலத்தின் இயல்புணர்த்தின. பகல் - நாட் காலத்தை.

பயம் - பயன். தெறுதலின் - காய்தலின். ஆன்ற - அகன்ற; நீங்கிய; அதாவது இல்லையாய் நீங்கிய. சூர் - தெய்வக் காவலை யுடைய. நீர்ப் பயம் - நீராகிய பயனை. பாசி - பாசியை. ஓய் பசிப் பிடியொடு - அழிந்த பசியினையுடைய பெண் யானையுடன் வேய் - மூங்கில் அவிர் - சுடரும் நனந்தலை - அகன்ற இடப் பரப் பாகிய பாலைநிலத்தில். அரு - கிடைத்தற்கரிய. பொருள் வேட்கையில் அகன்றது, விருந்தாற்றும் இல்லறக் கடமைபற்றி. தோழி தன் தலைவியைத் தோழி என்று விளித்தாள். இரு கேழ் இரலை சேக்கும் - கரிய நிறத்தையுடைய மான் தங்கும். பதுக்கை - கற்குவியலான இடத்தில். களவு உழவு - களவாகிய உழவுக்கு; களவு முயற்சிக்கு என்றபடி. கால் - அடிமரத்தை யுடைய. ஆசினி - ஈரப் பலாவையுடைய. ஒடுங்காட்டு உம்பர் - ஒடுங்காடு என்னும் இடத்துக்கு அப்பாலுள்ள; ஒடு மரங்கள் உள்ள காடு 'ஒடுங்காடு' எனப்பட்டது. பணை - மருத நிலங்கள். தாமரை முனையின் - தான் மேய்ந்த தாமரையை வெறுத்தால். தவிரலர் - தங்கார். நலம் - அன்பினை நலம் மறந்து தவிரலர் என்பது (௬௬)

## 7. தெளிவு

### புலவர் இயல்பு

[புலவர்கள் நாடெங்கும் உலவி வருவோர், கவலையற்ற வாழ்க்கை யினர்; இயற்கைக் காட்சிகளையும் உணர்வுகளையும் உண்மை வழுவாமற் பாடுவோர். பெற்றது கொண்டு மகிழ்ந்து மற்ற வர்க்கும் உதவிப் பற்றற்று விளங்குவோர். மதியாரை மதி யார். ஆயினும், அவரிடமும் இனியர். இவ்வாற்றால், நாட் டிற் செல்வாக்கும் ஆதரவும் உடையர்.]

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளின் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பாது உண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை,
பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே; திறப்பட

நண்ணார் நாண அண்ணாந்து ஏகி
ஆங்கினி தொழுகின் அல்லது ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோ ரன்ன செம்மலும் உடைத்தே.

—புறநானூறு, ச௭.

வெறும் நூலறிவுமட்டும் உடையோர் புலவர் ஆகார் அவ் வறிவின்படி வாழ்க்கைப் பழக்கமும் உடையவரே அப் பெயருக்கு ஏற்றவர் பண்டைக் காலத்திற் புலவர்கள் எவ்வளவு தெளிந்த வாழ்க்கை யுடையவர்களாய் விளங்கினார்கள் என்பதற்கு இச் செய்யுள் சிறந்த சான்றாகக் காட்சியளிக்கின்றது.

சோழன் நலங்கிள்ளி என்பவனுக்கும் நெடுங்கிள்ளி என்பவனுக்கும் இடையே பகை மூண்டிருந்தது நெடுங்கிள்ளி உறையூரில் இருந்தான். நலங்கிள்ளியினிடமிருந்து இளந்தத்தன் என்னும புலவர் ஏதோ வழிபபோக்காக உறையூருக்கு வர நேர்ந்தது நெடுங்கிள்ளி அவரைப் புலவர் வடிவில் வந்த ஒற்றன் என்று கருதிக் கொல்லப் புகுந்தான். தற்செயலாக அங்கே கோவூர்கிழார் இருந்தார்; இளந்தத்தரை அவருக்குத் தெரியும். அப்போது தான் புலவர்களின் இயல்பை இச் செய்யுளின் வாயிலாக அரசனுக்கு விளக்கிக் கூறி, இளந்தத்தனாரை அவர் உய்வித்தார்.

"புலவர்கள் நாடு முழுமையும் பரந்து செல்லும் இயல்புடையவர்கள். பறவைகளை ஒத்த கவலையற்ற வாழ்க்கை அவர்களுடையது. உலகத்தின் இயற்கைக் காட்சிகளையும் உயிர்களின் இயற்கை உணர்வுகளையும் சுவையோடு சித்திரித்துப் பாடும நேர்மையுடையவர்கள். அன்பர்கள் அங்கங்கும் இருந்து வள்ளன்மையோடு மதித்து உதவுவதை, அது, எவ்வளவு சிறியதாயினும் மகிழ்வோடு ஏற்று, தமமைச் சேர்ந்த சுற்றங்களை உண்பித்துத் தாமும் சிக்கனம பிடியாமல் உண்டு பிறர்க்கும் உள்ளம் சுருங்காமல் உதவி

பொருளிற் பற்றுச் சிறிதுமின்றி வாழும் நீர்மை யுடையவர்கள். அவர் கருதுவதெல்லாம் மதிப்பு ஒன்றையே யாகும். இத்தகையோர் வாழ்க்கை, பிறர்க்குக் கொடுமை செய்தலைச் சிறிதும் அறியாதன்றோ !

"மேலும், அவர்கள் தமது கல்வியை மதியாதவர்கள் நாணும்படி தாமும் நிமிர்ந்து நடக்கும் வீறு படைத்தவர்கள் ஆயினும், அவர்களுக்கு ஊறு கருதாமல் அவர்களுக்கு இனியராய் ஒழுகும இரக்கமும் உடையவர்கள். அன்றியும், மண்ணுள் செல்வம் எய்திய நும் தலைமையைப் போன்ற தலைமையும் இயற்கையே வாய்க்கப்பெற்றவராவார்கள்."

இவ்வாறு நெடுங்கிள்ளிக்குக் கோவூர்கிழார் புலவர்களின் இயல்பை எடுத்துப் பேசினார். கிள்ளியின் உள்ளம் அஞ்சி நெகிழ்ந்தது. 'உடமபு கொண்டு பிறவியெடுத்ததெல்லாம், தாழ்வில்லாததும், இயற்கைப் பிணிப்புள்ளதுமான கவலையற்ற இப் பரநத எளிய தெளிவு வாழ்க்கையினைப் பெறுதற்கேயல்லது வேறில்லை, புலமை என்பது இத்தகைய வாழ்க்கைப் பழக்கமாகிய ஞானமே என்று அறியும்போதும, புலவர் என்பவர் அத்தகைய ஞானத்தின் திருவுருவமே என்று உணருமபோதும் நாம் இப்போது செய்ய இருந்த செயல் எவ்வளவு பெருந் தீவினையாகத் தோன்றி முடிகின்றது !' என்று அவன் நெஞ்சம் பதைத்தது.

புலவர்கள் இங்ஙனம் புலவர்களாக வாழும் மெய் வாழ்க்கையை யுடையவர்களானால், மண்ணுள் செல்வம் எய்தியோருடைய தலைமையான உயர்வு உலகத்தில் அவர்கட்கு இயற்கையாகவே முன் வந்து சூழும். பொய்யடிமையில்லாத இவ் வீறுடைய புலவர்கள் போன்றோர் முற்காலத்திற்போல வருங் காலங்களிலும் பரந்து விளங்குதல் ஒன்றே, நமது நாட்டின் நாகரிகப் பெருவிளக்காம் என்க.

**குறிப்புரை:** வள்ளியோர் - வள்ளன்மை யுடையோரை. படர்ந்து - நினைந்து. புள்ளின் - பறவைகளைப்போல. போகி -

போய். நெடிய - நீண்ட தொலைவு உடையன. என்னாது - என்று கருதாமல். வடியா நாவின் - தமது திருந்தாத நாவினால்; இங்ஙனங் கூறியது பணிவு கருதி. வல்லாங்கு - வல்லபடி. பெற்றது - பெற்ற பரிசில் அளவுக்கு. அருத்தி - உணபித்து. ஓம்பாது - சிக்கனத்தாற் பொருளைப் பாதுகாவாது. கூம்பாது - உள்ளம் சுருங்காமல். வீசி - எளிதிற் கொடுத்து. வரிசைக்கு - தகுதிக்கு. வருந்தும் - உடம்பின் இன்னலையும் உழைப்பையும் பாராமல் முயலுகின்ற. நீது அறிந்தன்றோ இன்று - நீது அறிந்தது இல்லை. கண்ணார் - கல்விச் செருக்கு முதலியவை காரணமாகத் தம்மிடம் அணுக்கங்கொள்ளாதவர். திறப்பட - அவர் அறிந்த கூறுகளிலெல்லாம் தோல்வி யுண்டாகும்படி. நாண - நாணும் பொருட்டு. நண்ணார் திறப்பட நாண என்று கூட்டுக. எகி - நடந்து. ஆங்கு - ஆயினும் அத்தகையோரிடத்தில். ஒழுகின் அல்லது - ஒழுகுதல் அல்லாமலும். ஓங்கு புகழ் - மிக்க புகழினையுடைய. செம்மலும் - தலைமையும்; தலைமையான ஆட்சியும் என்க. (கூஎ)

## வைகறை நேரத்தின் அருமை

[தெளிவு, வைகறை நேரத்தில் இயல்பாக உண்டாகும். அந்தத் தெளிவில், நல்ல நினைவுகள் உள்ளத்தில் வந்து குவிந்து ஆற்றலுறும். அருள் நெஞ்சம் உடையவர்களுக்கே அங்ஙனம் நன்னினைவுகள் வந்து கலக்கும். பின்பு அவை, உறுதியோடு இயங்கி ஆக்கமும் நலனும் பயக்கும்.]

இருளிடை என்னாய்நீ இரவஞ்சாய் வந்தக்கால்,
பொருளில்லான் இளமைபோல் புல்லென்றாள், [வைகறை
அருள்வல்லான் ஆகம்போல் அணிபெறும்; [அவ்வணி
தெருளாமற் காப்பதோர் திறனுண்டேல் [உரைத்தைக்காண்.

—கலித்தொகை, ௩அ: கச - எ.

விடியற்காலம் கிளர்ச்சியும் ஆக்கமும் அழகும் பொருந்திய காலம்; அப்போது அறிவு தெளிவாகவும், ஊக்கம் உறுதியாகவும் விளங்கும். அருள் நெஞ்சமுடையவர்க்கு,

அக்காலத்தில், ஆக்கத்துக்கு ஏதுவான நினைவுகளும் முயற்சிகளும் ஒருங்கு பெருகி வந்து, அவர்கள் திருமுகத்தில் ஓர் ஆற்றலான கவர்ச்சியை உண்டாக்கும். அதனால், அவர்களுக்கு அற்றைப் பொழுதில் எல்லாரும் வயமாகி, எல்லா வகையான ஆக்கங்களும் உண்டாவதற்கு ஏதுவாகும் விடியற்காலத்தில் இயற்கையாக உண்டாகும் இக் கவர்ச்சியாகிய திருவினை, மக்கள் மேலுமேலும் அருள் நெஞ்சங் கொள்ளும் வகையினால் பெருக்கிக்கொண்டு, இன்ப வாழ்க்கையில் விளங்குதல் நல்லது.

ஒரு மாது இங்ஙனம் அருள் நெஞ்சம் பெருக்கித் திருப்பெறுது கவர்ச்சியினை எய்துதற்குக் கணவனோடு கூடி இல்லற துறவறங்கள் நடத்துதல் வேண்டும். கணவனிடம் தான் பெறுகின்ற அன்பே அம் மாதுக்குப் பொருள், அவ் வன்பினைப் பெறுதபோது, அவள் கைப்பொருளில்லாத வறியவனது இளமைபோற் பொலிவழிந்து போகின்றனள். அவ் வன்பாகிய பொருள் தனக்குக் கிட்டியபோது, தனக்கு இயல்பாக உள்ள அருள் நெஞ்சத்தை இல்லற துறவறங்கள் செய்தலாற் பெருக்கிக் கொண்டு, விடியற்காலத்தில் அருள் நினைவு உடையானது கிளர்ச்சிபோல், அழகுடையள் ஆகின்றனள்.

இங்ஙனம் மாதர்க்கு அழகு ஏறியும் இறங்கியுந் தோற்றுதற்குக் காரணமாக உள்ளதெல்லாம் கணவர் செய்யும் அன்பு ஒன்றே முடிதலின் மாதர் அவ் வன்பினைத் தம்மிடம் நிலைநிறுத்திக் கொள்வதில் மிக்க கருத்துடையராயிருப்பர். அது, திருமணத்தினாலும் கற்பொழுக்கத்தினாலும் நிலைபெறும்.

அதனாலேதான், களவொழுக்கங் கொண்டு இரவு நேரங்களில் வந்து செல்லுந் தலைவனைத் தோழி எதிர்ப்பட்டு, தலைவியின் இந் நிலைகளை அவனுக்குப் புலப்படுத்தி, திருமணஞ் செய்துகொள்ளும் வகையால் கற்பொழுக்கத்தில் நிலைபெறும்படி வேண்டுதல், இச் செய்யுட் பகுதியில் வருகின்றது.

மாதர்க்கு அழகென்பது, உண்மையில் இதுவாயின், தலைவியின் நலங் கருதிய தோழி தலைவனிடம் இதனையன்றி வேறு எதனை வேண்டுவாள்!

**குறிப்புரை:** இருளிடை - இருளில். என்னாய் - இரவென்று கருதாமல். அஞ்சாய் - அஞ்சாயாய். 'புல்லென்றாள், நீ அஞ்சாயாய் வந்தக்கால் அணிபெறும்' என்று மாற்றி உரைத்துக் கொள்ள வேண்டும். புல்லென்றாள் என்றது பெயர், தலைவி என்னும் பொருட்டு; புன்மைப்பட்டவள் என்பது பொருள்; அதாவது, பொலிவழிந்தவள் என்க. அருள் வல்லான் - அருளுதல் வல்லவனது. ஆகம் - கிளர்ச்சி முதலியன. அணி - அழகு. பெறும் - பெறுவாள். தெருளாமல் - பிறரால் உண்டான அழகென்று பிறர் தெளிந்துகொள்ளாதபடி. 'காப்பதோர் திறன்' என்றது, திருமணஞ் செய்துகொள்ளுதலை நினைந்து. உரைத்தை - சொல்லுவாயாக. காண், முன்னிலையில் வந்த அசை. (௯௮)

## தெளிவு பிறக்கும் இடம்

[அன்புள்ளம் விளக்கமுறும் இடமே ஐயந் திரிபறும் இடம். உறுதி பிறக்கும் இடம். உறுதிக்கு விரும்புவோர் உழுவலன்பு கொள்ளப் பழகுதல் வேண்டும். கோப்பெருஞ் சோழனின் பேருறுதி மொழியே இதற்குச் சான்று.]

கேட்டல் மாத்திரை யல்லது யாவதும்
காண்டல் இல்லாது யாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய ராயினும்
அரிதே தோன்றல் அதற்பட ஒழுகலென்று
ஐயங் கொள்ளன்மின், ஆரறி வாளீர்!
இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே;
தன்பெயர் கிளக்குங் காலை என்பெயர்
பேதைச் சோழன் என்னும்; சிறந்த
காதற் கிழமையும் உடையன், அதன்றலை

இன்னதோர் காலை நில்லலன்,
இன்னே வருகுவன் ; ஒழிக்க அவற் கிடமே.

—புறநானூறு, உகசு

'உறுதி பிறக்கும் இடம் எது?' என்பது இச் செய்யுளில் திட்டமாகத் தெளிவாகின்றது. கலந்த நட்பிலே தான் உறுதி பிறக்கின்றது. ஐயந் திரிபுகள் நீங்குகின்றன. தெளிவு உண்டாகின்றது.

பிசிராந்தையார் என்னும் தன் நண்பர், தாம் இருக்கும் பாண்டிநாட்டுப் பிசிர் என்னும் ஊரிலிருந்து தன் சோழநாட்டு உறையூருக்குத் தன்னோடு வடக்கிருந்து உயிர் துறக்கும் பொருட்டுக் கட்டாயம் வருவர் என்பது கோப்பெருஞ் சோழன் நம்பிக்கை. உறுதியான இந்தத் தெளிவு அவ் விருவரிடைப்பட்ட மெய்யன்பிலிருந்தே தோன்றிற்று.

அருகிலிருந்த அறிஞரிற் சிலர், "வேந்தே, பிசிராந்தையாரும் நீரும் ஒருவரையொருவர் கேள்வியளவாக அறிவீர்களே யல்லாமல் நேரிற் கண்டதென்னவோ இல்லை; இந் நிலையில் ஆண்டுகள் பல கழிந்துவிட்டன; நேரில் தவறின்றிப் பழகிய உரிமையுடையோரும் அக் கிழமைக் கேற்ப ஒழுகல் அரிதாயிருக்கின்றதே" என்று ஐயுற்றுக் கூறினர்.

அதற்கு வேந்தன் பின் வருமாறு கூறுகின்றான் :

"நிறைந்த அறிவினை யுடையீர்! ஐயங் கொள்ளன்மின். பிசிராந்தை என்னும் என் நண்பன் அங்ஙனம் எளிதாக எண்ணி இகழ்ந்து விடுதற்குரியன் அல்லன்; இனியன்; பிணித்த நண்பினன்; புகழ் அழிய வரும் பொய்ம்மையை வேண்டான்; அவன் தன் பெயர் இன்னதென்று பிறர்க்குச் சொல்லும்போது 'என் பெயர் கோப்பெருஞ் சோழன்' என்று பேதைச் சோழனை என் பெயரையே எடுத்துச் சொல்லும் அவ்வளவு சலுகையான அன்புரிமை யுடையவன். மேலும், இத்தகைய துன்பக் காலத்தில் அவன்

அங்கே நிற்கமாட்டான்; உடனே வருவன். அவனும் என் பக்கத்தில் வடக்கிருந்து உயிர் துறப்பது உறுதி; இடம் அவனுக்கு ஒழித்து வையுங்கள்.''

மெய்யன்பிலன்றி இத்தகைய உறுதியுரை தோன்றுதற்கு இடமேது? சோழனது உறுதிப்படியே எல்லாம் நிகழ்ந்தன.

**குறிப்புரை:** கேட்டல் மாத்திரை - கேட்டல் அளவு. யாவதும் - சிறிது பொழுதும். வழுவு இன்று - தவறுதல் இல்லாமல். கிழமையராயினும் - உரிமையராயினும். தோன்றல் - தோன்றலே; வேந்தே என்றபடி. அதற்பட ஒழுகல் அரிது - அக் கிழமை தோன்ற ஒழுகுதல் அரிதாகும் முதல் நான்கு வரிகள், ஐயுற்ற அறிஞர்களின் பேசசைச் சோழன் கொண்டு கூறியது. ஆர் - நிறைந்த. யாத்த - பிணித்த; உறுதி நெகிழாத. கிளக்குங் காலை - எடுத்துக் கூறும்பொழுது. 'பேதைச் சோழன்' என்றது, தன் பணிவு புலப்படுத்தியது. அதன் தலை - அதற்கு மேலும். இன்னே - இப்பொழுதே. (௬௬)

## ஆறுதல்

[ஆறுதலுணர்வு, இச் செய்யுளில் மிக்க மாட்சிமையான காரணங்களால் உருவாக்கப்படுகின்றது. மக்களுக்கு அவரவருடைய உயிருணர்வின் ஆற்றலே அதனை விளைவிக்கின்றது. காதலர்களின் உணர்வியக்கத்திலே இந் நுண்மைகள் நன்கு விளக்கமாகின்றன.]

அல்குறு பொழுதின் தாதுமுகை தயங்கப்
பெருங்காட்டு உளரும் அசைவளி போலத்
தண்ணிய கமழும் ஒள்நுத லோயே!
நொந்தனை யாயின், கண்டது மொழிவல்;
பெருந்தேன் கண்படு வரையின் முதுமால்பு
அறியா தேறிய மடவோன் போல,
ஏமாந் தன்றிவ் வுலகம்;
நாம்உளே மாகப் பிரியலன் தெளிமே.

—குறுந்தொகை, ௨௭௩.

'இராத்திரி நேரத்தில் அகன்ற முல்லைக் காட்டில் அரும்புகள் மலர்ந்து விளங்க அவற்றைத் தடவி வருகின்ற மென்காற்றின் மணம் போலத் தண்ணென மணங்கமழும் ஒள்ளிய நெற்றியையுடைய தலைவி! தலைவன் நின்னைப் பிரிவான் என்று கருதி நீ வருந்தினையானால், நான் அறிந்ததை உனக்குச் சொல்லுவேன் கேள். பெரிய தேன்கூடு தங்கியிருக்கின்ற மிக உயர்ந்த மலையில், அதனை எடுக்க முடியும் முடியாது என்று அறியாமல் மூங்கிலின் கண்ணேணி கொண்டு எறிப் பிழைபடுகின்ற பேதையைப் போல இவ்வுலகத்தார் பொருளுக்காகக் கொடிய நெறிகளில் முயன்று தமக்கும் பிறர்க்கும் பல இன்னல்களை விளைத்துக்கொண்டு ஏமாந்து போகின்றார்கள். தலைவரும் நின்னைப் பிரிந்து செல்வதுபோல முயல்வார், பின்னர் ஏமாந்து நின்றுவிடுவார் ஆதலால், வருந்தவேண்டிய கட்டாயம் ஒன்றுமில்லை. மேலும், இன்னொன்றினாலும் நாம் உறுதியாக ஆறுதல்கொண்டு இருக்கலாம் அவர் பிரிந்தால் நமக்கு உயிர் நில்லாது; ஆதலால், நாம் உயிரோடு இருக்கும் வரையில் அவர் பிரிவார் என்பதும் இல்லை. இவ்வுண்மையில உனக்கு உறுதியிருந்தால் நீ தெளிந்திரு' என்னுங் கருத்துக்களை இச் செய்யுள் புலப்படுத்துகின்றது.

இரண்டு அரிய உண்மைகளை இது நமக்கு நன்கு தெளிவிக்கின்றது. தலைவியின் உடன்பாடும் அனுமதியும் இன்றித் தலைவனுக்குப் பொருளீட்டுதல் முடிவு போகாதென்பதும், தலைவியின் உயிராற்றலானது தலைவனைப் புறத்தே அடியெடுத்து வைக்கவொட்டாதவாறும் ஈர்க்கவல்லது என்பதும் அவ்வுண்மைகள். தலைவியின் இயைபு தலைவனோடு எத்துணை அணுக்கம் வாய்ந்துள்ளது!

காதலர்களின் அணுக்க நிலையினால் உண்டாகும் உணர்வியக்க முறைகள் பற்பலவாய் மாண்பும ஆற்றலும் உடையனவாய் இருக்கின்றன!

**குறிப்புரை :** அல்குறு பொழுதில் - இரவில். தாது - பூந்தாதுகளையுடைய. முகை - அரும்புகள். தயங்க - மலர்ந்து

விளங்க. உளரும் - வீசுகின்ற. அசை வளி - அசைந்து வரும் காற்று; அதாவது, மென்காற்று என்னும் பொருட்டு. கண்டது - அறிந்ததை. மொழிவல் - சொல்லுவேன். தேன் - தேன் கூடு. கண் படு - தங்கியிருக்கின்ற. வரையில் - மலையில். முதுமால்பு - பழைய கண்ணேணி; ஒரு நீண்ட மூங்கிலின் கணுக்களைக் கால் வைத்து ஏறும் அளவுக்குத் தறித்து அம் மூங்கிலையே ஏணியாகப் பயன்படுத்துவது பண்டைக் காலத்தில் வழக்கம்; அது கண்ணேணி எனப்படும்; கணுக்களையுடைய ஏணி என்பது அதன் பொருள். இந்த ஏணி மிக்க அச்சமும் இடரும் உடையது. ஏமாந்தன்று - ஏமாந்தது. உலகம் என்று உலகத்தாரின்மேல் வைத்துப் பொதுவாகக் கூறினாலும் அச் சொல் தலைவனையே உட்கொண்டு நின்றது. உளேமாக - உயிரோடு இருக்கின்றோமாக; உயிரோடு இருக்க என்னும் பொருட்டு. தெளி - தெளிவாயாக. 'மே' என்பதற்குப் பொருளில்லை; முன்னிலை அசை. (எ0)

## பழக்க வுணர்வு

[சொற்களால் துணிய முடியாத கருத்துக்கள் பழக்க வுணர்வில் தெளிவாக விளங்கிவிடும். ஐயந் திரிபுகள் அறுகின்ற இடம் எப்போதும் பழக்கம் பெறுகின்ற நிலையே. பலரும் வேறு வேறு வகையாகக் கூறிய கருத்துக்களை, இச் செய்யுளியற்றிய நக்கண்ணையார் தம் பழக்கவுணர்வு கொண்டு துணிபு தேற்றும் முறை மிகவும் அழகாக இருக்கின்றது.]

என்னைக்கு ஊரிஃது அன்மை யானும்,
என்னைக்கு நாடிஃது அன்மை யானும்,
ஆடா டென்ப ஒருசா ரோரே;
ஆடன் றென்ப ஒருசா ரோரே;
நல்ல பல்லோர் இருநன் மொழியே;
அஞ்சிலம் பொலிப்ப ஓடி எம்இல்
முழாவரைப் போந்தை பொருந்திநின்று
யான்கண் டனன்அவன் ஆடா குதலே.

—புறநானூறு, அ௫.

பெருங்கோழி நாய்கன் மகளாரான நக்கண்ணையாருடைய அன்பு மொழிகளே இச் செய்யுள்.

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி தன் தந்தை தித்தன் என்பானுடன் பகைத்து நாடிழந்து வேற்றிடங்களில் இருந்தவன் முககாவல் நாட்டு ஆமூர் மல்லன் என்னும் மற்போரில் வல்லானைத் தனது மற்போர் வல்லமையாற் பொருது வென்ற வீரன். அவன இயல்புகளை நோக்கினால் அவன் தக்கோன் என்றுந் தெரிகின்றது.

தனக்கு உரிமையில்லாத வெளியூரிற் சென்று ஒருவன் வெற்றி பெறுவதானால், அது. இடம் பொருள் ஏவல் என்னுங் கருவிகளின்றிப் பெறுகின்ற வெற்றியாதலின், அவ் வெற்றி அவனுக்கு இயல்பாக உரிய ஆண்மைப் பண்பிலிருந்தே உண்டாயிருத்தல் வேண்டும். அப்படியிருந்தும், சிலர் அதனை, 'இயல்பான தகுதியுடையவர்கள் வெற்றி பெறுவது ஓர் அருமையா என்ன' எனவும், வேறு சிலர், 'வெற்றி பெறுவதெல்லாம் ஏதோ ஒரு வாய்ப்பு' எனவும பொருள் செய்யாது பேசுவர். இங்ஙனம் தகுதி பாராட்டாது கூறும் இரு வகையான பேசசுகளும் மிக அழகியனதாம்! என்ன செய்வது? உலகம் அப்படி இருக்கின்றது!

ஆனால், நக்கண்ணையார் உள்ளம் அப்படியில்லை. சோழன் போர்வைக்கோப் பெருங்கிள்ளி என்னும் வீர மைந்தனிடம அவருளளம பறிபோகின்றது. சோழ மைந்தன் தம்மைக் காதலிக்கின்றான் என்பதை அவ் வம்மையார் உள்ளம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கவில்லை. ஒருபாற் காதலாகவுந் தானே துணிந்து காதலிக்கின்றது. இம முறைமையை அகப்பொருள் வழக்கில், 'கைக் கிளைத் திணை' என்று ஆசிரியன்மார் கூறுவர். அம்மையார் இச் செய்யுளிற் கூறுஞ் சொற்கள் பின் வருவன :

"என் தலைவனுக்கு ஊர் இஃது அல்லாமையாலும், என் தலைவனுக்கு நாடு இஃது அல்லாமையாலும், அவனுக்கு இயல்பாக உரிய வெறறியே இவ் வெற்றி' என்பர் ஒரு சாரார்; 'இஃது ஏதோ ஒரு வாய்ப்பாதலின் இது வெற்றியன்று' என்பர் வேறொரு சாரார். பலரும் பாராட்டுதலின்றிக் கூறும் இவ் விருவகைப் பெரு மொழிகளும்

மிக அழகுதாம்! அழகிய சிலம்பு ஒலிக்க ஓடி, எமது இல்லத்தின்கண் இருக்கும் பனைமரத்திற் சாய்ந்து நின்று, யான் என் கைவளைகளும் ஆடையும் நெகிழ்ந்து தோல்வி யெய்துதல் கொண்டு என் தலைவனது வென்றிபாதற் றன் மையை ஆழ்ந்த நினைவினால் நன்கு கண்டுகொண்டேன்"

அம்மையார் அன்பு மொழிகள் எவ்வளவு மெய்ம்மை யாகவும் எவ்வளவு சொற்சித்திரமாகவும் அழகு கனிந்து விளங்குகின்றன! தமது உள்ளத்தை இவ்வளவு கவர்வ தற்கு அச சோழமைந்தனுக்கு எவ்வளவோ சிறந்த ஆண் மைப் பண்பு வேண்டுமென்றே என்னுங் கருத்தில் அம்மை யார் துணிபு நிகழ்த்துதல் எவ்வளவு மெய்ம்மை கனிந் ததா யிருக்கின்றது!

சிறந்த ஆண்மைப பண்பு ஒன்றே சிறந்த பெண்மைப் பண்பைக் கவர வல்லது என்னும் ஓர் அரிய இயற்கை யுண்மையையும் அம்மையார் இதன் முகமாகப் புலப் படுத்தியிருப்பது ஒரு பெரிய உதவியாகும்

குறிப்புரை: என் ஐக்கு - என தலைவனுக்கு. ஐ - தலை வன். ஆடு ஆடு என்ப - இயல்பான வெற்றிப்பாடே இவ் வெற்றி என்பர்; இதில் வியக்கத்தக்கது ஒன்றுமில்லை என்று கருதியபடி. ஆடு - வெற்றி. 'நன்மொழி' என்பதில் 'நல்' என வந்த அடைச் சொல்லும், 'நல்ல' என்பதும் இங்கே 'நல்ல வல்ல' என்னும் இகழ்ச்சிக் குறிப்பில் வந்தன. முழா அரைப் போந்தை - மத்த ளத்தைப் போன்ற அடிப்பாகத்தையுடைய பனைமரம். (எக)

## செல்வாக்கு

[சங்க காலத்தில் புலவாகட்குத் தக்க செல்வாக்கு இருந்தது. கார ணம், அவர்கள் நல்லுணர்வு ஒன்றையே எங்கும் பரப்பும் உறுதியுடையராய் இருந்தனர். நாடு எங்கும் அவரை ஏற்றுக் கொண்டது. இயற்கை அன்னை அவர்கள் வாழ்க்கையை எங்கும் ஏந்திக்கொண்டிருந்தாள்; பிற செல்வாக்குகள் வரம் புடையவை.]

வாயி லோயே, வாயி லோயே! [தாம்
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்

உள்ளியது முடிக்கும் உரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே!
கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன்அறி யலன்கொல்? என்அறி யலன்கொல்?
அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமும் அன்றே; அதனால்,
காவினெம் கலனே; சுருக்கினெம் கலப்பை;
மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே;
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே.

—புறநானூறு, உ0சு.

புலவர்கள் பண்டைக் காலத்தில் ஞானிகளாக வாழ்ந்து வந்தனர். அக் காலத்தில் அவர்களுக்கிருந்த செல்வாக்கு மிகவும் வியக்கத்தக்கதாக இருந்து வந்தது. அதற்குக் காரணம், அவர்களுடைய செம்மையான உள்ளமேயாகும். அவ் வுள்ளத்தில் முகிழ்த்து மலர்ந்த ஆற்றல்கள் பலப்பல எல்லாம் உலகத்தில் மேம்பாட்டுணர்வினை வளர்ப்பதற்கே பயன்பட்டன. அஃதொன்றே அவர்கள் நோக்கம். 'வரிசைக்கு வருந்தும் வாழ்க்கை' என்று இச் செய்யுள் அவர்கள் வாழ்க்கையை விளக்குதலால் அவ் வுண்மை விளங்குகின்றது. வரிசை என்றது, தகுதி; அதாவது, மேம்பாடு. இதன் பொருட்டு அவர்கள் மற்றவற்றையெல்லாம் மறந்தனர். இதனால், அவர்கள் எத்திசைச் செலினும் அத் திசைச் சோறாய் இருந்தது. உலகத்தில் தகுதி கருதி நடந்துகொள்ளும் அறிவும் புகழு முடையோர் அடியோடு இல்லாமல் உலகம் வறிதாய் இராதன்றோ!

ஒருநாள் ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சியிடம் பரிசில் விரும்பிச் சென்றார். அவன் ஏதோ கார

ணத்தால், சற்றுக் காலந் தாழ்த்தினன். தகுதியை அவன் முதலிற் கருதவில்லை என்று, ஔவையார் திருவுள்ளத்தில் தோன்றியது அவர் உடனே வெளியிற் புறப்பட மூட்டை கட்டி விட்டார். வாயில் காப்போன் பழக்கமுடையவன். அதியனுக்கு அறிவிக்கவேண்டிய கருத்துக்களை அவ்வாயிலோனிடம் ஔவையார் பின்வருமாறு அறிவிக்கின்றார்:

"வாயிலோயே, வாயிலோயே! வள்ளன்மையுடையோருடைய செவியில், விளங்கிய மொழிகளை விதைத்துத் தாம் கருதியதை முடிக்கும் வலியுடைய நெஞ்சத்தவர் புலவர்! அவர்கள் பரிசில் வாழ்க்கையுடையோராயினும், வரிசை கருதியே உள்ளம் உருகுவர். அத்தகைய பரிசிலர்க்கு அடையாத வாயில் என்று அதியன் வாயிலையுங் கருதினேன்.

"விரைந்த குதிரையையுடைய தோன்றலாயிருக்கின்றான் அஞ்சி! இந்த ஆரவாரத்தால் என்ன பயன்? அவன் தனது தரத்தையும் அறியவில்லை, எனது தரத்தையும் அறியவில்லை. தரந் தெரியும் அறிவும் புகழுமுடையோர் மாய்ந்து உலகம் வறியதாயில்லை.

"ஆதலால், எம் கலங்களைத் தூக்கிக்கொண்டேம். வேறு பண்டங்களையுடைய பையை வாயாறுக்கிக் கொண்டேம். கையில் வாய்ச்சியையுடைய தச்சச் சிறார்க்குக் காட்டில் மரத்துக்கு என்ன குறை? எத்திசைச் செலினும் எமக்கும் அத்திசைச் சோறே."

தகுதி யொன்றையே கருதும் பற்றற்ற புலமை வாழ்க்கையும் அவர்கள் செல்வாக்கும் ஔவையார் சொல்லிலுஞ் செயலிலும் எவ்வளவு நன்றாக விளங்குகின்றன!

**குறிப்புரை:** வள்ளியோர் - வண்மையுடையோர். செவி முதல் - செவியில். வயங்கும் - விளங்கிய; ஒண்மையுள்ள. வித்தி - விதைத்து. உள்ளியது - கருதியது; அதாவது, நல்லுணர்வினை விளைப்பது. உரன் - உணர்வாற்றல். வரிசைக்கு - தகுதிக்கு; தகுதி யுணர்வுக்கு. வருந்தும் - அதனைப் பெற

முயலும். வாழ்க்கை - வாழ்க்கையையுடைய. கடு மான் - விரைந்த நடை பொருந்திய குதிரையையுடைய. தோன்றல் - குருசில். தன் - தனது தாரத்தை. அறியலன்கொல் - அறியானோ? அறியவில்லையே என்றபடி. என் - எனது தகுதியை. அறிவு - தகுதியை அறிந்து ஏற்ப நடந்துகொள்ளும் அறிவு. புகழ் - தகுதியுடையோர்க்குத் தக்கபடி உதவி செய்தலாகிய புகழ்க்குரிய செயல். மாய்ந்தென - மாய்ந்தாராக. வறுந் தலை உலகமும் அன்றே - வறிய இடத்தையுடைய உலகமுமன்றே இது; அறிவும் புகழுமுடையோர் அங்கங்கும் உயிர் வாழும் உலகமாகவே இவ்வுலகம் எப்போதும் விளங்குகின்றது என்பது கருத்து. காவினெம் - காவினேம்; தோளில் இருபக்கமும் தூக்கிக்கொண்டேம். கலன் - பாண்டங்களை. கலப் பை - கலங்களையுடைய பை; வேறு பண்டங்களையுடைய பை. மரம் கொல் - மரத்தைச் செதுக்கும். தச்சன் கை வல் சிறார் - தச்சன் பயந்த கைவன்மை மிக்க சிறுவர்க்கு. 'மழுவுடைக் கைவல் சிறார்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். மழு - இங்கே, வாய்ச்சி என்னுங் கருவி. காட்டகத்து அற்று - காட்டகத்தைப் போன்றது. காட்டகத்தைப் போன்றது இவ்வுலகம் என்றபடி. செலினும் - சென்றாலும். (எஉ)

### நிலையாமை யுணர்வு

[மக்கட்கு நிலையாமை யுணர்விலை எதிர்காலத்தைப் பற்றிய நினைவும் ஆராய்ச்சியும் அறிவு விரிவும் நுட்பமும் வாழ்க்கை முன்னேற்றமும் உண்டாகின்றன. மெய்யுணர்வு நூல்கள் இவ்வுணர்வின் அடிப்படையில் உண்டானவையே. இவ்வுணர்வு 'காஞ்சி' என்னுஞ் சொல்லால் முன்பு வழங்கப்பட்டது. இச்செய்யுளில் பெருங் காஞ்சியாக இது விளக்கப்படுகின்றது.]

மயங்கிருங் கருவிய விசும்புமுக னாக
இயங்கிய இருசுடர் கண்ணெனப் பெயரிய
வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் வயங்குமணி யாரத்துப்
பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் செல்லாது இன்னும்

விலைநலப் பெண்டிரின் பலர்மீக் கூற
உள்ளேன் வாழியர் யானெனப் பன்மாண்
நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டென உரைப்பரால் உணர்ந்திசி னோரே.

—புறநானூறு, ௩௬௫.

நிலையாமை யுணர்வு, மக்கள் வாழ்க்கையை மிகு நுட்பமும் நாகரிகமும் உடையதாம்படி முன்னேற்றி யிருக்கின்றது. மிகப் பழைய காலத்திலிருந்தே இவ்வுணர்வு இங்ஙனம் வாழ்க்கையைப் பண்படுத்தி வருகின்றது. 'காஞ்சி' என்னும் பழந்தமிழ்ச் சொல் இந் நிலையாமை யுணர்வையே உணர்த்துவதிலிருந்து இவ் வுண்மை விளங்குகின்றது.

மக்களில் முதியோர்கள் எவ்வளவோ நிலையாமையை உலகிற் கண்டிருப்பார்கள். அவர்கட்கு நிலையாமை யுணர்வு மிகுதியாக இருக்கும். அவ்வுணர்வு மிகுதியைப் 'பெருங் காஞ்சி' என்பர். எல்லாரையும் விட 'நிலமகள்' என்னும் இந்த உலகம் இதுவரையில் எவ்வளவு நிலையாமையைக் கண்டிருக்கும்! மறைந்து போனவர்களை நினைந்து பலரும் அழுவதைப்போல் நிலமகளும் அழுவது என்று இருந்தால், அது, எவ்வளவு அழுது தீரவேண்டும்! அதன் காஞ்சி, எவ்வளவு பெருங் காஞ்சியா யிருக்கின்றது!

கடல் கடந்தும் தமது ஆட்சிச் சக்கரத்தை உருட்டி எங்கும் தம்மோடு போர் செய்தற்குப் பகைவரைக் காணாத அவ்வளவு பெரு வலிமை படைத்த பேரரசரினும் எத்தனையோ பலர் மாண்டுபோக, இன்னமும் நாம் இருக்கின்றோமே என்று பலகாலும் நிலமகள் அழுத பெருங் காஞ்சி இச் செய்யுளில் வருகின்றது.

நிலமகளும் இங்ஙனம் அழுவதற்கேற்றபடி மிகப் பெரிய நிலையாமையை இவ் வுலகம் உடையதென்று சான்றோர் எடுத்துக் காட்டுவர் என்பது இதன் கருத்து. நிலையாமை இல்லாவிட்டால், உலகத்தில் மக்கட்கு மெய்யுணர்வும் நல்லொழுக்கமும் உண்டாவதற்கு வழி ஏது? இதனால், தமிழின் பழைய இலக்கண இலக்கியங்களில்

காஞ்சித் திணையைப் பற்றிய அமைப்பும் வழக்கும் தகுதியாக வந்திருக்கின்றன. தமிழ் மக்களின் நல்லுணர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், உலகப்பொருள்களைத் தகுதியான நெறி துறைகளறிந்து அவர்கள் பயன்படுத்தும் நேர்மைக்கும், இக் குறிப்பு, சிறந்த எடுத்துக்காட்டன்றோ!

**குறிப்புரை:** 'மயங்கு இரு கருவிய .....நீத்தம்' என்பது கடலில் என்னும் பொருட்டு. நீத்தம் என்றது, இங்கே கடல். 'மிக்க மின்னல் முதலியவற்றின் தொகுதியோடு கூடிய வானமே முகமாக, அவ் வானத்தில் இயங்கிய கதிரவன் மதியம் என்னும் இரு சுடர்களும் கண்ணாக, வேறு ஒளியின்றிப் பகலிலும் இருளிலும், முதலில் வீசிய காற்றும் இடையில் வீசுதலில்லாத, போக்கு வரவு அற்ற கடற்பரப்பிலும் கடந்து' என்பது அத் தொடரின் பொருள். மயங்கு - கலந்த. இரு கருவிய - பெரிய தொகுதியையுடைய; கருவி - தொகுதி; மின் இடி முதலியவற்றின் தொகுதி. கண் என - கண்ணாக. பெயரிய - பெயர்ந்த; அசைந்த: வீசிய என்னும் பொருட்டு. கடலில் காற்றில்லாத இடங்களை நினைந்து 'வளி இடை வழங்கா நீத்தம்' எனப்பட்டது. வழக்கு - மக்கள் நடமாட்டம்; அரு - அரிய; இல்லாத. 'வயிரக் குறட்டின் வயங்கு மணி ஆரத்து முன்னோர்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். வயிரக் குறட்டின் - வயிரத்தால் அமைந்த திரண்ட தாரினையுடைய வயங்கும் மணி ஆரத்து - விளங்கும் மணிகளாலாகிய மாலையையுடைய. முன்னோர் என்றது, அரசர்களாகிய முன்னோர்களை 'பொன்னந் திகிரி' என்றது, ஆட்சிச் சக்கரம். முன் சமத்து - தமது நினைவின்முன் தோன்றும் போராட்டங்களில் உருட்டி - செலுத்தி. பொருநர் - பகைவரை; தம்மை எதிர்க்கும் பகைவர்களை. செரு மிகு - போர்க்கொள்கை மிக்க. முன்பின் - வலியையுடைய. ஆரத்தையும் வலியையும் உடைய முன்னோர் என்பது. செல்லவும் - இறந்து மறைந்து போகவும். விலை நலப் பெண்டிரின் - பரத்தையரைப்போல. மீக் கூற - மேம்பாடாகப் புகழ. வாழி, அர், அசை. 'விலை மகளிர், மக்கள் பலரைத் தம்மிடம் ஈர்த்து அழித்தும் மேலும் காமுகர் பலரால் புகழப்படுதலைப்போல யானும் பலர் என்னுள் மாய இன்னும் பலர் புகழ உள்ளேன்' என்று நிலமகள் சொல்லி யழுதலாக இங்கே வந்தது. பன்மாண் - பலகாலும். காஞ்சியும் - நிலையாமையும்; நிலையாமையுணர்வும். உணர்ந்திசினோர் - உணர்ந்தோர். ஆல் - அசை. (எஉ)

## மெய்ம்மை

[மெய்ம்மை எப்போதும் பெருகப் பரவும் ஆற்றலுடையது. இயல்பாக எவரும் அறியாத நிலையில் அது நிகழ்வதாயினும், அவ்வாறே எவரும் பரவ வைக்காத நிலையிலேயே அது பெருகிப் பரவுகின்றது.]

மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள்தவச் சிலவே; அலரே,
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே.

—குறுந்தொகை, ௩௯௩.

உண்மை நிகழ்ச்சிகள் எப்போதும் பிறர் ஆரவாரத்துக்காக நிகழ்வன அல்ல; பிறர்க்குத் தெரியலாகாத நிலையில் தாமே நிகழ்தல் மெய்ந்நிகழ்ச்சிகளின் இயல்பாயிருக்கின்றது. ஆனால் அப்படி இரண்டாயபேருக்குத் தெரியாமல் நிகழ்வதுதான், எப்படியோ பலர் உள்ளத்திலும் பாய்ந்து பரவிப் பெரிய ஆரவாரத்தை உண்டாக்கி விடுகின்றது. உலகில் நல்லது என்பது இப்படித்தான்; கெட்டதும் இப்படித்தான்.

காதலரின் மெய்யன்பு எவருமே அறியாத நிலையிலேயே, அரும்பி மலர்கின்றது: அவர் சந்திப்புச் சிறிதளவு நிகழ்ந்தாலும் போதும் உலகிற் பெரிய அலர் உண்டாய் விடுகின்றது. ஆற்றல் வாய்ந்த மெய்ந்நிகழ்ச்சிகள் சுருங்கவே நிகழ்கின்றன; ஆனால், அந் நிகழ்ச்சிகட்கே உலகத்திற் பரவுதலாற்றல் மிகுதியாகின்றன.

தலைவன், பக்கத்தில் வந்திருக்கின்றான் என்பது தோழிக்குத் தெரியும். விரைவில் மணஞ்செய்துகொள்ள அவன் முயலவேண்டும் என்பது தோழியின் கருத்து. அவள் தலைவியை நோக்கிப் பின் வருவன சொல்கின்றாள்:

"உன் மாலை குழையும்படி தலைவன் முயங்கிய நாட்கள் சிலவே; ஆனால், வெளியார் அலரோ, வாகை என்னும் ஊரின் போர்க்களத்திற் பசும்பூட் பாண்டியனது ஏவலாற் படையெடுத்து வந்த அதிகன் என்பவன் தனது யானையோடு தோற்றுக் கொலையுண்டபோது, வெற்றியுற்ற கொங்கர்கள் ஆரவாரித்த ஆரவாரத்தினும் பெரியதாயிருக்கின்றது."

தலைவன் விரைவில் மணந்துகொண்டால் இந்தத் தொல்லை இல்லையே என்று அவள் சுட்டிச் சொல்லியபடியாகும. ஆசிரியர் ஒரு வரலாற்று நிகழ்ச்சியை இச்செய்யுளில் உவமமாக இணைத்திருக்கின்றார். பெண்கள், நேர்ந்த நேரங்களிலெல்லாம் இவ்வாறு போர்ச் செய்திகளைப்பற்றி அக்காலத்திற் பேசிக்கொள்வது வழக்கமாயிருந்திருக்கின்றது. இக் காலத்தில், போரைப்பற்றியே மக்கள் பெரும்பாலார் செய்தி தெரிநதுகொள்ளாமல் இருக்கின்றார்களே !

**குறிப்புரை:** மயங்கு மலர்க் கோதை - கலந்து கட்டிய மலர்களையுடைய மாலையானது. மகிழ்நன் - தலைவன் முயங்கிய - இறுகத் தழுவிய. தவச சிலவே - மிகச சிலவே. அலரே - புறச சொற்களோ; புறத்தார் பலரும் அதனை அறிந்து பேசிக்கொள்ளும் பேசசுக்களோ என்றபடி. கூகைக் கோழி - கூகையாகிய கோழி கூவுகின்ற; கூகை - கோட்டான். வாகைப் பறந்தலை - வாகை என்னும ஊரைச் சேர்ந்த போர்க்களத்தில். பசும் பூண் - பசுமையான அணிகலன் அணிநத. பாண்டியன் - பாண்டியனைச் சேர்ந்த. வினை வல் - ஏவலில் வல்ல; பாண்டியனது அலுவலில் வல்ல என்றபடி. அதிகன், இவன் பாண்டியனிடம் அலுவலிலிருந்தவன். பட்ட ஞான்றை - தோற்றுக் கொலையுண்டபோது. ஒளிறு வாட் கொங்கர் - விளங்கிய வாட்படையையுடைய கொங்கர் என்போர் பலர். ஆர்ப்பினும் - தம் வெற்றியினால் செய்த ஆரவாரத்தை விட. 'மகிழ்நன் முயங்கிய நாள் மிகச சில; அலரோ கொங்கர் ஆர்ப்பினும் பெரிது' என்று சொன்னபடி. (எச)

### பகை யடக்குங் கருவி

[ஈர நெஞ்சததைப் பெருக்கிக்கொள்வதே பிறவியின் நோக்கம். அதற்கு, மக்கள் பகையின்றி இருக்கவேண்டும். பகை யடக்

குங் கருவி படையன்று, செல்வம்; ஆதலாற் செல்வ முடைமை பகையற்ற நிலையைத் தந்து வாழ்க்கை நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளக் கருவியாகுமென்று முன்னோர் தெளிந்திருந்தனர்.

நச்சியார்க் கீதலும் நண்ணார்த் தெறுதலும்
தற்செய்வான் சென்றார்த் தரூஉம் தளரியலாய்
பொச்சாப் பிலாத புகழ்வேள்வித் தீப்போல
எச்சாரும் மின்னும் மழை.

—கார் நாற்பது, எ.

வாழ்க்கையில் முதன்மையான நோக்கம் ஆருயிர்த் தொண்டு. தம்மை விரும்பி அடைந்தவர்களுக்கு வேண்டுவன உதவுதலால், ஆருயிர்த்தொண்டு செவ்வனே நடைபெறும்; தேவையுள்ளவர்களுக்கு உதவி செய்ததாய்ப் பயன்படும்

இந்த நல்ல தொண்டு தகுதியாக நடைபெறுவதற்கு எவராலும் தடையிருத்தல் ஆகாது. பகைவர்களால் இடையூறுகள் இல்லாமலிருக்க வேண்டுமானால், உலகத்தில் அவரவரும் செல்வாக்குடையவராய் நிலையுயர்ந்து விளங்க வேண்டும்.

இங்ஙனம் ஒருவன் பயன்பட வாழ்வதே தன்னை நல்ல நிலையில் முன்னேற்றிக்கொண்டு வாழ்வதாக முடியும்.

தன்னை நச்சும் அன்பர்களுக்கு உதவுதலும், தன்னை நண்ணாத பகைவர்களை அடக்குதலுமாகிய இந்த இரு நிலைகளும் வேண்டுமானால் அதற்குச் செல்வம் வேண்டும்.

'பகையடக்குங் கருவி படையன்று, செல்வமே' என்பதைப் பண்டைத் தமிழர் நன்கு அறிந்திருந்தனர் தம் மனமமர்ந்த இளங் காதலிமாரைப் பிரிந்தும் அயல் நாடு சென்று நலம் பல புரிந்து, அதனாற் செல்வம் உண்டாகித் தமது நிலையை முன்னேற்றமுறச் செய்துகொண்டனர். இங்ஙனம் தற்செய்த பெரியோர் அக் காலத்தவர்.

ஓர் இளங் காதலி, இத்தகைய நல்ல நோக்கத்தோடு பொருள் காரணமாகப் பிரிந்து சென்ற தன் தலைவனை நினைந்து ஆற்றாது வருந்துகின்றனள். அவள் தோழி, 'கார்ப்பருவமும் வந்துவிட்டது; வெள்ளித் தீப் போல எப் பக்கமும் மேகம் மின்னுகின்றது; இம் மழை நம் தலைவனை இல்லத்திற்குக் கொண்டுவந்து விடும்' என்று சொல்லி அவளுக்கு ஆறுதலுரைப்பதாக இச் செய்யுள் அமைந்துள்ளது. உடைமையே, செல்வத்தின் பயன் இன்னதென்பதையும் இது நன்கு விளங்க வைத்துள்ளது.

இங்ஙனம் தகுதியாக வாழ்வோரே தற்செய்வோராவார், பிறரெல்லாம் யாரோ!

**குறிப்புரை :** நச்சியார்க்கு - விரும்பி அடைந்தவர்க்கு. நண்ணார்த் தெறுதலும் - பகைவரை அடக்குதலுமாக. தற்செய்வான் - தம்மை முன்னேற்றிக்கொள்ளும் பொருட்டு. சென்றோர்த் தரூஉம் - பிரிந்து சென்றவரைக் கொண்டு வரும். 'மழை தரூஉம்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். தளர் இயலாய் - வாட்டத்தால் தளர்ந்த இயல்பினையுடைய பெண்ணே! பொச்சாப்பு இலாத - மறவாமற் செய்தற்குரிய. புகழ் - புகழ் தக்க. எச் சாரும் - எப் பக்கமும். மின்னும் - மின்னுகின்ற. மழை - மேகம். (எ௫)

## 8. சமம்

### நேய வாழ்க்கை

[அன்புள்ள இடம் இன்பம் ஊற்றெடுக்கும் இடம். கள்ளங் கவடற்ற குழந்தை யுள்ளமாய் மாறி அன்பர்கள் நேய வாழ்க்கையில் ஒன்றுபடுகின்றனர். பின்பு, அவர்களிடம் உயர்வு தாழ்வுகள் தோன்றுவதில்லை. அருள் நிலையில் உயர்ந்து செல்கின்றனர்.]

யாரொடும் கொள்ளா, பொழுதொடும் புணரா,
பொருள் அறி வாரா ஆயினும், தந்தையர்க்கு
அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை;
என்வாய்ச் சொல்லும் அன்ன; ஒன்னார்

கடிமதில் அரண்பல கடந்த
நெடுமான் அஞ்சி! நீ அருளன் மாறே.

—புறநானூறு, ௯௨.

இயல்பில் அன்புடைய உள்ளம் களங்கமற்றுப் பளிங்குபோல் இருக்கின்றது. அந்த உள்ளத்திலிருந்து தோன்றும் சொற்கள் எப்படிப்பட்டவையாயினும், அவை பலரையும் வயமாக்கி இன்பம் பயக்கின்றன. முகமன் உரைகளும் இங்ஙனமே அன்புள்ளத்தில் அரும்பும் மலர்களேயாம்: பொய்யுரைகளல்ல முகமனுரைகள்.

எவ்வளவு வயதேறியவர்களாயினும் அவர்கள் உள்ளத்தில் அன்பு வெள்ளம் ஊற்றெடுத்துவிட்டால், அந்த உள்ளம் உடனே கவடற்ற உள்ளமாய், இனிய உள்ளமாய், குழந்தை யுள்ளமாய், இளகி விளக்கங் கொள்கின்றது. அவர்கள் உடனே குழந்தைகளைப்போலவே நடந்துகொள்கின்றனர். தமக்குத் தாழ்ந்தவர்களிடத்திலும் அன்புரிமை கொண்டு தாழ்ந்தொழுகுகின்றனர். தமக்கு வேறானவரிடத்திலும், இயற்கை யுரிமை உடையவர்கள்போல அணுக்கங் கொள்கின்றனர். நினைவு இங்ஙனம் ஒருமைப்பட்டு, மொழிகள் பணிவுடையனவாய்ச் செயல்கள் உரிமை மேவி, ஒன்றாய் விடுகின்றனர். இந்நிலையில், அவர்கள் சொற்கள் சில வேளைகளில், உரிமை மிகுதியால் மேலுக்கு இனிமை யில்லாமலும் காலங் கருதாமலும் பொருள் பொருந்தாமலும் இருக்குமாயினும், ஒருவர்மேல் ஒருவருக்கு அன்பு மிகவும் முதிர்ந்திருத்தலால், அது, உடனே அருளாகத் தோன்றி அவற்றைப் பொறுத்துக்கொள்ளும். இங்ஙனம் ஒருவரையொருவர் உயர்வு தாழ்வு கருதாமல் அன்பால் உருகி நேயவாழ்க்கை வாழ்தலை விட உலகத்தில் இனியது என்ன இருக்கின்றது!

ஔவையாரும் அதியமான் நெடுமானஞ்சியும் இத்தகைய அழகிய கெழுதகைமை கொண்டு அன்பினால் அளவளாவி மகிழ்ந்திருந்த மேன்மை, இந்தப் பாட்டிற் கனிந்து வழிகின்றது. இதன் பொருள்:

"குழந்தைகளின் மழலை மொழிகள் யாழிசைபோல் இனிமை கொள்ளாமல், காலத்தொடுங் கூடாமல், பொரு ளும் பொருந்தாதனவாலும், தந்தைமார்க்கு அவை அருள் கொள்ளும்படி இருந்தன; பகைவர்களுடைய காவல் பொருந்திய மதில் சூழ்ந்த அரண்கள் பலவற்றை எதிர்த்து வென்ற ஆண்மை சான்ற நெடுமான் அஞ்சி! நீ அவ்வப்போதும அருள் கொள்ளுதலால் என் வாய்ச் சொல்லும் அத்தகையனவாய் இருக்கின்றன"

ஔவையார உள்ளபடியே ஒரு குழந்தையைப் போலவே பேசியிருக்கின்றார். இவை எவ்வளவு விலை மதிக்கத்தக்க அன்பின் திவலை மணிகள்!

குறிப்புரை: யாழொடும் - யாழிசையோடும். கொள்ளா - கொள்ளாதனவாய். புணரா - புணராதனவாய். அறிவாரா என்றது இங்கே பொருந்தாதன என்னும் பொருட்டு. அருள் வந்தன - அருள் கொள்ள இருந்தன. ஆல், அசை. புதல்வர்தம் மழலை மொழிகள் அருள் வந்தன; ஒன்னார் - பகைவர். கடி - காவல். கடந்த - வென்ற. நெடுமானஞ்சி - நெடுமானஞ்சியே! அருளன் மாறு - அருளும் வகையினால்; அருளுதலால். (எசு)

## சாயலும் உரனும்

[உலகியற்கை ஒரே தன்மையாக இல்லாமல, எங்கும் மென்மையும் வன்மையுமாக வேறுபட்டுள்ளன. இவ்வியல்பு, அவை தம் முள் இணக்கமும் அவ் விணக்கத்தால் விளக்கமும் உறு தற்கேயாம். வன்மையின் வீறு அவ் விணக்கத்துக்குக் காரணம், பின்னர், சாயலோடு இயைந்து ஒன்றுபடும்.]

மால்வரை இழிதரும் தூவெள் அருவி
கன்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரல்
சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்
நீரோ ரன்ன சாயல்
தீயோ ரன்னஎன் உரன்அவித் தன்றே.

—குறுந்தொகை, கூ௫.

நீரின் இயல்புக்கும தீயின் இயல்புக்கும் இச் செய்யு ளில் நல்ல விருந்து கிடைத்திருக்கின்றது. விருந்திட்டவர்

கபிலர்! நீரையும் தீயையும் போன்றவற்றைத் தம் அறிவாகிய குடில்களுக்கு வருவித்து, தம் வல்லமைக்கேற்றபடி புதுக் கருத்துக்களாகிய உணவாக்கி விருந்துபடைத்து மாட்சி செய்வதற்கு, புலவர் பெருமக்களுக்கே வாய்ப்பிருக்கின்றது!

நீரின் இயல்பு தண்மை, தீயின் இயல்பு வெம்மை. கபிலர் இவற்றிற்குப் புது மெருகு தந்து, நீரின் இயல்பு சாயல், தீயின் இயல்பு ஆற்றல் என்று உரைத்துக்கொண்டார். சாயல் மென்மை எனவும், ஆற்றல் வன்மை எனவும் கூறப்படும். தண்மையை ஒத்த தலைவியின் சாயல், வெம்மையை ஒத்த தலைவனின் ஆற்றலை அவித்துத் தானே ஆட்சிகொண்டது என்பது இச் செய்யுளின் முடிபொருள். ஆதலால், மென்மை வன்மையின் இணக்கமும் அவற்றின் வெற்றி வீறுகளும் இங்கே கருதுதற்குரியன.

தன்மேல் வீறி எதிர்ப்பட்டது எதுவாயினும் அதனைத் தனது தண்மையால் வீறு அவித்துத் தன்னுட் படியச் செய்வது நீரின் இயல்பு, இவ்வியல்பினையே சாயல் என்பர். இனி, தன்னை எதிர்ப்பட்டது எதுவாயினும் அதனைத் தனது வெம்மையால் எதிர்த்தழித்துத் தன் வண்ணமாக்கிக்கொள்ளுதல் அழலின் இயல்பு; இவ் வியல்பினையே ஆற்றல் என்பர். இத்தகைய மென்மை வெற்றியும் ஆற்றல் வீறும் ஒன்றுக்கொன்று தம்முள் எதிர்ப்படின், அவை எவ்வாறு முடியும் என்னும் நுண்ணிய உண்மையையே இச் செய்யுளின் இறுதியடிகள் புலப்படுத்துகின்றன. அதாவது, அவை தம்முள் இணக்கம் பெற்றுவிடும் என்பது கருத்து.

சாயல், என்றும் ஒரு தன்மையாயிருப்பது: வீறு அங்ஙனமன்று; உரிய காலங்களில் வீறி நின்று, பொதுவாக மற்றக் காலங்களில், அமைந்து நிற்பது. சிறப்புக் காலங்களில் வீறுதலென்பது சாயலோடு இணக்கம் பெறுவதற்கேற்ற உரனை அடைதலேயாகும். இணக்கம் பெற்றபின் அவ் வுரன் அவிந்து பொதுநிலையில் ஓரளவாய் ஒன்று

பட்டு விடும். நுண்ணிய இவ் வியல்பினையே, 'நீரோரன்ன சாயல் தீயோரன்ன என் உரன் அவித்தன்று' எனக் கபிலர் முடித்து விளக்கினார்.

தலைவியைக் கண்டு உரன் அவிந்து இணங்கி வந்த தலைவனைப் பாங்கன் நிலை வினவியபோது அவனுக்குத் தலைவன் அளித்த விடை இது. இயற்கையின் ஆற்றல் இங்ஙனமாயின், அதற்குத் தலைவன் செய்வது என்ன இருக்கின்றது?

**குறிப்புரை :** மால் வரை - பெரிய மலையினில் இழிதரும் - ஒழுகி வருகின்ற. தூ வெள் - தூய வெண்ணிறமான. கல் முகை - பாறையின் வெடிப்புக்களில். ததும்பும் - ஒலிக்கின்ற. பல் மலர்ச சாரல் - பல மலர்களால் விளங்குகின்ற மலைப் பக்கத்தைச் சார்ந்த. சிறுகுடி - சிற்றூரில் உள்ள. நீர் ஓர் அன்ன - நீரோடு ஒரு தன்மையான ; அதாவது நீரைப் போன்ற ; நீரின் இயல்பைப் போன்ற என்பது. சாயல் - மென்மையானது. உரன் - ஆற்றலை. அவித்தன்று - அவித்தது ; அவித்துத் தான் வென்றது. தலைவியின் நீரன்ன சாயலுக்கு ஏற்ப அருவி நீரின் வளமும், தலைவியைக் கண்டு கலந்த மலர்ந்த மண நிகழ்சசிககு ஏற்பப் பன்மலர்ச் சாரலின் இடமும் தலைவனால் உணர்த்தப் பட்டன. (எஎ)

## கடவுட் குணம்

[அருட் குணமே கடவுட் குணம் ; வேற்றுமை கருதாத இயல்பென்றும் அதனைக் கூறலாம். கடவுள் வழிபாடென்பது, அவன் குணங்களைப் பின்பற்றுதலே. அங்ஙனம் பின்பற்றுவோர், கடவுட்குண முடையோர் எனப்படுவர் பாரி அத்தகையோன் என்கின்றார் கபிலர்.]

நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்க மாயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ; ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே.

—புறநானூறு, க0சு.

கடவுளைப் பலரும வழிபடுகின்றனர். வழிபாடென்பதன் உண்மைக் கருத்து, பின்பற்றுதல் என்பது. இறைவன் குணங்களும் செயல்களும் செல்லும் வழி, வழிபடுவோர் குணஞ் செயல்களும் செல்லுமாயின் வழிபாட்டினாற் பயனுண்டு

பலரும் விரும்புகின்றனர். ஆனாற், கடைப்பிடித்தல் அருமையாயிருக்கின்றது. கடவுளின் ஓர் இயல்பு இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றது.

சூடும பூக்களிலேயே நல்லனவும் தீயனவும் உண்டு. இவை யிரண்டுமல்லாத சூடாத பூ எருக்கம் பூ. அவ்வெருக்கம பூவேயாயினும், தனக்குப படைப்பாக உடையவற்றைக் கடவுளானவர், விரும்பேம் என்று ஒதுக்கிவிடமாட்டார் சூடும் பூக்களை விரும்பி யணிதல் போலவே, அச் சூடாப் பூவினையும் விரும்பி ஏற்றுக்கொள்வர்.

கடவுளிடத்துக் காணபபடும் இவ் வியல்பினை யார் பின்பற்றினும பின்பற்றாவிட்டாலும் பாரிவேள் பின்பற்றுதலுடையன் என்று கபிலர் எடுத்துக் காட்டுகின்றார். இதனாற் பாரிவேள் கடவுட்குணம் உடையவன் என்பது தெளிவாகின்றது.

தக்கோர் செல்லுதலே யன்றித் தகாதோரான அறிவில்லாதவரும் புல்லிய குணங்களுடையாரும செல்லினும், பாரி அவர்களை விரும்பி ஏற்றுக் கைவணமை செய்யுங் கடப்பாடுடையவன் என்பது அவர் பரிந்துரைக்கும் சொல்.

வேற்றுமை காண்பது, அறிவின் முனைப்பினால் நிகழ்வது. அருட்குணம் எழுகின்றபோது, அதன்முன் வேற்றுமை யியல்பு தோன்றாது.

**குறிப்புரை :** அல்ல - அல்லாதனவான. குவி இணர்ப் புல் இலை எருக்கமாயினும் - குவிந்த பூங் கொத்துக்களையும் புல்லிய இலைகளையுமுடைய எருக்கஞ் செடியின் மலராயினும். புல்லிலை என்றார், பெருமையில்லாத இலை என்றற்கு ; தாழ்வாகக்

கருதப்படும் இலை என்பது பொருள். உடையவை - தனக்குப் படைக்கப்பட்ட பொருள்களாக உடையவை. என்னுவாங்கு - என்னுமைப் போல. மடவர் - அறிவிலோர். மெல்லியர் - புல்லியர். பாரி கைவண்மை கடவன் - பாரிவேள் கைவண்மை செய்தலாகிய கடப்பாடுடையன். கைவண்மை என்பது உதவி என்னுங் கருத்தில் வந்தது (எஅ)

## இணக்கமும் இன்பமும்

[இன்பம் உலகத்தில் இணக்கத்திலிருந்து வெளிப்படுகின்றது. உயிர்களாயினும் பொருள்களாயினும் அவை வன்மை மென்மையும் அதன் இணக்கமும் உடையதாயிருக்கின்றது. இன்பத்தின் அடிப்படை இதுவாதல் அறிந்து மக்கள் இணக்கத்தின் ஆற்றல் அறிந்து நடந்துகொள்ளுதற்குரியர்.]

கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்
குவவுமென் முலையள் கொடிக்கூந் தலளே,
யாங்குமறந் தமைகோ யானே; ஞாங்கர்க்
கடுஞ்சுரை நல்லான் நடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பின் அன்ன
சாஅய்நோக் கினளே மாஅ யோளே.

—குறுந்தொகை, ௬௩௨.

எல்லாவற்றிற்கும் அடிப்படையான ஓர் உண்மை இயற்கையில் தேங்கித் தெரிகின்றது அதுதான் இணக்கம் என்பது உயிர்களிலாயினும் பொருள்களிலாயினும் எங்கும் வன்மை மென்மை காணப்படுகின்றன. அவை ஒன்றையொன்று அவாவி இணங்குதலுடையன. அந்த இணக்கத்திலிருந்துதான் முதன்மையான இன்பம் பிறக்கின்றது

இயற்கையின் இம்மறைபொருளை உலகத்தில் எங்குங் காணலாம். ஓர் இனிய அருவியில் இன்பந் தோன்றுகின்றதென்றால், மேடு பள்ளங்களில் நீர் இணைந்தமைந்து செல்லும் இணக்கத் தன்மையிலிருந்தே அது தோன்றுகின்றதென்று அறிதல் வேண்டும். ஆணும் பெண்ணும்

மான காதலரிடந் தோன்றுங் கவர்ச்சி, அவர்களுடைய வன்மை மென்மைப் பண்புகளின் இசைவிலிருந்தே ஊற்றெடுக்கின்றது. கன்றுந் தாயும் இணைந்தநிலையிலிருந்து எத்துணை இன்பம் முகிழ்த்தெழுகின்றது !

இந்நிலையினை உற்று நினைவோர் இணக்கத்தின் பேராற்றலையும் பெரும் பயனையும் அறிந்து இணக்கத்தையே வாழ்வின் அடிப்படையாகக் கொண்டு ஒழுகி நலனுறுவர்.

தலைவியொருத்தி, கன்று தன் தாயைக்காணும் விருப்பத்தைப்போலத் தலைவனைக் காண்டலில் விருப்பங்கொண்டு பார்த்தலும், அதனால் அப் பார்வைக்கு ஒரு கவர்ச்சியும் மென்மையும் உண்டாதலும், உண்டான அப் பார்வையில் தலைவனும் தானே ஈர்ப்புண்டு இணங்கி இன்புறுதலும், இங்ஙனம் இணக்கத்தால் இன்பங் காண்பது மிக்க ஆற்றலும் பிணிப்புமுடையதாயிருத்தலின் அதிலிருந்து விடுவித்துக் கொள்ளல் இயலாமையாய் இருத்தலும் இச் செய்யுளில் நன்றாக எடுத்துக் காட்டப்படுகின்றன. தன்னைக் கடிந்த பாங்கனுக்குத் தலைவன் இவ் வியல்புகளைக் கூறி இணக்கத்தின் இயலாற்றலைப் புலப்படுத்துகின்றான்.

இயற்கை நமக்குணர்த்தும் மறைபொருள் நுட்பங்கள் அளவில்லாதனவாய் இருக்கின்றன.

**குறிப்புரை**: கவவு - தழுவுதலில். கடுங் குரையள் - கடுமையள்; விரைவு உடையவள் என்பது பொருள்; கடுமை என்பது இங்கே விரைவு என்னும் பொருட்டு. கடுமை குரை அள் - கடுங் குரையள்; இவற்றில் 'குரை' என்பது அசை; அதற்குப் பொருளில்லை. காமர் - விருப்பந் தரத்தக்க. குவவு - திரட்சியை யுடைய. கொடிக் கூந்தலள் - கொடிபோல நீண்ட கூந்தலை யுடையவள். யாங்கு - எங்ஙனம்? மறந்து அமைகோ-மறந்து அமைவேன்? ஞாங்கர் - பக்கத்தில்; பக்கத்தில் மேயச் சென்ற. கடு சுரை நல் ஆன் - மிக்க சுரப்பினையுடைய நல்ல ஆவினது. நடுங்குதலைக் குழவி - நடுங்குகின்ற தலையையுடைய கன்று; அவ்வளவு பச்சிளங் கன்று என்பதற்கு இங்ஙனங் கூறினர். தாய் காண் விருப்பின் அன்ன - தனது தாயைக் காணும்பொருட்டுக் கொள்ளும் விருப்பத்தைப் போன்ற. சாய் நோக்கினள் மாயோள்-

பசலை நிறங் கொண்ட அந் நங்கை மெல்லிய பார்வையினள். 'மாயோள், கவவுக் கடுங்குரையள், வனப்பினள், முலையள், கூந்தலள், குழவி தாய்காண் விருப்பினன்ன சாய்நோக்கினள் அத்தகையோளை யான் யாங்கு மறந்தமைகோ?' எனச் சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். (எக)

## ஆருயிர் நேயம்

[சோழ மன்னனாகிய குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்பவன், தனது நாட்டைச் சேர்ந்த சிறுகுடி கிழான் பண்ணன் என்பவனிடம் மிக்க அன்புடையவனாய் இருக்கின்றான். அதன் காரணம் இச் செய்யுளில் வருகின்றது. ஆருயிர் நேயம் யாரை வயஞ்செய்யாது?]

யான்வாழு நாளும் பண்ணன் வாழிய!
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை;
யாணர்ப் பழுமரம் புள்இமிழ்ந் தன்ன
ஊணொலி யரவந் தானுங் கேட்கும்;
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக் கையர் வீறுவீ றியங்கும்
இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும்; கண்டும்
மற்றும் மற்றும் வினவுதும் தெற்றெனப்,
பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ, சேய்த்தோ? கூறுமின் எமக்கே.

—புறநானூறு, கஎங.

சோழன் குளமுற்றகதுத் துஞ்சிய கிள்ளி வளவன், சோழநாட்டின் பெருமன்னன்; சிறந்த கொடையாளி; வீரன்; கோவூர்கிழார் முதலிய பெருமக்கள் பலரால் மனமகிழ்ந்து பாடும் பேறு பெற்றவன்; தானும் அழகாகச் செய்யுள் செய்தலில் வல்லன். இங்கே வந்திருக்குஞ் செய்யுள் இவன் இயற்றியதுதான்.

பெருமன்னனும் இத்தனை நற்பேறுகள் வாய்ந்த பெருமகனுமான இவன், சிறுகுடி கிழான் பண்ணன் என்னுந் தன் நாட்டு வாழ்வோன் ஒருவனை உள்ளங் கசிந்து பாடியிருக்கின்றான் என்றால், பண்ணன் என்பவனின் இயல்பு எவ்வளவு மேன்மையுடையதாக இருக்கவேண்டும்! அதுவும், 'யான் உயிர் வாழும் ஆயுளையும் பெற்றுப் பண்ணன் நீடு வாழ்வானாக' என்று வாழ்த்திக்கொண்டு பாடவேண்டுமானால், பண்ணன் இயல்பு கிள்ளிவளவன் உள்ளத்தை எவ்வளவு வயமாக்கி யிருக்கவேண்டும்! அது மட்டுமோ! சோழநாட்டுப் பெருமன்னனாகிய வளவன், கருவூரை முற்றுகை செய்து சேரனை வென்ற வளவன், தனது நாட்டில் வாழும் சிறுகுடி கிழானிடம் தான் பரிசில் பெறச் செல்வதுபோல் கருதிக்கொண்டு, தனக்கு எதிரில் அவனிடம் பரிசில் பெற்று வரும் பாணர்களை நோக்கிப் பண்ணன் இருப்பிடம் வினவுவதாக வைத்து இச்செய்யுளை இயற்றுவனென்றால, அப் பண்ணனிடம் இவன் வைத்திருந்த அன்பை என்னவென்று சொல்வது!

சிறுகுடி கிழான் பண்ணனிடம என்ன இவ்வளவு பெருமைக்குரிய தகுதி இருந்தது? அது, கிள்ளி வளவன் கூறும உருக்க மொழிகளினாலேயே விளங்குகின்றது. அது வருமாறு:

"யான் உயிர் வாழும ஆயுள் நாட்களையும பெற்று பண்ணன் நீடு வாழ்க! பாணர்களே! இப் பரிசிலனுக் குரிய சுற்றத்தவர்களின் வறுமைத் துயரைப் பாருங்கள். பழங்கள் பழுத்திருக்கின்ற மரங்களில் பறவைகள் கூடி ஒலித்தாற்போல, அதோ பண்ணனிடத்தில் உணவு பெறுகின்ற காரணமாக உண்டாகும ஏழைகளின் கூச்சலாகிய ஆரவாரம் கேட்கின்றது. மேலும், மழை பெய்யுங் காலத்தைக் கண்டு வெண்ணிறமான முட்டைகளை எடுத்துக்கொண்டு மேட்டு நிலத்தை அடையும் சிறிய எறும்புகளின் ஒழுங்கைப்போல, வெண்ணிறமான சோற்றுருண்டையைக் கையில் உடையவர்களாய் வேறு வேறு முகமாகத் தம்முடைய மிக்க சுற்றத்தார்களுடன் வரிசை

யாகப் பண்ணன் இருப்பிடத்திலிருந்து அந்த ஏழைகள் செல்வதையும் பார்க்கின்றனம். இங்ஙனம் நேரிற் பார்த்தும் பசிப்பிணிக்கு மருத்துவனை அப் பண்ணனின் இல்லத்தை விரைந்து அடையவேண்டுமென்னுங் கருத்தால் மீண்டும் மீண்டும் அது அண்மையிலுள்ளதோ தொலைவில் உள்ளதோ எமக்குச் சொல்லுங்கள் என்று உங்களை யாம் கேட்கின்றேம்!''

பசிப் பிணிக்கு மருத்துவனாய் அருளோடு இங்ஙனம் ஏழைகளுக்கு இடைவிடாது உதவுங் கொடைப் பண்பே சிறுகுடி கிழான் பண்ணனது பெருமைக்கெல்லாம் காரணம் என்று தெரிகின்றது! ஆருயிர் நேயத்தினும் பெருந் தகுதி உலகத்தில் வேறு என்ன இருக்கின்றது?

குறிப்புரை : நாளும் - வாழ் நாளும்; வாழ் நாளும் பெற்று என்று கொள்ளவேண்டும். காண்க இவன் என்று பிரித்துக் கொள்க. இவண - இப் பரிசிலேனுக்குரிய; இவ்வாறு அரசன் தன்னையே கூறியபடி. கடும்பினது - சுற்றத்தினது. யாணர் - புதிய வருவாயினையுடைய; என்றது, புதியவாகப் பழுத்த பழங்களாகிய வருவாய். பழுமரம் - பழுத்த மரங்களில். இமிழ்ந்தன்ன - ஒலித்தாற் போன்ற. பொய்யா எழிலி பெய்வு இடம் - காலந் தப்பாத மழை பெய்தலையுடைய நேரத்தை; இடம் என்றது இங்கே நேரம் என்னும் கருத்தில் வந்தது. வல் புலம் - வலிய மேட்டு நிலம். சிறு நுண் - மிகச சிறிய. சில் ஒழுக்கு ஏய்ப்ப - சில ஒழுங்குகளை ஒப்ப. கையர் - கையராய். வீறு வீறு இயங்கும் - வேறு வேறு முகமாகச் செல்லும். இரு கிளை - மிக்க சுற்றத்தாரோடு கூடிய. காண்டும் - காண்கின்றனம். மற்றும் மற்றும் - பின்னும் பின்னும். தெற்றென - விரைவு தோன்ற. 'தெற்றென வினவுதும இல்லம்; அது அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (அ0)

## சமநிலை யுள்ளம்

[தெளிந்த உணர்வு சமநிலைத் தன்மை யுடையது. அத் தன்மை யுடையோர் செயல்கள், கடமைச் செயல்களாய் நிகழ்வன. எத்தகைய உலகியல் அலைகளிலும் இவ்வுள்ளம் தன் சமநிலை இழவாமற் பணிபுரிய வல்லது. இவ் வுள்ளம் படைத்த அரச

முனிவர் பலர் பண்டு விளங்கியிருந்தனர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அத்தகைய மேம்பாட்டாளருள் ஒருவன்.]

கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்தளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல், வாழ்கஅவன் கண்ணி! தார்பூண்டு
தாலி களைந்தன்றும் இலனே, பால்விட்டு
அயினியும் இன்றயின் றனனே, வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே; அவரை
அழுந்தப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர அட்டதை [இலனே.
மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினும்

—புறநானூறு, எஎ.

இடைக்குன்றூர் கிழார் என்னும் புலவர் சிறந்த சான்றோராய் விளங்குகின்றனர். பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் அத்தகையனென்று தெரிகின்றது.

தலையாலங் கானத்தில் எழுவர் மாற்றரசர் தன்மேல் படையெடுத்து வந்தோரைப் பாண்டியன் நெடுஞ்செழியன் தான் ஒருவனாகவே களத்தில் எதிர்த்துத் தோல்வியுறச் செய்தான். அப்போது அவன் மிகவும் இளைஞன்.

இளமையிலேயே சிலர்க்கு அருஞ்செயல்கள் முகிழ்க்கின்றன. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழகத்தில் இங்ஙனம் இளமையில் அருஞ்செயல்கள் நிகழ்ந்ததுண்டு என்பதற்கு இச் செய்யுள்

சான்றாகும். இடைக்குன்றூர் கிழார் இச் செய்யுளில், பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாராட்டுதற்கு எடுத்துக் கொண்ட கருத்துத்தான் மிகவும் உள்ளமுருகத் தக்கதாய் மிளிர்கின்றது. இதனால், இச் செய்யுளைப் பாடிய இடைக் குன்றூர் கிழாரது பெருமையும், அவரால் பாடல் பெற்ற நெடுஞ்செழியனது அருமையும் தமிழிலக்கியத்தில் அழியா நிலைபெறு கொள்வனவாய் நன்கு விளக்கமாகின்றன. இடைக்குன்றூர் கிழார் கூறுவது இது:

"தன்மேற் சினந்து முறைமுறையாகப் படையெடுத்து வந்த புதிய வீரர்களை நெடுஞ்செழியன் மதிக்கவும் இல்லை, அவமதிக்கவும் இல்லை. அதைவிட, அவர்கள் அத்தனை பேரையும தான் ஒருவனாகவேயிருந்து இறுகப்பற்றி அழித்துவிட்டதற்கு மகிழவும் இல்லை; அதற்காகத் தன்னைப் பெருமையாக மிகுத்துக்கொண்டதும் இல்லை."

அவ்வளவு அழகான சமநிலை யுள்ளம உடையவனைப் பாண்டியன் நெடுஞ்செழியன் தன் கடமையொன்றையே தான் செய்ததாகக் கருதி விளங்கினான் என்பது இதிலிருந்து விளங்குகின்றது மிக்க பசிளம் பருவததில் இந்தச சமநிலை யுளளம் அந நெடுஞ்செழியனுக்கு இருந்த தென்றால், அவன் எத்தனை தெய்வத்தன்மை யுடையவனைத் தோற்றுகின்றான். என்ன வியப்பு!

"இப்பொழுதுதான் இவன் தன் குழந்தைப் பருவம் மாறிய பச்சிளஞ் சிறுவனைத் தோற்றுகின்றான் சதங்கை களையப்பட்ட காலில் ஒளரிய வீரக் கழலைத் தொடுத்துக் கொண்டு, குடுமி களைந்த தலையில் வேமபின் ஒள்ளிய தளிரை உழிஞைக் கொடியோடு செறித்துச் சூடி, சிறிய வளைகள் கழிதத கையில் வில்லை ஏநதியவனைப், தேர்த்தட் டிற் கைக்கு உதவியாக நிறுத்தபபட்டிருசகுந் தண்டைப் பிடிததுக்கொண்டு அதன்கண் அது பொலிவு பெறும்படி போர்க்களத்தில் நிற்கின்ற இவன் யாரோதான்! அவன் அடையாள மாலை வாழ்க! குழந்தைப் பருவம் கழிந்த பின் மார்பில் மலர்மாலை யணிந்து, ஐமபடைத் தாலி

என்னுங் குழந்தைப் பருவத்து அணிகலன் களைய வேண்டுவதும் இன்னுங் களைந்திலன். பாலே உண்டு கொண்டிருந்ததலை விடுத்து, உணவும் இப்போதுதான் உண்ணத் தொடங்கினன்" என்று இடைக்குன்றூர்கிழார் இச் செய்யுளின் முதல் எட்டு வரிகளில் நெடுஞ்செழியன் தலையாலங் கானத்துச் செருவில் மிக்க இளையோனைப் தோற்றிய காட்சியினை வியந்து வியந்து எடுத்தோதுகின்றார்.

இத்தகைய இளம் பருவத்திலேதான் அத்தகைய சமநிலைத் தெய்வவுள்ளம்! அவ் வுள்ளமுடையோரும் பண்டு உலகியல் அரசியல் போரியல் முதலியவற்றிற் கலந்து விளங்கினரென்றால், தமிழ்நாடு பெற்றிருந்த கடமையுள்ளத்தின இயல்பு எவ்வளவு சிறப்பாக விளங்கித் தெரிகின்றது. இங்ஙனம் அரச முனிவர் பலர் விளங்கிய காலம் பண்டைச் சங்க காலம்!

**குறிப்புரை** : கிண்கிணி - சதங்கை. தொட்டு - தொடுத்து, அணிந்து. குடுமி - பிள்ளைமைக் காலத்தில் இருந்த குடுமி. நுதல் - இங்கே, தலையின் முன்பக்கம் என்னும் பொருட்டு. வேம்பு - பாண்டியனுக்கு அடையாள மாலை. நெடுங் கொடி - நீண்ட கொடியாகிய. பவரொடு - கொடியோடு. மிலைந்து - சூடி. தொடி - பிள்ளைமைப் பருவத்தில் ஆண் குழந்தைகளும் முன்கையில் இட்டுக்கொள்ளும் வளை. சாபம் - வில். கொடுஞ்சி - தேர்த்தட்டின் முன்பக்கம் கையாற் பற்றிக்கொள்ளுதற்கு மலரோடு கூடிய தாமரைத் தண்டுபோல் நிறுத்திப் பொருத்தப் பட்டிருக்குங் கைப் பிடித் தண்டு. யார் கொல் - யாரோ. தாலி - ஐம்படைத் தாலி. பால் விட்டு - பாலே உண்ணுதலை விடுத்து. அயினியும் - சோறும். 'இன்று' என்றது அண்மைக் காலத்தைக் குறித்து நின்றது. அயின்றனனே - உண்ணத் தொடங்கினனே. வயின் வயின் - முறை முறையாக. உடன்று - சினந்து. வம்ப மள்ளரை - புதிய வீரரை. வியந்தன்றும் - வியந்ததும். இழிந்தன்றும் - இழித்ததும். அவரை - தன் மேற் படையெடுத்து வந்த அவ் வீரர் எழுவரையும். அகல் விசும்பு ஆர்ப்பு எழக் கவிழ்ந்து நிலம் சேர அட்டதை - அகன்ற வானத்தில் ஒலி எழும்படி உடலம் கவிழ்ந்து நிலத்திற் சாயக் கொன்றதை. மகிழ்ந்தன்றும் - மகிழ்ந்து கொண்டதும். மலிந்தன்றும் - தன்னை மிகுத்துக் கொண்டதும். (அக)

## புலவர் பொருட் செலவு

[புலவர்கள் பெருஞ் செலவாளிகள்; காரணம், பலர்க்கும் உதவியாளர்களாய் இருப்பதுதான். பிறர் நோய் தம் நோயாகக் காணபவர்கள் அவர்கள். பொருள கிடைத்தால் அவ்வப் போதே செலவழித்து விடுவாகள். எப்போதும் அவர்கட்குப் பொருள தேவையாகவே இருக்கும்.]

சுவல்அழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்இளைஞருமே,
அடிவருந்த நெடிதேறிய
கொடிமருங் குல் விறலியருமே
வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல்,
ஓடாப் பூட்கை உரவோர் மருக!
உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந!
மாயா உள்ளமொடு பரிசில் துன்னிக்
கனிபதம் பார்க்கும் காலை யன்றே;
ஈதலானுன் வேந்தே வேந்தற்குச்
சாதல் அஞ்சாய் நீயே; ஆயிடை,
இருநிலம் மிளிர்ந்திசி ஞாஅங் கொருநாள்
அருஞ்சமம் வருகுவ தாயின்,
வருந்தலும் உண்டென் பைதலங் கடும்பே.

—புறநானூறு. கசுகூ.

சிறந்த புலவர் பலர் அவ்வப்போதுங் கையிற் பொருளில்லாதவராய்ப் பொருள் முடையில் இருப்பது முன்னும் பின்னும் வழக்காய் இருந்து வருகின்றது. கையிற் பொருள் கிடைக்கும்போது இறுக்கிப் பிடிப்பது அவர்கட்கு வழக்கமில்லை பொருளைத் திரட்டிவைப்பதென்பது அவர்கள் நோக்கமுமன்று. மிக்க அருள் நெஞ்சமுடையோராய் அவர்கள் அவ்வப்போதே செலவழித்துப்

புண்ணியத்தைத் தேடிக்கொள்வதே அதற்குக் காரணம். வீண் செலவன்று. பலர்க்கும் உதவும் செலவுதான். தம்மைச் சூழ மகளிரும் ஆடவரும் வருந்துவது அவர்கட்கு உள்ளம் தாங்காது. அன்பும் இரக்கமுமே உருவானவர்கள் அவர்கள்.

நாஞ்சில் மலைக்குத் தலைவனை நாஞ்சில் வள்ளுவன் என்னும் ஈர நெஞ்சினனை அவ்வையார் மருதனிள நாகனார் என்னும் புலவர் பரிசில் விரும்பியபோது, இக் காரணத்தையே எடுத்துக் காட்டிப் பரிசில் வேண்டுகின்றார்.

"இளைஞரும் விறலியருமாக என்னைச் சூழ்ந்திருப்பார் பலரும் வருத்தமின்றி வாழவேண்டும். அதற்காக நான் உன்னிடம் பொய் கூறேன்; மெய்யே கூறுவேன். அவர்களுக்கு உதவுவதற்கு என்னிடம் ஒரு பொருளும் இல்லை" என்கின்றார்.

நாஞ்சில் வள்ளுவன் சேரமன்னனுக்குப் படைத்துணையாய் நின்று உதவுவோன். சேரனுக்காகச் சாதலும் அஞ்சாது போரிடுபவன். சேரனும் அவ் வருமையறிந்து, அவனுக்கு உதவுதலில், எவ்வளவு உதவினாலும் மனம் அமையாமல் மேலும் மேலும் உதவியபடியாய் இருப்பான். இருவர்க்கும் அவ்வளவு அணுக்கம் இருந்தது. சேரனுக்கு ஓர் இடுக்கண் என்றால், நாஞ்சில் வள்ளுவன் உடனே போருக்குப் புறப்பட்டு விடுவான். எதனையும் எதிர் பார்க்கமாட்டான். புலவர் இந் நிலையறிந்தவர். பின் வருமாறு மேலும் சில சொல்கின்றனர்.

"நாஞ்சில் தலைவ! நின்பால் பரிசிலுக்கு வந்து தங்கி நின் உள்ளம் நெகிழும் செவ்வி பார்த்துக் கேட்கும் நேரமாக இல்லை எனது நிலை, உண்மையைச் சொன்னேன். மேலும், நிலம் அதிர்ந்தாற்போல ஒரு நாள் உனக்குப் போர் வந்து நேருமானால், நீ வேறு எதனையுங் கவனிக்க மாட்டாய்; பசித் துன்பத்தையுடைய என் சுற்றங்கள் வருந்துதலும் நேரும்."

பண்டைக்காலத்தில் புலவர்கள் இங்ஙனம் பற்றற்ற மெய்ஞ்ஞானிகளாய் அவ்வப்போதும் ஈகையாளர்களாற் கிடைக்கும் பொருளை மக்கள் பலர்க்கும் உதவி அருளொழுக்கம் பூண்டு விளங்கினர். அத்தகையவர்களுக்கு நாடெல்லாம் உரிமைதானே நாஞ்சில் வள்ளுவனை மருதனிளநாகனார் எவ்வளவு கெழுதகைமையோடு இச் செய்யுளிற் கேட்கின்றார்!

குறிப்புரை: சுவல் அழுந்தப் பல காய சில் ஓதி - தோள் அழுந்தும்படி பல தட்டு முட்டுக்களைத் தோட்சுமையாய்த் தொங்கவிட்டுக் கொண்ட, சிலவான தலைமயிரையுடைய. கா - தோட்சுமை; இளைஞர்களுக்கு இங்ஙனம் அடைமொழி கூறினர். அடி - பாதம். நெடிது - நெடுநேரமாய். எறிய - வழி கடந்த. மருங்குல் - இடுப்பினையுடைய; விறலியர்க்கு இங்ஙனம் அடைமொழி வந்தது. கூறுவல் - கூறுவேன். ஓடாப் பூட்கை உரவோர் மருக - புறங்கொடாத மேற்கோளையுடைய வலியோர் மரபிலுள்ளவனே! சிமைய - உச்சியையுடைய. உழா - உழாமலே மரஞ் செடி கொடிகள் வளர்ந்து பயன் தருகின்ற. நாஞ்சில் பொருந - நாஞ்சில் மலையின் தலைவனே. மாயா - நினைவு மறவாத. பரிசில் துன்னி - பரிசிலுக்குத் தங்கி. கனி பதம் - மனம் நெகிழ் செவ்வியை. காலை யன்று - காலமன்று இது. ஈதல் ஆனுன் வேந்து - ஈதலில், அமையான் வேந்தன்; மேலும் கொடுத்தலை விரும்புவன் என்பது கருத்து. வேந்து - சேர வேந்தன். ஆயிடை - அந் நிலையில். இரு நிலம் - பெரிய நிலமானது. மிளிர்ந்திசினுங்கு - மிளிர்ந்தாற் போல; பனிசசென்று நிலைபிறழ்ந்தாற் போல. அரு சமம் - பொறுத்தற்கரிய போர். பைதல் அம் கடும்பு - பசித் துன்பமுடைய சுற்றம்; அம், சாரியை; அதற்குப் பொருளில்லை. (அஉ)

## செங்கோன்மை

[அரசன் நடுவு நிலையில் வழுவாமல் ஆட்சி செய்தலால், ஆட்சி பல வகையான நன்மைகளுறுஞ் செங்கோன்மையாகின்றது. அதனுல் உலகத்தில் நலங்கள தழைக்கின்றன. மக்களும் தேவரும பாராட்டி, ஆக்கமாயிருப்பர். அரசனுக்கும், அரசியலும் வாழ்க்கையும் எளிதாயிருக்கும்.]

வானம் பொழுதொடு சுரப்பக் கானம்
தோடுறு மடமான் ஏறுபுணர்ந் தியலப்

புள்ளும் மிஞிறும் மாச்சினை யார்ப்பப்
பழனும் கிழங்கும் மிசையற வறியாது
பல்லான் நன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலம் கெழும
நன்பல் ஊழி நடுவுநின் றொழுகப்
பல்வேல் இரும்பொறை நின்கோல் செம்மை
நாளின் நாளின் நாடுதொழு தேத்த [யின்
உயர்நிலை யுலகத்து உயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே, நின்மாட்டு
அடங்கிய நெஞ்சம் புகர்படுபு அறியாது
கனவினும் பிரியா உறையுளொடு தண்ணென
தகரம் நீவிய துவராக் கூந்தல் [த்
வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நாள் அறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையுங் கற்பின் [தே.
வாள்நுதல் அரிவையொடு காண்வரப் பொலிந்

—பதிற்றுப்பத்து, அ௬.

அரசனுடைய ஆட்சியின் செம்மைக்கும் உலக நலங்கட்கும் மிக்க அறுக்கமும் இயைபும் உண்டு. செங்கோன்மையானது உலக மக்களிற் பல வகை ஆற்றலுள்ளவர்களிடையிலும் நல்லெண்ணங்களையும் எண்ணக் கிளர்ச்சிகளையும் எழுப்பி இயக்கங்கொள்ள வைத்தலால், உலகத்திற் பலவகையான நலங்கள் உண்டாகின்றன.

மழை, காலத்தில் பெய்யும்; காட்டில், மான் முதலிய நல்லுயிர்கள் தம் துணையுடன் இயங்கி மகிழும்; பறவைகளும் வண்டுகளும் கிளைகளில் ஆரவாரிக்கும்; பழங்களும்

கிழங்குகளும், உண்டு தீராதபடி பெருகும், ஆனிரைகள் புல்லருந்தி மகிழ்ச்சியோடு இயங்கும்; புதிய வருவாய்க ளாகத் தானியங்களும் பருப்பு வகைகளும் உண்டாகும்.

அரசன் நடுவுநின் றொழுகுதலால் ஆட்சி செம்மை யுற்று அதனால் இந் நலங்களெல்லாம் உண்டாதலின், நாட்டு மக்கள் அனைவரும் நாளுக்கு நாள் நன்மதிப்புற்றுத் தொழுது ஏத்துவர், தேவருடன் பரவுவர்.

குடக்கோ இளஞ்சேர லிரும்பொறையைப்பற்றிப் பெருங்குன்றூர் கிழார் பாராட்டிப் பேசுகின்றபோது, "நின் செங்கோன்மையால் இந்நலங்களெல்லாம் உண்டாக அரசியல் பிழையாமல் போரில் மேம்பட்டுத் தோன்றிக் கற்பின் மனைவியோடு நோயிலையாய் வாழ்க" எனக் கூறி வாழ்த்துகின்றார். இதனால் அவன் இயல்பாகவே செங் கோன்மையுடையன் என்பது புலப்படுத்தி அவனது நாடு காவற் சிறப்பைப பாராட்டுமாறறியலாம்

அரசனது செங்கோன்மைக்கும நாட்டின் நலங்களுக் கும் உள்ள இயைபு இவ்வாற்றால் இனிது பெறப்படும்.

**குறிப்புரை:** வானம் - மேகம். தோடு உறு - தொகுதி யுற்ற. ஏறு - தம் ஆண் மானை. இயல - இயங்கவும். மாச்சினை - பெரிய மரக் கிளைகளில். மிசை அறவு அறியாது - உண்ணுத லால் அற்றுப்போதலை அறியாமல. அருந்தி உகள, இகர ஈறு கெட்டு 'அருந்துகள' எனப் புணர்ந்தன. உகள-இயங்கவும். பயம் கடை யறியா - விளைவு அறறுப்போதலை யறியாத. யாணர் - புது வருவாயினையுடைய. கூலம் - தானிய முதலியன. கெழும- பொருந்தவும். இரும்பொறை - இளஞ்சேர லிரும்பொறையே. கோல் செம்மையின் - ஆட்சியின் செம்மையினால். நாடு - நாட்டு மக்கள். உயர்நிலை யுலகத்து - தேவருலகத்தின் செரு மே தோன்றி - போரில் மேம்பட்டு விளங்கி. நோய் இலையாகியர் நீ - நீ நோய் இல்லையாகுக. அடங்கிய - அன்பினால் தாழ்ந்த. புகர் படுபு அறியாது - பிழை படுத லின்றி. உறையுளொடு - பொருந் துதலோடு. தகரம் நீவிய - மயிர்ச்சாந்து பூசிய. துவரா - சாந்தின் ஈரத்தால் உலராத. வதுவை மகளிர், சடங்கு செய்து மணந்து கொண்ட மாதர். நோக்கினர் பெயர்ந்து - நோக்கி

நீங்கி. வாழ்நாள் அறியும் - வாழ்நாள் நீடியதாயிருக்கவேண்டும் என்று அதன் எல்லையை அன்பினால் அறிய முயலும். வயங்கு சுடர் நோக்கத்து மீனொடு புரையும் கற்பின் - விளங்குகின்ற சுடர் மிக்க தோற்றத்தினையுடைய வடமீன் பெருமையோடு ஒக்கும் கற்பினையுடைய. வாள் நுதல் அரிவையொடு - ஒள்ளிய நெற்றியினையுடைய நின் மனைவியோடு. காண்வரப் பொலிந்து - காட்சி தோன்ற விளங்கி. 'அரிவையொடு காண்வரப் பொலிந்து நீ நோயிலை யாகுக' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். 'கனவினும் பிரியா உறையுளொடு நின்மாட்டு அடங்கிய நெஞ்சம் புகர் படுதலறியாமல் வதுவை மகளிர் வாழ்நாள் அறிதற்கு ஏதுவான கற்பின் அரிவையொடு பொலிந்து நீ நோயிலை யாகுக' என்றபடி. 'பிரியா உறையுளொடு புகர்படுதலறியாமல் மீனொடு புரையுங் கற்பின் அரிவையொடு' என்று இரும்பொறையின் மனைவிக்கு உரைத்துக்கொள்ள வேண்டும். வதுவை மகளிர் என்றது, ஏனைய மங்கலியப் பெண்கள். அவர்கள் அரிவையைக் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியால், அவள் நீண்ட வாழ்நாட்கு விரும்பி அதன் எல்லையில் எண்ணங்கொண்டனர்; அங்ஙனம் எண்ணங்கொள்ளுதற்கு ஏதுவான அரிவையொடு என்று தொடர்ந்துகொள்ள வேண்டும்.

# 9. ஒழுக்கம்

## சான்றோர் குழு

[சான்றோர் சான்றோர் பக்கத்திற் சேர்ந்து அழகும் மாட்சியும் பெறுகின்றனர். சான்றோர் என்பவர் நாட்டின் நன்மணிகள். அணிகலனில், மணிகள் ஒன்று சேர்ந்து அழகு பெறுதல் போன்றது, சான்றோர் குழு. அதனைக் காணக் கண் பெற்றிருக்க வேண்டும்.]

பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும், தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங்கு, என்றும் சான்றோர்
சான்றோர் பால ராப;
சாலார் சாலார் பாலரா குபவே.

—புறநானூறு, உஅ.

கண்ணகனார் என்னுங் கூர் அறிஞர் அழகாக அமைத்து மொழிந்த செய்யுள் இது. கோப்பெருஞ் சோழன் தன் மக்கள் செய்த பொல்லாங்குக்கு நாணி வடக்கிருந்து உயிர் துறந்தபோது, அவனுக்கு உயிர் நண்பராய்ப் பாண்டிநாட்டிலிருந்த பிசிராந்தையார் எவரும் அறிவியாமலே உணர்ச்சியினாற் செய்தி யறிந்து உடனே சோழநாட்டுக்கு வந்து தம் நண்பன் வடக்கிருந்த இடத்திலேயே தாமும் வடக்கிருந்து உயிரை விட்டது கண்டு, கண்ணகனார் இச் செய்யுளை வியந்து பாடுகின்றார்.

பிசிராந்தையாரின் செயல் எக் காலத்திலும் வியக்கத் தக்க அரும்பெருஞ் செயலாக இந் நாட்டில் நிகழ்ந்திருக்கின்றது. கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் பெரும்புலவருமாவர்; சான்றோரு மாவர். பிசிராந்தையாரின் பெருந்தன்மையும், அருளாற்றல் கைவந்த தவத் திறனும், ஒண்மை யுள்ளமும் எளிதில் எடுத்துரைக்கும் நிலையின அல்ல. பொத்தியார் என்னும் நண்பரொருவரும் கோப்பெருஞ்சோழன் பிரிவுக்கு ஆற்றாது அவனருகில் வடக்கிருந்து உயிர் நீங்கினார்.

மணிகள் என்றால் இவர்கள் போன்றாரைக் கூறலாம். பொன்னும் முத்தும் மணியும் வேறுவே றிடங்களில் தோன்றி ஒன்றுக்கொன்று தொலைவில் இருப்பனவாயினும் விலை மதிக்கத்தக்க அணிகலன் ஒன்று செய்யுங்கால் அவையெல்லாம் அதன்கண் ஒன்றுகூடி ஒன்றுக்கொன்று அழகு செய்துகொண்டு விளங்குதல்போல, உற்ற நேரத்தில் இவர்களெல்லாரும் ஒருங்கு சேர்ந்து அழியா அணிகலனாகிய புகழொளி விளக்கங் கொள்ளலாயினர்! சான்றோர் சான்றோர்பாலராய்ச் சேர்வர் என்பது, எவ்வளவு உண்மையாய், எவ்வளவு இயற்கையாற்றலாய், ‘உணர்ச்சி தான் நட்பாங் கிழமை தரும்’ என்னும் நுண்ணிய மெய்ம் மொழிக்கு எவ்வளவு இலக்கானதாய் விளங்குகின்றது!

குறிப்புரை: துகிரும் - பவளமும். மன்னிய மா மலை - நிலைபெற்ற பெரிய மலையானது. காமரு - விரும்பத்தக்க. இடைபட - இடை விட்டு. சேய ஆயினும் - ஒன்றுக்கொன்று தொலை

வான இடங்களில் உள்ளனவாஞலும். பொன் நிலத்திலும், பவளம் கடலிலும், முத்து காட்டிலும், மணி மலையிலுமாக ஒன்றுக்கொன்று இடைவிட்டுத் தொலைவான இடங்களில் தோன்றுதலால் 'இடைபடச் சேயவாயினும்' என்ருர். முத்து, கடலிலுந் தோன்றுமாயினும் இடம் வேறுபடுத்திக் காட்டுங் கருத்தாற் காட்டிலும் எனப்பட்டது. தொடை புணர்ந்து - கோவை பொருந்தி. அரு விலை - அரிய விலையினையுடைய. நன் கலம் - உயர்ந்த அணிகலன். ஒருவழி - ஓரிடமாக. சான்ருேர் - அமைந்தோர்; நலன்கள் நிறைந்து அமைந்தோர். சான்ருேர்பாலர் - சான்ருேர்பக்கத்தவர். ஆப - ஆவார்கள். சாலார் - நலங்கள் அமையாதோர். ஆகுப - ஆவார்கள். (அ௬)

## நல் வாய்ப்பு

[வாய்ப்புகளே வாழ்க்கையை உயர்த்துவன. இயற்கையில் அரும்பி வரும் ஆற்றலுடைய வாயில்களே அவை. வாய்ப்புகள் நேரும்போது, பிற எவற்றையுங் கருதாது அவற்றிற்குப் பணிந்து வழியொழுக வேண்டும். அவ் வொழுக்கததால் வாழ்க்கை அருஞ்செயல்களுடையதாய்க் கற்பு மிக்கதாய் வீறி விளங்கும்.]

காமர் கடும்புனல் கலந்தெம்மோடு ஆடுவாள்
தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனே [டொழுகலான்
நீள்நாக நறுந்தண்தார் தயங்கப்பாய்ந் தருளி [ஞல்
பூண்ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன் [அகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனல், என்தோழி
அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் [பெருமையளே.

—கலித்தொகை, ௩௯ : ௧ - ௬.

இயற்கையில் ஒவ்வொருவர்க்கும் வாய்ப்புகள் சில நேர்ந்து வரும். இயற்கையின் வழியே ஒழுகும் மாட்சிமையுடையோர், தமக்கு நேரும் இயற்கை வாய்ப்புகளிற்

கண்ணும் கருத்துமாயிருந்து விழிப்பாய்ப் பயன்படுத்திக் கொண்டு உயர்வு அடைவர். மக்களை நிலை உயர்த்தும் வாயில்களே அவ் வாய்ப்புகள் !

வாய்ப்புகள் ஆராய்ச்சிக்குரியன அல்ல. அவ் வாய்ப்புகளின் வழியே அடியொற்றிச் செல்லும்போது, மக்கள் மேற்கொள்ளும் முயற்சித் திறங்களே ஆராய்ச்சிக்குரியன. அறிவு ஓரளவே அளந்தறியும் அதுவும், தன்னை எதிர்ப்பட்ட புறப்பொருட் கருத்துக்களை மட்டும். அங்ஙனமன்றி, அன்பு முதலிய அகப்பொருட் கருத்துக்களாகிய உணர்வு முதலியவற்றை அளந்தறியும் ஆற்றல் அறிவுக்கு இல்லை. இல்லாதிருந்தும் மீறி அந் நிலைகளின் இணைவு விரைவுகளை ஆராயப் புகுந்தால், அறிவுநிலைக்கு அவை எட்டாது ஓங்கி நிற்றலின், உண்மையை அறியமாட்டாது, வாளா திரிபான செய்திகளையே அறிந்து அது நலமில்லன உண்டாக்கும். ஆதலால், இயல்பான வாய்ப்புகளை அவை நேர்ந்து வரும்போது அஞ்சாது உறுதியாகக் கடைப்பிடித்து உய்ந்து நலம்பெறத் தவறலாகாது.

வாய்ப்புகளிற் சில, அவை நேருங் காலத்து நிலைகட்கும், சூழ உள்ளவர்கட்கும், பழக்க வழக்கங்கட்கும், குடிமுறை முதலியவற்றிற்கும், அறிவு ஆராய்ச்சிகட்கும் ஒவ்வாதனவாகத் தோற்றலாம். ஆனால், மக்கள் வாழ்க்கையை உண்மையில் விளக்கும் இயற்கை மின் வீழ்வு, வாய்ப்புகளேயாகும். அவ் வாய்ப்பின் வழி ஒழுகுவோரே பிறவி மாட்சிமைக்குரியர்; மெய் ஒழுக்கமுடையர் ! ஆற்றலும் அருஞ் செயல்களும் உடையர் ! அல்லாதார், கற்புடையராகார்.

தலைவிக்கு நேர்ந்த ஓர் அரிய இயற்கையான வாய்ப்புக்குப் பணிந்து அதனை அவள் ஏற்ற ஆற்றலும், மழை வேண்டின் வருவிக்கும் அருஞ்செயலும் உடையளாய்ப் பெருமையாகிய கற்பிற் பிறங்கிய அரிய நிகழ்ச்சியினைத் தோழி அவள் தாயர்க்கு எடுத்துக் காட்டும் அருமைப்பாடு இப் பகுதியில் வருகின்றது !

இயற்கையான ஆற்றல்வாழ்வில் வயங்குதற்குப் பலர்க்கும் நினைவிருக்கலாம். ஆனால், தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிப்பதனால் என்ன பயன்?

**குறிப்புரை :** காமர் - விரும்பத்தக்க. கடு - மிக்க. ஆடுவாள் - நீராடுவோளாகிய தலைவி. தளர்ந்து - கால் தளர்ந்து. அதனோடு - அந் நீரோடு. ஒழுகலான் - தன் வயமின்றிச் செல்லுதலால். நாகம் - சுரபுன்னை மலர்களால் ஆன. தயங்க - தன் மார்பில் அசைய. அருளினால் - அருளெண்ணத்தினால். பூண் - அணிகள் அணிந்த. ஆகம் - தலைவியின் மார்பை. போதந்தான் - போந்தானது; கரைக்கு எடுத்து வந்து விட்டவனது. அகலம் - மார்பை. வரும் - எழுந்துவரும்; அதாவது, புதிய என்னும் பொருட்டு. என்பதனால் - என்னும் கருத்துக்கொண்டதனால். என் தோழி - என் தலைவி. தரல் வேண்டின் - வருவிக்க விரும்பினால். தருகிற்கும் - வருவிக்கும் ஆற்றலுடைய. பெருமையள் - கற்பொழுக்கப் பெருமையுடையள் ஆயினள். என்றது, அத் தலைவனையே மணம் புரியும் உறுதிப்பாடுடையவள் ஆனாள் என்பது. (அறு)

## பாரியும் மாரியும்

[பாரிக்கு மாரியும, மாரிக்குப் பாரியுமே நிகர். பிறர்க்கு உதவும் ஆற்றலில் முன்னும் பின்னும் பாரிக்கு நிகரானவர் மக்களில் எவருமிலர். உதவுந் தன்மை எளிதில் அமைவதன்று. அது, பல அடிப்படைப் பண்புகளைத் தன்னுட் கொண்டுள்ளது. கபிலர் இக் கருத்துக்கள் அடங்க இச் சிறு செய்யுளை நமக்கு வழங்கி யிருக்கின்றார்.]

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவன் புகழ்வர் செந்நாப் புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்,
மாரியும் உண்டுஈண் டுலகு புரப் பதுவே.

—புறநானூறு, கOஎ.

பாரி, மாரிக்கு நிகரான கொடையாளி என்பது இச் செய்யுளின் கருத்து.

“பாரி பாரி என்று அவனுடைய பல புகழ்களை வாழ்த்தி அவன் ஒருவனையே புலவர்கள் புகழ்கின்றனர்.

கொடுப்பதற்கு அவன் ஒருவன் மட்டுந்தானா உலகத்தில் இருக்கின்றனன்? பாரி ஒருவனே அல்லன்; மாரியும் உண்டு இங்கே உலகு புரப்பது" என்று இச் செய்யுளிற் கூறப்படுவதனால், பாரியை ஏதோ பழித்துக் கூறுவது போலத் தோன்றும். ஆனால் அதன் கருத்தை நோக்கும் போது, பழிப்பதுபோல ஆசிரியர் அவனைப் புகழ்ந்து கூறுதலே தோற்றுகின்றது. பழிப்பது போலப் புகழும் இம் முறைமை, மிகுதியாகப் புகழ்தலாகும்.

மாரிக்கு நிகரான கொடையாளி உலகத்தில் பாரி ஒருவனே என்று பிறரை நீக்கி அவனை உயர்த்தியபடியாம்.

பாரி தன் காலததிலேயே இங்ஙனம் புகழ் எடுத்து விளங்கியது பெரிதும் வியத்தற்குரியது. மேலும், பாரி யின் காலமாகிய கடைச்சங்க காலம் கொடையாளிகள் பலர் விளங்கிய காலம். அக் காலத்திலேயே அவர்கள் அனைவரினும் வேள் பாரியாகிய இவனொருவனே இங்ஙனம் கொடைக்குணத்தில் தலைமைபெற்று விளங்கினான் எனின், அவன் எவ்வளவு அருளுள்ளம் உடையவனாய் இருந்திருக்க வேண்டும்.

பாரிக்கு நிகராக மாரியை எடுத்துக் காட்டியதனால், கொடுக்கும் வகையில் மாரிக்கு என்னென்ன இயல்புகள் உண்டோ அவை பலவும் பாரியினிடமும் அமைந்திருந் தனவென்பது தெரிகின்றது. முன்னே பலமுறை உதவி யிருந்தாலும் பின்னும் எக்காலும் உதவுதலையே கடப்பா டாகக் கொண்டிருத்தல், பயனொன்றும் எதிர்பாராமல் உதவுதல், கேளாமல் தானே முன் வந்து உதவுதல், விளை நிலத்திலன்றிக் களர் நிலத்திலும் பொழிதல், அறத்தின் வழி நின்று உதவுதல் முதலிய இயல்புகள் மழையினிடத் துள்ளன; ஆதலால், பாரியின் கைவண்மையிலும் இவை விளங்கின என்றே திட்டமாகத் துணியவேண்டி யிருக் கின்றது.

இத்தகைய புகழுடையோன் பாரி யொருவனேயாக இன்னும் உளன் என்றால், அவன் மாட்சியை எங்ஙனம் அளந்து காண முடிகின்றது!

**குறிப்புரை :** பல - பல புகழ்களை. ஒருவன் - பாரி யொரு வனையே. செந்நாப் புலவர் - செவ்விய நாவையுடைய அறிஞர்; 'செவ்விய' என்றது, நடுநிலைமை யுடைய என்னும் பொருட்டு. உலகு புரப்பது - உலகத்தைப் பாதுகாப்பது. (அகூ)

## பெரியோர் ஒழுக்கம்

[கருதியதை முடிப்பது பெரிதன்று ; அதனை அறனும் பொருளும் வழுவாமல தமது தகுதியையும் நோக்கி ஆராய்ந்து, முடிந்த வரையிற் செவ்வையாய்ச் செய்வதே சிறந்தது. காரியத்தின் நிறைவேற்றத்திற்காக மெய்யொடு பொய் கலந்து ஒழுகுதல், தக்கதன்று. பெரியோர் ஒழுக்கங்கள அத்தகையன.]

விழையா உள்ளம் விழையு மாயினும்
என்றும், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்கு
அறனும் பொருளும் வழாமை நாடித்
தன்தக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா குமமே முன்னியது முடித்தல் ;
அனைய பெரியோர் ஒழுக்கம் ; அதனால்,
அரிய பெரியோர்த் தெரியுங் காலை,
நும்மோ ரன்னோர் மாட்டும் இன்ன,
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்,
மெய்யாண்டு உளதோஇவ் வுலகத் தானே.

—அகநானூறு, உஅகூ : அ - கஎ.

"விரும்பாத உள்ளம் ஒன்றை விரும்புமாயினும், உடனே விருப்பத்தை நிறைவேற்றிவிடுதல் ஒரு முதன்மை யன்று. கருதியதை முடித்தல் என்பது பின்னுற் கருது தற்குரியது. அதுகாறுங் கேட்ட கேள்வி யறிவு காவ லாகத் தமதுள்ளத்தைத் திருப்பி ஒருவழி நிறுத்தித் தமது தகுதியினையும் கருதிப் பார்த்து அறம் வழுவாம லும் பொருளும் நழுவாமலும் எண்ணிச் செய்தலே முத லிற் கருதுதற்குரியது; அஙஙனம் வழுவாமை நாடி, அதன்பின் ஆவதற்குரியதே, கருதியதை முடித்தல் என்

பது. அரிய பெரியோர்களை ஆராயும்போது பெரியோர் ஒழுக்கங்கள் அத்தகையனவா யிருக்கின்றன.''

தோழி தலைவனை நோக்கி இங்ஙனம் சொல்லுகின்றாள். தலைவியின் உறவினர் தலைவியை இல்லத்தில் நிறுத்தி வெளியே போகவொட்டாது காத்தனர். அது வரையில் களவொழுக்கத்தில் ஒழுகி வந்த தலைவன், தோழியை நோக்கி, 'இனி நான் வரைந்துகொண்ட பின்பே வரவேண்டும். அதுவரையில் தலைவியை ஆற்றுவித்துக்கொண்டு இரு' என்று சொல்லித் தலைவியைத் தோழியினிடம் அடைக்கலமாக ஒப்புவிக்கும் கருத்தோடு அவள் கையைப் பற்றினான்; தோழி அதை, 'தலைவன் ஏதோ சூளுறவு செய்யக் கருதுகின்றான்' என்று எண்ணியே, தலைவனை நோக்கி மேற்கண்டவாறு பெரியோரொழுக்கத்தைப் பற்றி விளக்கிக் கூறினாள்.

''பெரியோர் ஒழுக்கம் இத்தகையன என்பதை அறிவேன்; அதனால் அத்தகைய சான்றோராகிய தாங்கள், சூளுறவு வேறே செய்யவேண்டுமா? வரைந்து வருவேன் என்பதே போதாதோ? பொய்யும் மெய்யும் கலந்து மொழிகின்றவர்களல்லவா சூளுறவு செய்தல் வழக்கம். தங்களைப்போன்றவர்களிடத்தும் இங்ஙனம் பொய்யொடு செறிந்த மெய் காணப்படுமானால் இவ்வுலகத்தில் மெய் எங்கே இருக்கப்போகின்றது?'' என்று பின்னும் எடுத்துக் காட்டுகின்றனள்.

தோழி மிக்க வல்லமையுடையவள்; பேச்சு மிகவும் நயமாயிருக்கின்றது. இதனைக் கேட்கும் தலைவன், இடையிற் களவொழுக்கத்தில் திரும்பவும் தலைப்படமாட்டானல்லவா? வரைந்து கொள்ளுதற்கே பெரிதும் முனைவன். இத்தகைய அமைப்பில் தோழி அருமையாக அவனிடம் உரையாடி யிருக்கின்றனள்.

குறிப்புரை: விழையா - விரும்பாத. கேட்டவை - கேட்ட கேள்வி யறிவுகள். தோட்டியாக - மெய்ந்நெறி வழாமைக்குக் காவலாக. மீட்டு - திருப்பி. வழாமை நாடி - வழுவாதபடி

ஆராய்ந்து பார்த்து. அதன் பின் ஆகும் - அதன் பின்னர் ஆதற்குரியது. முன்னியது - கருதியது. கருதியது முடித்தல், வழாமை நாடி அதன் பின்னர் ஆதற்குரியது என்றபடி. அனைய- அத்தன்மைய. நும்மோ ரன்னோர் மாட்டும் - நும்மைப்போன்றவரிடத்திலும். மிடைந்தவை - கலந்து செறிந்தவை. இவ வுலகத்தான் - இவ்வுலகத்தில். (அஎ)

## அருளொளி

[இயல்பாக அருளிலும் அன்பிலும் சிறந்து நல்லவராக இருப்பவரிடம் அவரைச் சுற்றி அருளொளி வட்டம் உண்டாகின்றது. அத்தகையோரைக் கண்டால், நோய் நீங்கும். ஆதலால், அவர் போன்றோர் தம் உலகியற் செயலகளை அருளுக்கும அன்புக்கும் பழுதில்லாதபடி நிகழ்த்திக்கொண்டு உலகில் விளங்குதல் வேண்டும்.]

எருமை யன்ன கருங்கல் லிடைதோறு
ஆனிற் பரக்கும் யானைய முன்பின்
கானக நாடனை நீயோ பெரும!
நீயோ ராகலின் நின்னொன் றுமொழிவல்
அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயம் கொள்பவரொடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே.
—புறநானூறு, ரு.

பண்டைக் காலத்தில் அரசும் செல்வாக்குமுடைய பலர், இயல்பிலேயே அருளொளி விளக்கம உடையவராகவும் திகழ்ந்திருக்கின்றனர். அவர்களால் உலகுக்குப் பல வகையான நலங்கள் உண்டாயிருக்கின்றன.

சேர மன்னர்களில் இங்ஙனம் ஒருவன் முன்பு திகழ்ந்திருந்தான். சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ்சேர லிரும்பொறை என்பது அவன் பெயர். அவனைச சுற்றி எப்போதும ஓர் அருளொளி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அவனைக் காண்போர், நோய் நீங்கி

நலம் பெறுவர் நரிவெரூஉத்தலையார் என்னும் புலவர் ஒருவர்க்கு ஏதோ காரணத்தால் அவர் உடம்பு வேறு பட்டிருந்தது. இச் சேரமன்னனின் பெருமையைக் கேள்வியுற்று அவன் இருக்குமிடஞ் சென்று கண்ட அளவி லேயே அவர் உடம்பின் வேறுபாடு நீங்கிவிட்டது. என்ன வியப்பு! அரசமுனிவர் பலர் இங்ஙனம் தமிழகத்தில் முன்பு விளங்கி யிருந்திருக்கின்றனர் நரிவெரூஉத் தலை யார் தாம் அவனைக் கண்டு, வியக்கத்தக்கபடி நலம்பெற்ற போதுதான், மேற்குறித்த செய்யுளை நன்றி யறிவுடன் அவர் அருளிச்செய்தார். அதில் அவர் வியந்தும் வாழ்த்தியுங் கூறுவது பின் வருமாறு :

"யானைகளையுடைய கானகநாடன் நீதானோ பெரும! நீ இத்தகைய அருளாற்றலை இயல்பிலேயே உடையை யாதலால், நினக்கு நான் ஒன்று கூறல்வேண்டும். நினக்கு அமைந்திருக்கும் இந்த ஆற்றலுக்குக் காரணம் அருளும் அன்பும் என்னும் உணர்வு நலங்களே. ஆட்சி செய்வத னால் அந் நலங்கள் மேலும் வளருமாறு செய்துகொள்ள லாம். குழந்தைகளை வளர்ப்போரைப்போல நாட்டின் காவலைப் போற்றிப் பயனுறுதல் வேண்டும். அருள் நினை வோடு செய்தற்குரியதே காவல்; அருளும் அன்பும் வள ரும் முறையில் அதனை நிகழ்த்தும் பேறு பெறற்கரியது" என்பது.

மன்னன் இயல்பு கூறி அவனுக்கு இன்றியமையாத தொன்றை அறிவுறுத்த அழகு இச செய்யுளில் மிளிர் கின்றது. புலவர்பால் எவ்வளவு நன்றியறிவும் நல்லெண்ண மும் மிகுந்து தோன்றியிருக்கின்றன !

**குறிப்புரை :** எருமை அன்ன கருங்கல் இடைதொறும் - எருமையை ஒத்த கரிய பாறைகள் பொருந்திய பரந்த இடமெல் லாம். இடை - இடை வெளியாகிய இடம். ஆனின் பரக்கும் யானைய முன்பின் - மாட்டு மந்தையைப் போலப் பரந்து உலவும் யானைகளையுடைய வலிமை யமைந்த. முன்பு - வலிமை. கான் அக நாடனை நீயோ பெரும - கானம் சூழ்ந்த உள் நாட்டினை யுடையை நீதானோ பெருமானே ! யானைகளையுடைய வலிமை

யமைந்த கானம் என்று கொள்ளப்படும். நீயோராகலின் - நீ யாகலின் ; இதில் ஓர் என்பது அசை ; அதற்குப் பொருளில்லை ; நீ இத்தன்மையாகலின் என்பது கருத்து; அதாவது, நீ இங்ஙனம் அருளொளி விளக்கம் உடையையாகலின் என்பது. 'அருளையும் அன்பையும் நீக்கி, அங்ஙனம் நீக்கி யொழுகிய தீவினையினால் நீங் காத நரகத்தை இருப்பிடமாகக் கொள்ளும் தீயோருடன் சேரா மல்' என்பதற்காக, 'அருளும் அன்பும் நீக்கி நீங்கா நிரயம் கொள் பவரோடு ஒன்றாது' என்றார். 'அங்ஙனம் அவரோடு சேராமல் அருளோடும் அன்போடும் காவல் ஓம்புமதி' என்று உரைத்துக் கொள்ள வேண்டும். குழவி கொள்பவரின் - குழந்தையைப் போற்றுவோரைப் போல. ஓம்புமதி - பாதுகாப்பாயாக ; அதா வது, ஆட்சி செய்து அருளிலும் அன்பிலும் மேன்மேலும் ஓங்கி நின் அருளொளி வட்டத்தை மேன்மேலும் பெருக்கிக்கொள்வா யாக என்பது. அளிதோ தானே - தான் அளிது ; அது அரு ளோடு கருதத்தக்கது என்றபடி. அது பெறல் அருங் குரைத்து - அது பெறல் அரிது. அருங் குரைத்து என்பதில், குரை அசை மொழி ; அருமை, குரை, து என்பவை அருங் குரைத்து என்று ஆயின. அசைச் சொல்லாகிய 'குரை' என்பதை எடுத்துவிட் டால், அருமை என்பது அரி எனத் திரிந்து 'து' என்பதனோடு சேர்ந்து அரிது என்றாகும். (அஅ)

## உதவியாய் வாழ்தல்

[பிறர்க்கு உதவுதற்குரிய காலம் இன்னதுதான் என்பதில்லை. எப் போதும் உதவும் நோக்கமாயிருத்தலே அருளாளர் இயல்பு. ஒன்று உதவுதலால் தாம் உயிர் துறகக நேருமாயினும் அத னையே மகிழ்வோடு செய்வர். அதுமட்டுமோ, இறந்த பின்ன ரும் அவர் உதவியாயிருப்பர் என்று இச் செய்யுளில் வரு கின்றது ]

பலர்க்குநிழ லாகி உலகமீக் கூறித்
தலைப்போ கன்மையின் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்,
இடங்கொடுத் தளிப்ப மன்ற ; உடம்போடு
இன்னுயிர் விரும்பும் கிழமைத்
தொல்நட் புடையார் தம்உழைச் செலினே.

—புறநானூறு, உஉக.

அருளொழுக்கமுடையார் எஞ்ஞான்றும் பிறர்க்கு உதவியாகவே இருந்து விளங்குவர் உதவுவதற்கு அவர்கள் ஒரு நேரம் பார்ப்பதில்லை உதவுதற்குரிய நேரம் எப்போது வாய்க்கும் என்பதே அவர்கள் எதிர்பார்ப்பு. செல்வம் உள்ள செழுமைக் காலமாயினும், செல்வம் அற்ற வறுமைக் காலமாயினும் உயிருள்ள வரையில் இல்லையென்னாது உதவியாய் ஒழுகுதலே அவர்கள் இயல்பு. இச் செய்யுளில் உயிர் மாய்ந்து நடுகல்லானவிடத்தும், பழைமையாகிய உரிமை நட்புடையார் உதவுதற்குப் பின் வாங்கார் என்று ஒரு குறிப்பு வருகின்றது.

கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்து உயிர் துறந்தான். அதற்கு இச் செய்யுளில் ஒரு காரணம் கூறப்படுகின்றது. எவ்வளவுதான் அச் சோழன் பலர்க்கும் தன் அருள் தன்மையால் நிழலாயிருந்து உலகம் மேம்பாடாகக் கூற அரசியல் நடத்தினும், மறுமை நலத்திற்கு அந்த வாழ்வே முடிவுபோத வில்லாமையால், அறம் விரும்பிச் சிறிய இடத்தில் புலன் மடங்கித் தவமிருந்து அவன் உயிர் நீங்க நேர்ந்தது என்பது. சோழன் இவ்வாறு வடக்கிருக்க நேர்ந்தபோதே, அவனோடு அதுகாறும் உயிர் நண்பராய்ப் பழகியிருந்த பொத்தியார் என்பவரும் உடன் உயிர் துறக்க விரும்பினார். அப்போது பொத்தியாரின் துணைவியார் கருக்கொண்டிருந்தனர். அதனால், கோப்பெருஞ்சோழன், 'உங்கள் துணைவியார் கருவுயிர்த்த பின் நீங்கள் வந்து வடக்கிருக்கலாம்' என்று கூறினான். பொத்தியார் அவ்வாறே பொறுத்திருந்து, தம் இல்லக் கிழத்தியார்க்கு மகவு பிறந்தபின், கோப்பெருஞ் சோழனுக்கு நடுகல் நிறுத்திய இடத்தில் வந்து, 'சோழனே, எனக்கு இடங்கொடு; வடக்கிருத்தல் வேண்டும்' என்று வேண்டினார். என்ன வியப்பு! புதை குழி போல இடம் அகன்று தோன்றிற்று. உடனே, பொத்தியார், 'இறந்து நடுகல்லாகியவிடத்தும் நட்புடையார் உறுதியாய் இடங் கொடுத்தளிக்கின்றனரே' என்று இச் செய்யுளை மனமுருகிக் கூறி, தாமும் வடக்கிருந்து உயிர் துறந்தார். 'உடம்

போடு உறைய உயிர் விரும்புவதுபோல, உரிமைத் தொல் நட்புடையாரும் ஒருவரோடு ஒருவர் பிரியாதிருந்து உறைய விரும்புதலால் இங்ஙனம் இடங்கொடுக்க நேர்கின்றது' என்று செய்யுளில் ஒரு பொருள் நுட்பமும் வருகின்றது. 'உடம்பும் உயிரும்போல ஒன்றி வாழ்தல்' என்று உலகத்தார் கூறும் உவமை இங்கே அழகாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது.

'என்பும் உரியர் பிறர்க்கு' என்று வாழ்ந்த நல்லோர் 'அதன் பின்னும் உரியர் பிறர்க்கு' என்னும்படி இச் செய்யுளில் கருத்து எவ்வளவு பெருந்தன்மையாக வருகின்றது!

**குறிப்புரை:** *மீ கூறி* - மேம்பாடாகக் கூற. *தலைப் போகன்மையின்* - முடிவுபோதல் இல்லாமையால். *சிறு வழி* - சிறிய இடத்தில். *மடங்கி* - ஒடுங்கி. *அளிப்ப* - அளிப்பர். *மறை* - உறுதியாக. *கிழமை* - உரிமையுடைய. *உடம்போடு* - உடம்போடு உறைய. *விரும்பும் கிழமை* - விரும்புகின்ற உரிமையைப் போன்ற உரிமையுடைய. *தொல்* - பழைமையான. *நட்புடையார் தம் உழைச செலின்* - நட்புடையாரிடத்தில் சென்றால். 'நட்புடையார்தம் உழைச செலின் அவர் இடங்கொடுத்தளிப்ப மன்ற' என்று சேர்த்துக் கூறிக்கொள்ள வேண்டும். (அக)

### பெருந்தன்மை

[சான்றோர் இயல்பு பெருந்தன்மை; அது, நல்ல இடங்களையே தாவித் தொடர்பு கொள்ளும். எதுவுங் கிடைத்த அளவில் அமைதி கொள்ளும்; இகழாது. நலமுள்ள இடங்களைப் பாராட்டுதலையே கடமையாகக் கொண்டு ஒழுகும். மற்று, அழிவுடைய செயல்களுக்கு நாணும். மோசிகீரனார் இத்தகைய பெருந்தன்மையாளர்.]

திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்
அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்
சின்னீர் வினவுவர் மாந்தர்; அதுபோல்,
அரசர் உழைய ராகவும் புரைதபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர்; அதனால்,

யானும், பெற்றது ஊதியம் பேறியா தென்
னேன் ;
உற்றனென் ஆதலின் உள்ளிவந் தனனே ;
ஈயென இரத்தலோ அரிதே ; நீஅது
நல்கினும் நல்கா யாயினும் வெல்போர்
எறிபடைக் கோடா ஆண்மை, அறுவைத்
தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத்
தண்பல இழிதரும் அருவிநின்
கொண்பெருங் கானம் பாடல்எனக் கெளிதே.

—புறநானூறு, கருசு.

பெருந்தன்மை என்பது சான்றோர் இயல்பு ; இழிந்த செயல்களுக்கு நாணுவதும், எந்த இடத்திலும் நன்மை கண்டு பாராட்டுவதும பெருந்தன்மைக்கு அழகு.

பிறரிடத்திலுள்ள அருமைப்பாடுகளை எடுத்துப் பாராட்டலாம் ; ஆனால், அவரிடம், ஒன்று கொடு என்று கேட்டல் ஆகாது. மோசிகீரனார் என்னும் புலவர் கொண் கானங் கிழானிடம் பரிசில் விரும்பிச் சென்றார். அவர் சொன்னது இது. "நின் ஆண்மையையும் கொண்கானம் என்னும நின் மலையையும் பாராட்டிப் பாடுதல் எனக்கு எளிது ; ஆனால், உன்னை ஒன்று கொடு என்று இரத்தலோ எனக்கு மிகவும அருமையாயிருக்கின்றது !"

மோசிகீரனார், சிறந்த சான்றோர் ; அப் பெருந்தன்மை யாளரது உள்ளம், இரத்தல் செய்தற்கு நாணுதல் இயல்பே உலகத்தில் நல்லோர் உள்ளங்களையும், திறமை களையும, இயற்கை யிடங்களின் இனிய காட்சிகளையும் எடுத்துப் பாடுவது அவர் கடமை. அவர் கடமையை அவர் செய்யலாம். செல்வர்கள் தங் கடமையையும் அவர்க்குச் செய்தல் வேண்டும் ; அதுவே முறை. மற்று, ஈ என இரத்தல் எவ்வாறு கூடும் ?

கடலின் அருகிற் சென்றாலும், நீர்வேட்கை நீக்கு தற்கு வேறு ஊற்றுநீர் உள்ள இடத்தையே கேட்க வேண்டியிருக்கின்றது; அதுபோல, நிறைந்த வளமுள்ள வேந்தர்களின் அருகில் இருந்தாலும் நட்புவேட்கையைத் தணித்துக் கொள்வதற்கு வேறு ஈர நெஞ்சமுடைய வள்ளல்களின் இடத்தையே புலவர்கள் நாடவேண்டியிருக்கின்றது. அத்தகைய அன்புடையவர்களிடம் தமக்குக் கிடைப்பது ஒருகால் சிறிதேயாயினும், அதனை அவர்கள் இகழாது ஏற்று மகிழ்வர். அமைந்த இயல்புடைய புலவர்களின் இயல்பு அது.

மோசிகீரனார் கொண்கானனிடம் போனபோது இவ்வியல்புகளையும் எடுத்துக் காட்டி, 'அத்தகைய அன்புரிமை உற்றனெனாதலின் நின்னை நினைத்து வந்தேன்' என்று தமதுள்ளத்தை அவன்பால் புலப்படுத்திக்கொள்கின்றார்.

இப் பெருந்தன்மை மிக்க பேரறைக் கேட்கும் பேறு பெற்ற கொண்கானங்கிழான் உள்ளம் எப்படியிருக்கும்? நிலையற்ற பண்டங்களினும், நிலையான பெருந்தன்மையன்றோ மிகவும் சிறந்தது!

* குறிப்புரை: நணிய செலினும் - அருகிற் சென்றாலும். அறியுநர் - ஊற்றுநீர் இருக்கும் இடம் அறிந்தோரை. வேட்கை - நீர் வேட்கை. சில் நீர் - சிறிதாக உள்ள ஊற்று நீரை. அரசர் உழையராகவும் - அரசரிடத்தில் இருப்போராயிருந்தாலும் புரை தபு வள்ளியோர் - குற்றந் தீர்ந்த ஈகையாளரை. படர்குவர் - நினைத்துச் செல்வர். பெற்றது ஊதியம் - யான் வள்ளியோரிடம் பெற்றது எதுவோ அதுவே எனக்கு ஊதியம்; பேறு யாது என்னேன் - யான் பெற்ற ஊதியம் எவ்வளவு என்று இகழ்வாக எண்ணமாட்டேன். உற்றனெனாதலின் - இத்தகைய அன்பின் நினைவைப் பொருந்தினேனாதலின். உள்ளி - நின்னை நினைத்து. வெல் போர் எறி படைக்கு ஓடா ஆண்மை - வெல்லும் போரின்கண் பகைவர் எறிகின்ற படைக்குப் புறங்கொடாத நினது ஆண்மையையும். அருவி நின் கொண்பெருங் கானம் - அருவியையுடைய நினது கொண்கானம் என்னும் மலையின் நலங்களையும்' 'அறுவைத் தூவிரி......அருவி' என்பது அருவியின் சிறப்புக்கள். அறுவைத் தூவிரி கடுப்ப - ஆடையின் தூய விரிப்பை ஒப்ப.

துவன்றி மீ மிசை - மிகவும் உச்சியிலிருந்து செறிந்து. தண் பல இழி தரும் - பலவாய்க் குளிர்ந்து இழியும். 'வினவுவர்; அதுபோல் படர்குவர் புலவர்; அதனால் உள்ளி வந்தனென்; எனக்கு ஈ என இரத்தல் அரிது; நின் ஆண்மையும் கொண் பெருங் கானமும் பாடல் எளிது' என்று கூறிக்கொள்ள வேண்டும். (௬0)

## குண மாட்சிமை

[செல்வர்க்குக் குணம் மற்றுமொரு செல்வத்தைப் போன்றது. தமக்கும் பிறர்க்கும் பயனும் பெருமையும் அளிப்பது. பண்டைக்காலத்து முடியுடை மன்னரும குண மாட்சிமையைத் தமக்கு ஒப்பற்ற அணிகலனைக் கொண்டு விளங்கினர். இச் செய்யுளில் ஓர் எடுத்துக்காட்டு வருகின்றது.]

சென்மோ பாடினி நன்கலம் பெறுகுவை
சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து
தெண்கடல் முன்னிய வெண்டலைச் செம்புனல்
ஒய்யும் நீர்வழிக் கரும்பினும்
பல்வேற் பொறையன் வல்லனால் அளியே.

—பதிற்றுப்பத்து, அஎ.

மக்கட்குச் செல்வம் இருப்பதோடு குணமும் பொருந்தினால் அது பொன்மலர் நாற்றமுடைய தென்னும்படி மதிக்கத் தக்கதாக இருக்கும். செல்வமும் அப்போது தான் அவரவர்க்கே கூட மிக்க பயன் தருவதாயிருக்கின்றது.

குடக்கோ இளஞ்சேர லிரும்பொறையைப் பற்றிப் பெருங்குன்றூர் கிழார் கூறியபோது இக் காரணத்தையே எடுத்துக்காட்டி மகிழ்வது நினைவுகூர்தற்குரியது.

பாணர் வகுப்பில் தோன்றிய பெண்ணைப் 'பாடினி' என்பது வழக்கம். அவளைப் பார்த்து ஆசிரியர் தமது கருத்தைக் கூறுவதாக இச் செய்யுள் வருகின்றது.

'பல படைகளையுடைய பொறையன் கரும்பைவிட இனியனாய் அருள் செய்தல் வல்லவனாயிருக்கின்றான்.

பாடினியே, நீ அவனிடம் பாடிச் செல்; நல்ல அணிகலன்களைப் பெறுவாய்' என்கின்றார்.

'கரும்பினும் இனியன்' என்று கூறும்போது, மற்றோர் அழகின்மேல் வைத்து ஆசிரியர் கூறுவது மிக்க இன்பந் தருகின்றது. ஆற்று நீரில், கருப்பங் கழிகளால் தெப்பம் செய்து செலுத்துவதும் வழக்கம். ஆற்றைக் கடப்பதற்கு அது, உதவும். அப்படி இடரைக் கடக்கும்படி செய்யுங் குணம் அந்தக் கருப்பம் புணைக்கு உண்டு; அந்தக் குணத்தைவிட அளித்தல் வல்லவன் இளஞ்சேர லிரும்பொறை என்கின்றார் ஆசிரியர்: இடரே இல்லாதபடி செய்து விடுவன் என்பது கருத்து.

செல்வர்கள் இங்ஙனங் குணமுடையராகவும் விளங்குதலன்றோ நாட்டுக்கு நல்லது.

**குறிப்புரை:** சென்மோ - செல்வாயாக. பாடினி - பாடியே. சந்தம் பூழிலொடு - சந்தனக்கட்டை, அகிற்கட்டைகளோடு. தெண் கடல் முன்னிய - தெளிந்த கடலை நோக்கிச் செல்கின்ற. வெண் தலை - நுரையினால் வெண்ணிறமான தலைமையுடைய. செம் புனல் - செந்நிறமான யாற்று வெள்ளத்தின். நீர் வழி ஒய்யும் - நீரின் வழியே செலுத்தப்படுகின்ற. கரும்பினும் அளி வல்லன் - கருப்பம் புணையினும் அளித்தல் வல்லன். பொறையன் என்றது, இளஞ்சேர லிரும்பொறையை. (கக)

## மனை மாண்பு

[உலகத்தில் மாட்சிமை என்பது மனைவியின் இயல்பு. வீட்டில் மங்கலம் என்று கருதக்கூடியது இம் மனைமாட்சியே. அத்தகைய தலைவியின் மாண்புகள் இன்னவை என்பது இந் நூற்பாவில் தெளிவாக எடுத்துக் காட்டப்படுகின்றது.]

கற்பும், காமமும், நற்பால் ஒழுக்கமும்,
மெல்லியற் பொறையும், நிறையும், வல்லிதின்
விருந்துபுறந் தருதலும், சுற்றம் ஓம்பலும்,
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்.

—தொல்காப்பியம், க0கஅ.

மனைவிக்கு உரிய மாட்சிமையான இயல்புகள் எவை எவை என்பன இந் நூற்பாவில் வருகின்றன. ஆசிரியர் தொல்காப்பியர் அவற்றை இதன்கண் நன்கெடுத்து விளக்குகின்றார். புலவர் திருவள்ளுவரும் மனைவியின் இயல்புகளை 'மனை மாட்சி' என்றே கூறுவர் இந் நூற்பாவிலும் அவை 'கிழவோள் மாண்புகள்' என்று வருகின்றன. உற்று நோக்கினால் உலகத்திலேயே மாட்சிமையான பண்புகள் என்பவை இல்லற மாதர் பண்புகளே என்பது இவைகளிலிருந்து வெளிப்படுகின்றது. மிக்க பெருந்தன்மை வாய்ந்த சான்றோராகிய பிசிராந்தையாரும் தம் மனைவியாரின் பண்புகளைப் பற்றிக் கூறும்போது 'மாண்ட என் மனைவி' என மாட்சிமை மொழியினாலேயே குறிக்கின்றனர் இவ்வளவு பெருமை இல்லற மாதர்க்கு இருக்கின்றது. அதனை அவர்கள் தம்மிடம் நன்றாக நிலை நிறுத்திக்கொண்டு விளங்கினால், உலகத்திலுள்ள ஒவ்வோரில்லமும் அருள் நிலையமாகவே விளங்கிப் பெருநன்மை விளைக்கும். ஆசிரியர் தொல்காப்பியர் அவ் வியல்புகளைப் பின்வருமாறு எடுத்துக் காட்டுகின்றார் :

கற்பு, காமம், ஒழுக்கம, பொறை, நிறை, விருந்து புறந்தருதல், சுற்றம் ஓம்பல் முதலியன மனைவியின் மாண்புகள் என்கின்றார்.

கற்பென்பது, கணவனுக்குந் தனக்கும் வேற்றுமை கருதாது ஒருயிரெனக் கலந்து ஒழுகும் அணுக்கம்.

காமம என்பது, அன்பு மேலுமேலும் வளர்ந்தோங்குதற்குரிய முறைமையிற் சாயலொடு ஒழுகும் இணக்கம்.

ஒழுக்கம் என்பது இங்கே கொல்லாமை பொய்யாமை நடுநிலைமை, நன்றியுணர்வு முதலிய நன்னடத்தை. அதனாலேயே இவ் வொழுக்கம இங்கே நற்பால் ஒழுக்கம் எனப் பட்டது.

பொறை என்பது, குடும்பத்தில் வரும் இடையூறுகளையும், மக்கள் உறவினர் முதலியோர் அறியாமைகளையும், அடுக்கித் தொடரும் இல்லறப் பணிகளையும்

பொறுத்து ஒழுகும் பொறுமை. மிக மென்றன்மையுடையோர்க்கே இப் பொறுமை கைகூடி வருதலின், இங்கே அது 'மெல்லியற் பொறை' எனப்பட்டது.

நிறை என்பது, புறத்திற் புலப்படக்கூடாத காலங்களில் அகத்துணர்வுகளைப் புலப்படவொட்டாது நிறுத்துந் திறம். புலப்படுமாயின் அது தீமையிற் படுமாதலின், இது மாதர்க்கு மிக இன்றியமையாததொரு பண்பாகும்.

விருந்து புறந்தருதல் என்பது, புதியராய் வருவார்க்கு உணவு முதலிய வசதிகள் அளித்து அவரது நலங் காத்தல். இயன்ற வகைகளிலெல்லாம் இது திறமையோடு செய்யப் பெறுதல் வேண்டும். அதனால், 'வல்லிதின் விருந்து புறந்தருதலும்' என்று ஆசிரியர் இதனை விளக்கியிருக்கின்றார்.

சுற்றம் ஓம்புதல் என்பது, உறவினர், நண்பர், அலுவல் செய்வோர், உதவியாயிருக்கும் யானை குதிரை மாடு கன்று முதலிய சிற்றுயிர்கள் எனத் தம்மைச் சூழ்ந்திருப்போரை ஆதரவோடு காத்தல்

இனி அடிசில் தொழிலின் திறமை, இன்றியமையாத பிற சிறு சிறு கைத்தொழில்களின் திறமை முதலியவற்றைக் கருதிப் 'பிறவும் அன்ன' என்று ஆசிரியர் நூற்பாவிற் குறித்திருக்கின்றார்.

தொல்காப்பியம் என்பது தமிழ் இலக்கண நூல். தமிழ் நாட்டில், இல்லற மாதர் நடந்து காட்டிய இலக்கியமான நடத்தைகளிலிருந்தே ஆசிரியர் இக் கருத்துக்களை எடுத்து இலக்கணமாகச் செய்திருக்கின்றார். இப்படி நினைக்கும்போது, தமிழக மாதரின் மாட்சிமையான பண்புகள் நமக்கு எவ்வளவு விளக்கமாகப் புலனாகின்றன. 'மங்கலம் என்ப மனைமாட்சி' என்று அருளிச்செய்த திருவள்ளுவர் வாய்க்குச் சர்க்கரைதான் வழங்க வேண்டும்.

**குறிப்புரை : கற்பு - ஆழ்ந்துருகி இணங்கும் இணக்கம். காமம் - விரும்பத்தக்க அன்பின் சாயல். நற்பால் - நல் வகை. மெல் இயல் - மென் தன்மையால் உண்டாகும். இயல் - தன்மை. பொறை - பொறுத்தல். நிறை - நிறுத்தல். வல்லிதின் - வல்ல**

வாறு. விருந்து - விருந்தினரை; முன்பின் தெரியாத நிலையில் தம் இல்லம் வருவாரை. புறந்தருதல் - வசதிகள் செய்து காத்தல். ஓம்புதல் - போற்றிப் பாதுகாத்தல். பிறவும் அன்ன - பிறவும் அத்தகைய பண்புகள். கிழவோள் - தலைவியின். மாண்புகள் - மாட்சிமைகள். (கூஉ)

## 10. உரிமை

### பெரியாரைப் பிழையாமை

[சான்றோர், கருத்தாற்றல் நிரம்பியவர். அவர் எண்ணியது எண்ணியாங்கே நிறைவேறும். அவர்க்குப் பிழைசெய்து அவர் உள்ளம் வருந்தினால், அதற்கேற்ற கேடும் உண்டாகும். ஆதலால், அத்தகையோரிடம் அன்புள்ளமே கொண்டு ஒழுக வேண்டும். பண்டைப் புலவர் அத்தகைய கருத்தாற்றல் நிரம்பிய சான்றோராய் விளங்கினர்.]

வென்றி நிலைஇய விழுப்புகழ் ஒன்றி
இருபாற் பெயரிய உருகெழு மூதூர்க்
கோடிபல அடுக்கிய பொருள்நுமக் குதவிய
நீடுநிலை அரையத்துக் கேடும் கேள்இனி ;
நுந்தை தாயம் நிறைவுற எய்திய
ஒலியல் கண்ணிப் புலிகடி மாஅல் !
நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே இயல்தேர் அண்ணல் !

—புறநானூறு, உ0உ : ௬ - கரு.

இளங்கோவேள் என்னும் குறுநிலமன்னன் வேளிர் மரபைச் சேர்ந்தவன். இவனும் கொடையாளிகளுள் ஒருவன். மூதாதையரின் தாயபாகம் நிறைவுற எய்தியவன். ஒருகால், இடையூறு செய்ய வந்த புலியைக் கடிந்து வென்ற பெருமை யுடையவன்.

இவன் முன்னோர், வெற்றி நிலைபெற்ற சிறந்த புகழினைப் பொருந்திச் சிற்றரையம் பேரரையம் என்று இருவகையாற் பெயர் பெற்று நீண்ட காலம் நிலைகொண்டிருந்த

'அரையம்' என்னும் வளமான ஊர்க்கு உரியராயிருந்தனர். அவ்வூர் அவர்களுக்குக் கோடிக்கணக்கான செல்வம் அடைவதற்கு உதவியாயிருந்தது. ஆனால், அத்தகைய சிறந்த ஊரை அவர்கள், பலராலும் புகழப்பட்ட செய்யுட்களைச் செய்யவல்ல 'கழாஅத் தலையார்' என்னும் புலவர் பெருமானைப் பொருள் செய்யாது ஒழுகிய காரணத்தால், அவர் வசையுரைக்கு இலக்காகி இழக்க நேர்ந்தது. அரையம் அழிந்தே போயிற்று

கபிலர் ஒருகால் இருங்கோவேளினிடம் சென்று, பாரி மகளிரை மணம் புரிந்துகொள்ளுமபடி கேட்டுக் கொண்டார் இளங்கோவேள் கபிலர் மொழிக்கு மதிப்புத் தரவில்லை. தமது மொழிக்கு மதிப்புத் தராமை பற்றி அவர் வருந்தவில்லை. பாரெலாம் புகழும் பாரியின் பெருமையைப் பொருள் செய்யாது ஒதுக்கியதே அவர் உள்ளத்தைப் புண்ணாக்கியது. அப்போதுதான் அவர் இச் செய்யுளைச் சடுதியிற் கூறிக் கழாஅத்தலையாரை இகழ்ந்ததன் பயனாக அவன் முன்னோரது அரைய நகர் அழிந்ததையும நினைப்பூட்டி அவனை வெறுத்துச் செல்வாராயினர்.

கபிலர் வெறுப்பு இருங்கோவேளுக்கு என்றும் ஒரு பெருங் கறையாயிற்று.

**குறிப்புரை :** விழு - சிறந்த. ஒன்றி - பொருந்தி. இருபால் - இரு வகையால். பெயரிய - பெயர்பெற்ற. உரு - நன் மதிப்பு. கெழு - பொருந்திய. நீடு நிலை - நீடிய நிலையினையுடைய' அரையத்து - அரையம் என்னும் ஊரின். கேடும் - அழிவும். தாயம் - தாயபாகம். கடி - கொன்ற. மால் - பெருமையோனே! நுமருள் - நும் முன்னோருள். 'நும்போல்' என்றது, இருங்கோவேள் இப்போது பொருள் செய்யா தொழுகுதலையும் உட்கொண்டது. 'கழாஅத்தலை' என்றது, புலவர் பெயர். இயல் - இயற்றப்பட்ட; அண்ணல் - மன்னனே! (கஅ)

## பயன் கருதாத செயல்

[அன்புக்கு அடையாளம் இப் பயன் கருதாத செயலேயாம். அரிய இப் பண்பை வளர்த்துக்கொள்ளுதற்கு உலகத்தில் நிரம்ப

வாய்ப்பிருக்கின்றது. அதுவும், கல்வி அறிவு ஒழுக்கங்களுடைய தக்கோரிடம், பயன் கருதாத செயல்களைப் புரிந்து மெய்யன்பை வளர்த்துக்கொள்ளுதல் மிகவும் உயர்ந்தது.]

வாயார நின் இசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
இவண்வந்த பெருநசையேம் ;
எமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென
அனைத்துரைத்தனன் யானாக ;
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசில் ; அல்கலும்
தண்புனல் வாயில் துறையூர் முன்துறை
நுண்பல மணலினும் ஏத்தி
உண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

—புறநானூறு, 136.

துறையூர் ஓடை கிழார் என்பவர் கடைச்சங்க காலத்தில் விளங்கிய புலவருள் ஒருவர். அவருக்கு என்ன காரணத்தினால் பெயர் இங்ஙனம் அமைந்ததென்று அறிய விருப்பம் மிகுதியாகத்தான் உண்டாகின்றது. பெயர் என்ன காரணத்தினால் அமைந்ததாயினும் அவர் பெயருக்கும் இச் செய்யுளில் வருகின்ற ஒரு கருத்துக்கும் தொடர்பு ஒன்று இருக்கின்றது.

புலவர் ஒருநாள் பரிசில் விரும்பி ஆய் அண்டிரனிடம் சென்றார். ''வாயார நின் புகழை விரும்பிச் சொல்லிக் கொண்டு ஞாயிறு சுட்டுச் சூடு ஏற்றிய பாலைநிலத்தில் நடந்து இங்கே உன்னிடம் வந்த மிக்க வேட்கையேம் ; எம்மைப்போன்ற வறியோர்க்கு ஈவோரே உண்மையிற் பிறர்க்கு உதவி செய்வோராவர் ; எம்மைப்போலும் வறியோரல்லாத ஏனையோர்க்கு ஈவோர் உண்மையில் தம் பயன் கருதி ஈவோரேயாதலின் அவரெல்லாந் தமக்கே

ஈந்துகொள்வோ ராவர் என்று இங்ஙனம் சொல்லிக் கொள்ள என் உள்ளம் விரும்புகின்றதேனும், நினக்குப் பொருந்தியதை நீ எண்ணிப் பார்த்து ஏதேனும் பரிசில் கொடுத்து எம்மை அனுப்புவாயாக; நீ தந்தது எதுவாயினும் எமக்கு அது வளமாகவே இருக்கும். அதனைக் கொண்டுபோய் எமது துறையூரின்கண் வைத்துக்கொண்டு, அங்கே குளிர்ந்த நீர் ஓடுகின்ற நீரோடையின் துறை முன்னே இருக்கும் நுண்ணிய மணலினும் பலவாக வாழ்க வென நின்னை நாடோறும் ஏத்திக்கொண்டு, 'பெரும! யாம் உண்பேம்'' என்று சொன்னார்.

ஓடையைப் பற்றி இவர் பேச்சில் வருகின்றது. ஓடை கிழார் என்று இவர்க்குப் பெயர் அமைவதில் என்ன தடை யிருக்கின்றது?

சோழநாட்டுத் துறையூரிலிருந்து பாண்டிநாட்டின் தென் கோடியாகிய தான் இருக்கும் பொதியமலைக்குப் புலவர் வந்தாரே என்னும் இரக்கம வேறே ஆய் அண்டிரனை உருக்கங்கொள்ளச் செய்தது பரிசில் அவருக்குத் தக்கபடி கிடைக்காமலிருக்குமா? புலவர்தாம துறையூர் வாய்த் தலையின் துறை மணலை நினைக்காமலிருப்பாரா?

வறியோர்க்கு ஒன்று ஈவதே ஈகை; பிறர்க்கு ஈவது தமக்கே ஈவதுபோலாம் என இதன்கண் வந்திருக்குங் கருத்து அறிந்துகொள்ளுதற்குரியது

**குறிப்புரை:** நம்பி - விரும்பி. சுடர் - சூரியன். ஏறி - வருந்தி நடந்து. தமக்கு ஈப - தமக்கு ஈபவராவார். அனைத்து உரைத்தனன் யானாக - யான் அவ்வாறு சொல்லிக்கொண்டேனாக; யான் அவ்வாறு சொல்லிக்கொள்ளும் உள்ளமுடையேனாக என்பது கருத்து. அனைத்து - அவ்வாறு. விடுமதி - விடை தந்து அனுப்புவாய். அல்கலும் - நாடோறும். வாயில் - வாய்க் கால்; நீரோடை என்றபடி. 'வாய்க்காலையுடைய துறையூரின் கண் துறைமுன் உள்ள மணலைவிடப் பலவாக வாழ்க என ஏத்தி' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். மணலினும் ஏத்தி - மணலினும் பல நாட்கள் வாழ்க வென ஏத்தி. (கச)

## ஒரு படைத்தலைவன் இயற்கை

[பிட்டங் கொற்றன் என்னும் சேரவேந்தனின் படைத்தலைவனது இயற்கை இச் செய்யுளில் எடுத்துக் காட்டப்படுகின்றது. படைத்தலைவன் உள்ளம் அருள் கனிந்து விளங்குகின்றது. அவன் இரக்கமும் வண்மையும் உள்ளம் உருகத் தக்கனவாய் இருக்கின்றன. அவனைத் தமிழகம் மறப்பரிது.]

இன்று செலினுந் தருமே; சிறுவரை
நின்று செலினுந் தருமே; பின்னும்
முன்னே தந்தனென் என்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி [போன்;
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கலம் நிறைப்
தான்வேண்டி யாங்குத் தன்இறை உவப்ப,
அருந்தொழில் முடியரோ; திருந்துவேற் கொற்
[றன்;
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்,
களமலி நெல்லின் குப்பை வேண்டினும்,
அருங்கலங் களிற்றொடு வேண்டினும், பெருந்
[தகை
பிறர்க்கும் அன்ன அறத்தகை யன்னே;
அன்ன னாகலின், எந்தை யுள்ளடி
முள்ளும் நோவ உறாற்க தில்ல;
ஈவோர் அரியஇவ் வுலகத்து
வாழ்வோர் வாழஅவன் தாள்வா ழியவே.

—புறநானூறு, கஎக.

காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார், பிட்டங்கொற்றன் என்பானிடம் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து இச் செய்யுளைப் பேரன்புடன் இயற்றியிருக்கின்றார். பிட்டங்கொற்றனது இயல்பு அப் புலவர் பெருமான் உள்ளத்தை அவ்வளவு கவர்ந்திருக்கின்றது.

பிட்டங்கொற்றன் காலில் ஒரு முள் தைப்பது கூடக் கூடாது என்பது அவர் கருத்தாயிருக்கின்றது. உலகத்தில் வாழ்வதற்குரியோர் வாழவேண்டுமானால், அதற்குப் பிட்டங்கொற்றன் தாள்கள் நீடு வாழவேண்டும் என்று அவர் வேண்டுகின்றார்.

ஈவோர் அரிய இவ்வுலகத்து அவன் தாள் வாழிய என்று அவர் வேண்டுவது மிக்க உருக்கமாயிருக்கின்றது.

பிட்டங்கொற்றன் சேரவேந்தனின் படைத்தலைவன். ஆயினும், மிக்க செல்வாக்குடையனாய் நாட்டின் உள்ளத்தை இவ்வளவு கவர்ந்திருக்கின்றான். காரணம், அவன் உள்ளம் அருள் பழுத்துக் கனிந்து அனைவர்க்கும் உதவியாய் விளங்கியிருக்கின்றது. வள்ளன்மை ஒன்றிற்கே உலகம் தன் உள்ளத்தை அள்ளிக் கொடுத்து அவ்வளவு வயமாகின்றது.

காரிக் கண்ணனார் அவன் இயல்பைப் பின்வருமாறு புலப்படுத்தித் தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றார்:

''இன்று சென்றாலும வழங்குவன், சிறிதுகாலம கழித்துச் சென்றாலும் வழங்குவன்; அதன் பின்னும் வழங்குவன்; முன்பு வழங்கினேனே என்னான் நெருங்கி நாடோறுஞ் சென்றாலும் பொய்யாமல் வழஙகுவான். யாம் விரும்பினபடியே வழஙகுவான் பல இனங்களாகிய ஏறுகளை அவை இருக்குந் தொழுவோடு விரும்பினாலும், களத்தில் நிறைநதிருக்கும் நெற் குவியலை விரும்பினாலும், பெறற்கரிய அணிகலன்களை விரும்பினாலும, யானைகளை விரும்பினாலும் அப் பெருந்தகை உடனே வழங்குவன்; எமக்குமட்டும அன்று; பிறர்க்கும் அங்ஙனமே வழங்கும அறத் தகையன்.''

பிட்டங்கொற்றனது ஈகையியல்பை ஆசிரியர், உள்ளம் அள்ள அள்ள எவ்வளவு அழகாக விளக்கியிருக்கின்றார். இப்படியுமா ஓர் ஈகையாளன் இத் தமிழகத்தில் விளங்கினான் என்று உள்ளம் எவ்வளவு விம்மிதம் எய்துகின்றது. காரிக் கண்ணனார், இவ் வியல்பினை விளக்கும்போதே,

இடையில் தம் உள்ளங் குளிர, "திருந்திய வேற்படையை யுடைய கொற்றன், தன் அரசன் அகமகிழும்படி அரும் பெருஞ் செயல்கள் முடித்து விளங்குக" என அவனுக்கு ஒரு நலவுரையினையும் வழங்கி அவன் நலத்தை வேண்டி யிருக்கின்றார். தம்மை யறியாமலே இது, அவர் திரு வுள்ளத்திலிருந்து எழுந்து விரவியிருக்கின்றது.

படைத்தலைவராய் இருப்போர் உள்ளம் இவ்வளவு அருள் கனிந்திருப்பது ஓர் வியப்பன்றோ!

குறிப்புரை: செலினும் - சென்றாலும். தரும் - தருவான். சிறு வரை - சிறிது கால அளவு. நின்று - பொறுத்து; கழித்து. துன்னி - நெருங்கி. வைகலும் - நாடோறும். பொய்யலனாகி - பொய்யானாய். வேண்டியாங்கு - விரும்பியவாறே. வறு கலம் - வறிய பாண்டத்தை; வெறும் பாண்டத்தை. நிறைப்போன் - தனது கொடையினால் நிறைப்பவன். தன் இறை - தன் அரசன். முடியர் - முடிப்பானாக; நிறைவேற்றி மகிழ்வானாக! இனம் மலி கதம் சே - பலவகையான இனங்கள் மிக்க சினக் குறிப்புப் பொருந்திய ஏறுகளை. களனொடு - தொழுவோடு. கலம் - அணி கலன்கள். அன்ன - அத்தகைய. அறத்தகையன்னே - அறத் தகையனே. அன்னனாகலின் - அத்தன்மை யுடையோனாதலின். எந்தை - எம்பெருமானாகிய பிட்டங்கொற்றனது. உள்ளடி - உள்ளங் காலில். முள்ளும் நோவ உறாற்க - முள் கூட நோவும் படி தைக்காதொழிக. உறாற்க - உறாதொழிக தில், அவ விழை வினைக் குறித்தது. (௬௫)

## பற்றற்ற வாழ்க்கை

[உலகமும் தவமும் சீர்தூக்கினால் தவத்துக்கு உலகம் கடுகளவும் ஒவ்வாது. தவவொழுக்கம் என்பது, பற்றற்ற வாழ்க்கை. சான்றோர் அதனால் பற்று விட்டுத் தவந் தாங்கினர். அதனால் அவர் செலவமில்லாத வறியர் என்பது கருத்தன்று; அவ் வாறு பற்று விட்டோரைத் திருமகள் விடாள்.]

பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்
ஒருபகல் எழுவர் எய்தி யற்றே,
வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
ஐயவி யனைத்தும் ஆற்றா தாகலின்,

கைவிட் டனரே காதலர் ; அதனால்,
விட்டோரை விடாஅள் திருவே ;
விடாஅ தோர்இவள் விடப்பட் டோரே.

—புறநானூறு, ௩௫௮.

பெரியோர் வழிவழியாகக் கூறிவரும் மொழிகளில் உண்மை இல்லாமல் இல்லை. 'செல்வத்தில் பற்று விட்டவரையே செல்வம் தேடிச் செல்கின்றது. பற்று உடையவர்களை விட்டுப் பிரிகின்றது' என்பது இன்று நேற்றுத் தோன்றிய கொள்கையாக இல்லை. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதான இச் செய்யுளின் இறுதியடிகளிலும் அக் கருத்து வந்திருக்கின்றது.

பண்டங்களிற் பற்றற்ற ஒழுக்கம், அவற்றை நன்கு பயன் படுத்த உதவும். பற்றற்ற பெரியோர்களுக்குத் தான் பொருள்களைத் திறனறிந்து பயன்படுத்தும் நேர்மை தெரியும்.

ஞாயிறு சூழ்ந்த இம் மாநிலம் பயன் கெழுமியது தான் ; ஆனால், ஒரு பகலில் எழுவர் தலைவராக எய்துதற்குரிய நிலையாமை அமைந்தது. அவ்வளவு விரைவாகக் கைமாறிச் செல்வது இவ்வுலகத்தின் அதிகாரம். செல்வங்கள் அவரவர் கையில் உள்ள அம் மிகச் சிறிய நேரத்திற்குள், அவற்றை நல்ல துறைகளிற் பயன்படுத்திக்கொள்ளுந் திறமையைப் பெற்றிருக்க வேண்டுமன்றோ ! அந்தத் திறமை பற்றற்று ஒழுகுந் தவவொழுக்கத்தினாலேயே மக்கட்கு உண்டாகின்றது.

ஆதலால், நிலையில்லாத இவ் வுலகத்தையும், அதனைத் தக்கபடி பயன்படுத்தவல்ல பற்றற்ற நினைவாகிய தவத்தையும் ஒப்பிட்டுச் சீர்தூக்கினால் தவத்துக்கு இவ்வுலகம் சிறு கடுகளவும் ஒவ்வாததாயிருக்கின்றது. அதனாலேதான், உலகிய லொழுக்கத்தில் அன்பு வைத்தொழுகுவோரிற் சிலர், உலகப் பற்றை விட்டுத் தவந் தாங்கினர். காதலர் இருவர் தமக்குள் மட்டும் நேசித்துக்கொள்ளுதலை விட்டு

உலகமெல்லாம் நேசிக்கத் தொடங்கினர் என்பது அதன் கருத்து இதனால், செல்வத்தை இன்னும் ஏராளமாகப் பயன்படுத்துந் தகுதியை அவர் அடைகின்றனர் என்பது இச் செய்யுளின் இறுதி வரிகளாற் புலப்படுகின்றது.

குறிப்புரை : பருதி - ஞாயிறு. பயம் - பயன். எய்தியற்று - தலைமை எய்தினாற்போன்ற அத்தனை நிலையாமையுடையது. வையமும் - உலகத்தையும். தூக்கின் - சீர்தூக்கின். ஐயவி - வெண் சிறு கடுகு ; ஐயவி யனைத்தும் - வெண் சிறு கடுகளவும். ஆற்றாதாகலின் - வையகம் நிறை ஒவ்வாதாதலால். கைவிட்டனர் - அவ் வையத்திற் பற்று விட்டனர். காதலர் - அவ் வையத்திற் காதலாயிருந்தோர். விட்டோரை - அங்ஙனம் பற்று விட்டோரை. திரு - திருமகள். விடாதோர் - பற்று விடாதவர். இவள் - இவளால். (கூகூ)

## கால வியல்பு

[காலத்தின் இயல்பு உள்ளத்தைத் திரிவு செய்யும். உள்ளத்தில் உணர்வு மாறுகினால், அவ் வுணர்வுக்கேற்பக் காலவியல்பு திரிந்து தோன்றுதலும் உண்டு. உலகம் இவ் விருமுறைகளிலும் இயங்குகின்றது. மக்கள் காலவியல்பிற் படிதல் பொதுவியல்பு. காலம், உள்ளவியல்பிற் படிதல் சிறந்தோரது சிறப்பியல்பு.]

சுடர்செல் வானம் சேப்பப் படர்கூர்ந்து
எல்லறு பொழுதின் முல்லை மலரும்
மாலை என்மனார் மயங்கி யோரே ;
குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்
பெரும்புலர் விடியலும் மாலை ;
பகலும் மாலை துணையி லோர்க்கே.

—குறுந்தொகை, உ௩௪.

காலத்தின் இயல்புக்கும் உள்ளத்தின் நிகழ்ச்சிகட்கும் இயைபு உண்டு. பொதுவாக, பிரிந்திருக்குங் காதலர்க்கு மாலைக்காலம் மிக்க வருத்தத்தைத் தரும். இரவு நேரம், ஒடுங்கியிருக்குங் காலம். அதன் தொடக்கமே மாலைக்காலம் என்பது. அப்போது துணையை விரும்புவது

உயிர்கட்கு இயல்பு. மேலும், மாலை நேரம், இனிதான பொழுது. முல்லை முதலிய மணங் கமழும மலர்கள் மலர்ந்து, மணமும் அழகும் பரப்புகின்ற நேரம் அது.

காலத்தில் இவ் வியல்புகள் பொதுவாக மக்கள் உள்ளத்தைத் தாக்காமல் இராது ஆதலால், காலவியல்பிற் கேற்ப உள்ளம் திரிவுகொள்ளுதல் இயற்கை. இனி, உள்ளத்தின் இயல்பிற்கேற்பக் காலவியல்புகள மாறுபட்டுத் தோன்றுதலும் உண்டு. காலத்தின் ஆற்றல் உள்ளத்தின் உணர்வாற்றலைவிட மிகுந்திருந்தால், காலவியல்பிற்கேற்ப உள்ளவியல்பு திரியும; உள்ளத்தின் உணர்வாற்றல் காலத்தின் ஆற்றலைவிட மிகுந்திருநதால், உள்ள வியல்பிற்கேற்பக் காலவியல்பு தோன்றும் துணை நீங்கிப் பிரிநதிருக்குங் காதலரின் வருத்தம் பொதுவான நிலையிலிருந்தால், மாலைக்காலம் அவரை வருத்தும் ஆற்றல் பெறும் வருத்தம் மிகுதியாக ஓங்கியிருந்தால், விடியற்காலம் பகற்காலமெல்லாங்கூட அவர்கட்கு மாலைக்காலமாகத் தோன்றும்.

அங்ஙனம் வருத்தம் வீறிய தலைவியின் சொல்லே இச் செய்யுள். தோழியை நோக்கிச் சொல்லுகின்றாள்:

"மாலைக் காலத்தை மட்டும் மாலை என்பது அறிவு மயங்கினோர் செயல். துணைபிரிந்த மகளிர்க்கு, விடியலும் மாலைதான்; பகலும் மாலைதான்" என்பது அவள் சொல். "எனக்கு எந் நேரமும் மாலைக்காலம் போலவே மிக்க துன்பந் தருகின்றது" என்று சொல்லுங் கருத்தே இங்ஙனங் கூறப்பட்டது. தலைவன் பெருமையும் அவனைப் பிரிந்திருத்தலின் அருமையும் அவளுக்கன்றோ தெரியும்!

**குறிப்புரை:** சுடர் செல் வானம் சேப்ப - ஞாயிறு மறைந்து சென்ற அந்தி வானஞ் செந்நிறத்தையடைய. படர் கூர்ந்து எல் அறு பொழுதின் - துன்ப நினைவு மிகுந்து ஒளி மங்கிய நேரத்திலேதான். முல்லை மலரும் மாலை என்மனோர் மயங்கினோர் - முல்லைமலர் மலரும் மாலைக் காலம் என்று கூறுவர் அறிவு மயங்கினோர்; வேண்டுமானால், அப்படி கூறுவது சிலர்க்குத் தான் பொருந்தும்; துணை இலோர்க்குப் பொருந்தாது என்பது கருத்து. துணை இலோர்க்கு - கணவனாகிய துணையைப் பிரிந்த

மகளிர்க்கு. குடுமிக் கோழி - உச்சிக்கொண்டையுடைய கோழி; என்றது, சேவல் என்னும் பொருட்டு. நெடு நகர் - பெரிய நகரத்தில். இயம்பும் - கூவுகின்ற. பெரு - பெரிய. புலர் - இராப் பொழுது புலர்தலையுடைய, பெரிய புலர்தலையுடைய என்றபடி. ()

## பேரின்ப நாட்கள்

[வாழ்க்கையில் இன்ப நாட்கள் உண்டாக வேண்டும். இன்ப நாட்கள் என்பன, மக்கட்கு அடிமையாயிருத்தல் ஒழிந்து இறைபணி செய்யும் நாட்களாகும். இறைவன் இணக்க மொன்றினாலேயே அது கைகூடும். அப்போது எங்குந் தெய்வ விழவும் விருந்தயர்வுமாயிருக்கும்; ஆடவர் மகளிர் இருவரும் இந் நிலைகளில் இயைந்து வாழ்வுடையராய் அருட்பணி நிகழ்த்துதல் இயல்பு.]

கீழோர்,வயல்பரக்கும் வார்வெள்ளருவி பரந்தா [றைதரோ

மேலோர், இயங்குதலால் வீழ்மணி நீலஞ் செறு [வுழகுமரோ

தெய்வ விழவும் திருந்து விருந்தயர்வும்

அவ்வெள் ளருவி அணிபரங் குன்றிற்கும்

தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையைக்கும்

கொய்யுளை மான்தேர்க் கொடித்தேரான் [கூடற்கும்

கையூழ் தடுமாற்றம் நன்று;

எனவாங்கு,

மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்

பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!

பணிஒரீஇ நின்புகழ் ஏத்தி

அணிநெடுங் குன்றம் பாடுதும் தொழுதும்;

அவை, யாமும்எம் சுற்றமும் பரவுதும்,

ஏம வைகல் பெறுகயாம் எனவே.

—பரிபாடல், கள: ௬0 - ௬௩.

மதுரைமா நகரம் தன்னளவிலேயே பல சிறப்புக்களால் மிக்க இன்பம் பயப்பது. அதோடு, அந் நகரத்தின்

ஒரு பக்கம் செவ்வேள் உறையும் பரங்குன்று என்னும் மலையும், மற்றொரு பக்கம் வளம் பொருந்திய வையை என்னும் ஆறும் சேர்ந்தால் மதுரையின் சிறப்புக்குச் சொல்ல வேண்டுமோ!

திருப்பரங்குன்று அருவி அமைந்தது. அது கீழே ஒழுகிக் கீழிருக்கும் உழவர்களின் வயலிற் பரவும். அப்போது மலையின்மேல் அந்த அருவியில் விளையாடும் மகளிரின் அணிகளிலிருந்து விழுந்த நீல மணிகளும் நீரோடு வயலில் விழுந்து உழு நிலத்தைச் சிதைக்கும். மலையும் அதன் கீழ்நிலமும் இவ்வளவு வளம் மிக்கவை. மதுரையிலும் வையையிலும் பரங்குன்றிலும் எந்நேரமும் மாறி மாறித் தெய்வ விழவும் திருந்திய விருந்தோம்பலும் நடைபெற்றபடியே இருக்கும்.

மயிலையும், கோழிக்கொடியையும், யானைமீது ஏறிச் செய்யும் போரையும் உடையவன் முருகன். அவனை 'இறைவ' என்று இச் செய்யுள் விளித்து ஒன்று கூறுகின்றது. "இறைவ! மக்களுக்குப் பணிந்த மொழி கூறுதலை நீக்கி நின் புகழையே ஏத்தி, நினது அழகிய பெரிய பரங்குன்றத்தைப் பாடுதும் தொழுதும; பிறவித் துன்பம் சாராத பேரின்ப நாட்களைப் பெறுவோமாக என்று யாமும் எம் சுற்றமும் வேண்டுதும்" என்பது.

நல்ல திருப்பதிகளில் வாழ்வோர்க்கு, உயர்ந்த எண்ணங்களை எண்ணி மாட்சிமைப்படுதற்கு எவ்வளவு வாய்ப்பிருக்கின்றது!

**குறிப்புரை:** கீழோர் - கீழோராகிய உழவரது. வார் - நீண்ட. பரந்து ஆறுது - மலையிடமெல்லாம் பரந்து ஒழுகி அதில் அமையாமல்; அமையாமல் கீழோரது வயல் பரக்கும் என்றபடி. 'ஆறுது அரோ' என்பதில் அரோ, அசைச்சொல்; அடுத்த வரியிலும 'செறுஉழக்கும் அரோ' என்பதில் அரோ, அசைசசொல். மேலோர - மலைமேலே அருவியில் நீராடும் மகளிர். இயங்குதலால் - நீரில் விளையாடுதலால். நீலம் - நீலமணிகள். செறு - வயலை. உழக்கும - சிதைக்கும். தொய்யா விழுசீர் - கெடாத சிறந்த புகழையுடைய. கொய் உளை மான் தேர் -

கொய்து விடப்பட்ட கழுத்து மயிரினையுடைய குதிரைகள் பூட்டப்பட்ட தேர்கள் சூழ்ந்த. உளை - கழுத்து மயிர். மான் - குதிரை. இவை படைவீரரின் தேர்கள். கொடித் தேரான் - கொடி யசையுந் தேரையுடைய பாண்டியனது. கை ஊழ் தடுமாற்றம் - முறையே செயல் மாறி நடத்தல். நன்று - மங்கலமாகத் தோற்றுகின்றது கை - செயல். ஊழ் - முறைமை. தடுமாற்றம் - மாறி நிகழ்தல். விழாவும் விருந்தயர்வும் பரங்குன்றிலும் வையையிலும் மதுரையிலும் மாறிமாறி நிகழ்தலை இங்ஙனங் கூறினார். குன்றிற்கும் - குன்றிலும் என்றபடி. தெய்வ விழா பரங்குன்றிலும் விருந்தோம்பல் வையையிலும் மதுரையிலும் நிகழ என்பது கருத்து. வையையில் விருந்து என்பது கணவரோடு கூடி நீராடுதல். மதுரையில் விருந்து என்பது உணவு படைத்தல். எனவாங்கு - என அவை இங்ஙனமாக. மணி நிற மஞ்ஞை - நீல மணிபோன்ற நிறமுடைய மயிலையும். ஓங்கிய - உயர்ந்த. புள் - கோழியாகிய பறவை. பிணி முகம் - யானை. ஊர்ந்த - ஊர்ந்து செய்த. வெல் போர் - வெற்றி கூடும் போரையும் உடைய. பணி ஒரீஇ - மக்கட்குப் பணி மொழி கூறுதல் நீக்கி. பரவுதும் - வேண்டிக்கொள்கின்றோம். ஏம வைகல் - பேரின்ப நாட்களை. 'பெறுக யாம் என யாமும் எம் சுற்றமும் பரவுதும்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும்.

## திருமணச் சடங்கு

[மக்கட்கு அவரவர் வாழ்நாளில் திருமணச் சடங்காகிய இவ்வொரு பெருஞ் சடங்குதான் மிகவும் முதன்மையானது சிறந்த கருத்தோடு கூடிய தக்க மணச் சடங்குகள், இனிய வாழ்த்துக்களோடு நடைபெறுதல் இன்றியமையாதது. ஏனைய சிறப்புக்களும் முற்காலத்தவர் கவனத்தில் இருந்து வந்தன.]

உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென

உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரில் கூடிய உடன்புணர் கங்குல்.

—அகநானூறு, அசு : க - உ0.

வாழ்க்கையிற் சில காலமே இன்பமுள்ள நாட்களாக அமைகின்றன அவை அந் நாட்களிலன்றி மற்றக் காலங்களிலும் நினைக்குந்தோறும் இன்பந் தருதலைக் காண்கின்றோம் திருமணநாள் வாழ்க்கையில் ஒரு தனிச் சிறப்புடையதாக அங்ஙனம் விளங்குகின்றது.

தமிழ் நாட்டிற் பண்டைக்காலத்தில் திருமணநாள் எவ்வாறு விளங்கியதென்னுங் குறிப்பு இச் செய்யுளில் வருகின்றது.

உணவுக்கு ஒன்றுங் குறைவில்லை. திருமண வீட்டிற் சோறு பெருங் குவியலாக இருக்கும். உழுந்து பெய்து கொழுமையாகச் செய்த குழையலும் இருக்கும்.

திருமணப் பந்தரோ, கண்ணுக்குங் கருத்துக்கும் இன்பந் தருவதாய், உடம்பு நலத்திற்கும் ஏற்றதாய் அழகாய் இனிதாய் அமைக்கப்பெறும். பந்தர் நெடுக வரிசையான கால்கள்; மேல் வரிசையில் மலர் மாலைகளும் மணி

மாலைகளும் தொங்க வைத்திருக்கும். தரையில் மணல் நிறைத்திருக்கும். பந்தர் குளிர்ச்சியாக இருப்பதற்கேற்ற ஏற்பாடுகளும் கவனிக்கப்பட்டிருக்கும். எங்கும் அழகிய விளக்குகள் !

திருமண நாளின் விடியற்காலம் மிக்க கிளர்ச்சியாக இருக்கும்; வாழ்க்கையிலேயே அந்த நாள், இன்பத்தின் இணையற்ற நன்னாளாகக் கருதப்பட்டது.

திருமணச் சடங்குகளோ நுட்பமான பெரும்பொருள் அமைந்தனவாய் நிகழ்ந்தன. சடங்குகள் விடியற்காலையிலேயே தொடங்கப்பெறும். காமக்குறிப்புக் கடந்த வயது முதிர்ந்த மாதர் குடங்களில் நீர் முகந்து வந்து முறையே கொடுக்க அதைப் பிள்ளைப்பேறுடைய பெண்கள் நால்வர் கூடி மணமகளுக்கு மங்கல முழுக்குச் செய்விப்பர். அப்போது அவர்கள், “கற்பு வழுவாமல் நல்ல பல பேறுகளை உண்டாக்கிக்கொண்டு, கணவனை விரும்பிக் காக்கும் விருப்பமுடைய மனைவியாகுக” என அழகிய வாழ்த்துரை வழங்கிக்கொண்டே, நெல்லும் மலரும் பெய்த நீர் சொரிந்து நீராட்டுவது மிக்க கவர்ச்சியாகவும பயன் நிறைந்ததாகவும் இருக்கும். மணமகளின் கூந்தலில் அந் நெல்லும் மலரும் விளங்க, பின்பு திருமணம நிகழும். திருமணச் சடங்குகள் நிறைவேறிய பின், அன்று மாலை நேரமெல்லாம் மகிழ்சசி நிறைந்து இல்லம் கல்லென்று ஆரவாரமாக இருக்கும். இரவு வந்ததும், வாழ்த்துப் பாடடுக்கள் பாடுவோர் முன் வந்து “பெரிய இல்லக்கிழத்தியாக விளங்குக” என வாழ்த்திசைக்க, அணுக்க உறவினர் மணமகளைக் கணவனோடு இயைதது வழங்க, அம மணமக்கள் இருவரும் இத்தனை மகிழ்ச்சிகளினிடையே ஒரு தனியறையிற் சென்று கூடி அளவளாவி மகிழ்வர். அந்தத் திருமணக் கங்குல், வாழ்க்கையில் இணையற்றதொன் றன்றோ !

குறிப்புரை: தலைப்பெய்த - கலந்த. கொழு களி மிதவை - செழுமை தருங் களியாகிய குழையல்; பச்சரிசியோடு உழுந்து கூட்டிச் செய்யும் ஓர் உணவு வகை. அமலை - குவியல். நிரை - வரிசையாகிய. தரு - கொண்டுவரப்பட்ட. ஞெமிரி - பரப்பி.

தொடரி - தொடர்ந்து தொங்க வைத்து. கனை - செறிந்த. கோள் - தீய கோள்கள். கால் நீங்கிய - தம் இடம் பெயர்ந்து போன. திங்கள் - திங்களிடத்தில். நாள் - உரோகணி என்னும் நாள். மண்டையர் - மண்டை என்னும் ஒருவகைக் கலனையுடையராய். செம் பெண்டிர் - மங்கல மகளிர். பெற்றோன் - கணவனை. பிணையை - விருப்பமுடையை. இரு கதுப்பின் - கரிய கூந்தலில். சும்மையர் - ஒலியினையுடையர்; வாழ்த்தொலியினையுடையர். ஞெரேரென - விரைவாக. (கக)

## எது செல்வம்?

[முயன்று பெறுவது செல்வம்; பொருள் அன்று முயலத்தகுந்தது. அது முன்னை வினைப்பயனால் உண்டாகும். ஈரமுடைமை என்னும் மென்றன்மையே வாழ்க்கையில் முயலத் தகுந்தது. சான்றோர், செல்வம் என்பது இதனையே.]

நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே;
சான்றோர் செல்வம் என்பது, சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம்என் பதுவே.

—நற்றிணை, உ௧0.

முயன்று தேடுதலே செல்வம் அல்லது பேறு எனப்படும்; வாழ்க்கையில் எது செல்வம், எது செல்வமன்று என்பதில் பலர்க்குத் தெளிவிருப்பதில்லை. இந்தப் பாட்டு அதனை நன்றாகத் தெரிவித்து உதவுகின்றது.

உலகத்திற் பலராலும் பெரிய பெயர் சொல்லப்படுதலும், விரைந்த ஊர்திகளில் ஆடம்பரமாக ஊர்தலும், முற்பிறவியில் அவரவரும் செய்த வினைப்பயனால் வருவன; இப் பிறவியில் முயன்று வருவன அல்ல; அவை முயற்சிக்குரியனவும் அல்ல, ஆதலால் அவையல்ல செல்வம என்பவை.

சான்றோர், செல்வம் என்று பாராட்டுவதெல்லாம், தம்மை அடைந்தார்க்கு ஆதரவு நல்கும் ஈரமுடைமையே

யாகும் உலகத்தில் ஒருவர் முயன்று பெறத் தகுந்த பேறு இம் மென்மைச் செல்வமேயல்லது வேறில்லை.

பண்டைக்காலத்துப் பெண் ஒருத்தி இங்ஙனம் ஓர் ஆடவனுக்கு அறிவுரை கூறினாள் என்றால், எவர்க்கும் அது, ஒரு வியப்பாகவே இருக்கும். தமிழ்நாடு அப்போது அவ்வளவு உயர்ந்த நிலையில் நிகழ்ந்திருந்தது.

தன்னையே அடைக்கலமாகக் கருதி வாழ்கின்ற ஒரு மாதின் இன்ப துன்பங்களிற் கருத்து வையாமல் அவள் தலைவன், அரசியலிற் பெரும்பெயர் கூறப் பெறுதலும், விரைந்த ஊர்திகளில் வருதல் போதலுமா யிருந்தான். அதுகண்ட அத் தலைவியின் தோழி இங்ஙனங் கூறினாள். என்ன அழகான கருத்து!

**குறிப்புரை:** நெடிய - உயர்ந்த பட்டப்பெயர். மொழிதலும் - மொழியப் பெறுதலும். கடிய - விரைந்த ஊர்திகள். புன்கண் - துன்பத்திற்கு. அஞ்சும் - அஞ்சி அவரை ஆதரிக்கும். பண்பின் - பண்பட்ட தன்மையையுடைய. மென்கண் - மென்மையியல்பு. மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே - மென்றன்மைச் செல்வமாகிய செல்வம் என்பதே. (௧00)

# செய்யுள் முதற்குறிப்பு அகர வரிசை



---